# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உபயோகிக்கும் பெண்மணியை
## —அவன் விரும்புகிறான் என்பதை அவன் மறைப்பதில்லை

முகத்தைக் கழுவியபின், எப்பொழுதும், அற்புத குணம் வாய்ந்த பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை உபயோகியுங்கள். இது சருமத்தைப் பாதுகாக்கும் இயற்கை எண்ணெய்களின் நஷ்டத்திற்கு ஈடு கட்டி, உங்கள் சருமத்தைப் புதுமையுடனும் மாசற்றதாயும் வைக்கும். பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் சருமத் துவாரங்களில் ஊடுருவிச் சென்று அழுக்கை அகற்றி, உங்கள் சருமத்தை முற்றிலும் சுத்தமாக வைக்கும்.




**இலவச புஸ்தகம்**

அழகுபற்றிய குறிப்புகள் கொண்ட Lovelier with Pond's என்ற எமது புத்தகத்தை வரவழையுங்கள். பி. ஓ. பாக்ஸ் நம்பர் 1612, பம்பாய் 1 என்ற விலாசத்திற்கு எழுதவும்

P.4440(A)

மலர் 16
இதழ் 33

# கல்கி

துன்முகி ௵
பங்குனி 4

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16 } தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { துன்முகி ஆண்டு
இதழ் 33 பங்குனி 4உ

# சுதந்திரம் பெற்ற பொன் நாடு!

அடிமை வாழ்விலிருந்து விடுதலை பெற்ற சுதந்திர நாடுகளின் வரிசையில் சென்ற வாரம் மற்றொரு நாடு சேர்ந்து கொண்டதைக் குறித்து உலக மக்கள் அனைவரும் பெரும் மகிழ்ச்சி அடைவார்கள்.

ஆப்பிரிக்காவில் உள்ள கனா என்ற நாடு பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுதலையடைந்து சுதந்திரம் பெற்றுள்ளது.

சுதந்திரம் பெறுவதற்கு முன் வரையில் அந்த நாட்டுக்கு கோல்டுகோஸ்ட் (Gold Coast) அதாவது பொன் நாடு என்ற பெயர் வழங்கி வந்தது.

நாற்பத்தாறு லட்சம் ஜனத்தொகையுள்ள அந்த நாடு, உண்மையிலேயே உயர்ந்த மாற்றுத் தங்கம் விளையும் பொன் பூமியாக இருப்பதாலேயே அதற்கு அப் பெயர் வழங்கலாயிற்று என்று சரித்திரம் கூறுகிறது.

கனாவில் சுதந்திரம் உதயமாகி யிருப்பதைக் குறித்து மற்றவர்களைக் காட்டிலும் பாரத மக்கள் பன்மடங்கு பேருவகை கொள்வார்கள் என்பது நிச்சயம்.

ஏனெனில் பாரத நாட்டுக்கு அடுத்தபடியாக, காந்தி வழியைப் பின்பற்றி இரத்தம் சிந்தாமல் சுதந்திரம் பெற்ற நாடு கனாதான் என்பதை எண்ணும் போது உடல் சிலிர்க்காதவர்கள் இருக்க முடியாது.

கனா நாட்டு மக்களின் சுதந்திர உணர்ச்சியை நசுக்க பிரிட்டிஷார் பலாத்கார முறைகளையும் பிரித்தாளும் தந்திரத்தையும் கையாண்டார்கள். அவைகளுக்கு அந்த நாட்டு மக்களில் பலர் பலியாக நேர்ந்தது.

எனினும் கனா மக்களின் தலைவரும் சுதந்திர கனாவின் முதலாவது பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டிருப்பவருமான டாக்டர் குவாமி நக்ருமா, தமது இலட்சியத்தை அடையப் பலாத்கார வழியைப் பின்பற்றவில்லை.

ஆப்பிரிக்காவில் காந்திஜி முதன் முதலாகக் காட்டிய சாத்துவீக வழி ஸ்ரீ நக்ருமாவின் மனத்தைக் கவர்ந்து விட்டது.

சாத்வீக முறையில் பாரதநாடு வெற்றி பெற்றுச் சுதந்திர இலட்சியத்தை அடைந்தது. நக்ருமாவின் உறுதியை, அதாவது இரத்தக் களரியின்றிச் சுதந்திரம் பெறவேண்டும் என்ற தீர்மானத்தைப் பலப்படுத்தியது.

அதன் பலனாக, பாரத நாட்டைப்போல் கனாவும் சமுகமாகவே பிரிட்டனிட மிருந்து சுதந்திரம் பெறுவது சாத்தியமாகியது.

சென்ற ஆறும் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு கனாவின் தலைநகரான அக்ராவில் பிரிட்டிஷ் கொடி அகற்றப்பட்டு, கனாவின் கொடி உயர்த்தப்பட்டபோது கனா மக்கள் ஆனந்த நடனத்துடன் ஆரவாரம் செய்ததாகச் செய்திகள் கூறுகின்றன.

சென்ற இருநூறு ஆண்டுகளாக அடிமைச் சேற்றில் ஆழ்ந்திருந்த கனா மக்கள் சுதந்திர வாழ்வு மலர்வதைக் கண்டு மகிழ்ச்சியில் திளைத்ததில் ஆச்சரியம் இல்லை.

ஆப்பிரிக்காவைப் போல் அன்னியர்களின் ஆதிக்கத்துக்கு இரையாகி அல்லலப் பட்ட, இன்றும் அல்லல்பட்டு வரும் கண்டம் வேறில்லை.

மாபெரும் ஆப்பிரிக்கக் கண்டத்தில் உள்ள இரண்டு, மூன்று நாடுகளைத் தவிர, மற்ற நாடுகள் யாவும் பல நூற்றாண்டுகளாக அன்னியர் ஆதிக்க அலங்கோலத்துக்கும் வெறிக் கொடுமைக்கும் இலக்காகி வந்துள்ளன.

இன்றும் ஆப்பிரிக்கக் கண்டத்தில் உள்ள அல்ஜீரியா போன்ற நாடுகளில் உக்ரமான சுதந்திரப் போர் நடந்துகொண்டுதான் இருக்கிறது..

ஆப்பிரிக்காவில் உள்ள நாடுகளில் இன்னும் பதினேழு கோடி மக்கள் சுதந்திரமின்றிக் காலனி ஆட்சியின் கொடுமைக்கு இலக்காகித் தவித்து வருவதாக நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையே கூறுகிறதெனில், அங்குள்ள பயங்கரமான நிலையைக் குறித்து உலக மக்களுக்கு வேறு என்ன சான்று வேண்டும்?

* * *



பிரதம மந்திரி
டாக்டர் குவாமி நக்ருமா

கானா நாட்டின் சுதந்திர விழா சென்ற வாரம் புதுடில்லியில் கொண்டாடப் பட்டபோது பாரதத்தின் பிரதம மந்திரி நேருஜி ஆப்பிரிக்காவின் இன்றையப் பரிதாபமான நிலையை எவருடைய மனமும் உருகும் வண்ணம் கட்டிக் காட்டி யிருக்கிறார்.

"ஆப்பிரிக்காவில் இருள் சூழ்ந்துள்ள பிரதேசங்கள் ஏராளமாக இருக்கின்றன. எனவே இப்போது கானாவில் தோன்றியுள்ள சுதந்திர ஒளி மற்ற இடங்களுக்கும் பரவும் என நம்புகிறேன். பல நூற்றாண்டுகளாக ஆப்பிரிக்காவின் சரித்திரம் சகிக்க முடியாத சோக சரித்திரமாக இருந்து வருகிறது. எனவே, அந்தக் கண்டத்தின் எந்தப் பாகத்தில் இருள் அகன்று ஒளிவீசத் தொடங்கினாலும், அது எல்லோருக்கும் மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுக்கக் கூடிய விஷயமாகும். உலகில் உள்ள எந்த நாடாயினும், அங்கிருந்து அன்னியர் ஆதிக்கம் அறவே ஒழிந்தால்தான், உலக அமைதிக்குக் குந்தகமாக இருக்கும் பெரும் இடையூறு நீங்குவதற்கு வழி உண்டாகும்" என்று நேருஜி கூறியிருக்கிறார்.

நேருஜியின் பொன் மொழிகளிலிருந்து, கானா நாடு பெற்றுள்ள சுதந்திரம், இருள் சூழ்ந்துள்ள ஆப்பிரிக்கா கண்டத்துக்கு ஒளிவீசி வழி காட்டும் தீபமாகத் திகழும் என்பதை அறிந்து கொள்ளலாம். இந்திய ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத், சுதந்திர கானாவின் மக்களுக்கு அனுப்பியுள்ள வாழ்த்துச் செய்தியில், சுதந்திரம் பெற்றுள்ள கானா எதிர்காலத்தில் உலக அமைதிக்கு வழிகாட்டும் ஒளிச்சுடராகத் திகழும் என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே, கானா பெற்றுள்ள சுதந்திரம் கானா மக்களுக்கு மாத்திரமல்ல, உலக மக்களுக்கே நம்பிக்கையையும் தைரியத்தையும் அளிக்கக் கூடிய ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும்.

மீண்டும் திரு காமராஜரே சென்னை ராஜ்யத்தின் முதன் மந்திரியாவார் என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

# ஒரு சத்தியாக்கிரகம்

கர்மவீரர் என்ற இலக்கணத்துக்கு இலக்கியமாக விளங்குபவர் காரைக்குடி திரு சா. கணேசன். தமிழ்நாட்டுப் பெரு மக்கள் காரைக்குடி தேர்தலில் பணம் வெற்றி பெற்று, உண்மை காங்கிரஸ் தோற்றதனால் ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. ஆனால், திரு சா. கணேசனோ தமது கடமையைச் செய்துவிட்ட திருப்தியுடன் தமது வாழ்வின் மற்றொரு முக்கிய பணியாகிய கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் பணியில் இறங்கி விட்டார். வழக்கம் போல் நான்கு நாட்கள் காரைக்குடியில் கம்பன் திருநாள் இம்மாதம் 14-ம் தேதி ஆரம்பமாகி நடைபெறுகிறது.

தேசபக்தர் திரு சா. கணேசன் காரைக்குடித் தொகுதியில் உள்ள வாக்காளர்களின் அன்புக்கு எவ்வளவு தூரம் பாத்திரமாகியிருக்கிறார் என்பது அவருக்குக் கிடைத்திருக்கும் வாக்குகளிலிருந்தே தெரிகிறது. தர்மம் நம் நாட்டில் நசியவில்லை என்பதற்கு அதுவே ஒரு அத்தாட்சி. தர்மத்துக்குத் துணைபுரிந்த வாக்காளர்களுக்கு நன்றி தெரிவித்துத் திரு சா. கணேசன் விடுத்திருக்கும் அறிக்கையை இங்கேவெளியிடுகிறோம்.

“காங்கிரஸ் தீர்மானத்துக்கு விரோதமாக பிரிட்டிஷாரால் வழங்கப்பட்ட பட்டங்களை விடாதவரும், அன்று வரை கதரையே அணியாதவருமான ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களைக் காரைக்குடித் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகராக நியமித்தனர் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியினர். அது காரணமாக எண்ணற்ற தேசபக்தர்களின் மனத்தில் எழுந்த அதிருப்தியே என்னைப் போட்டியிடச் செய்தது.

மொத்தம் பதிவான வாக்குகள் 50107. அதில் ராஜா சர் அவர்களுக்கு 24223 வாக்குகளும், எனக்கு 22365 வாக்குகளும் கிடைத்தன. எஞ்சிய 3519 வாக்குகளை மற்றிரு அபேட்சகர்களும் பெற்றனர்.

ராஜா சர் அவர்களுக்கு இருந்த பணம், வாகனம், ஸ்தாபனங்கள், பணக்காரர்கள் முதலான வசதிகளையும் அவர்கள் கையாண்ட முறைகளையும் பார்க்கும்போது நமக்குக் கிடைத்த வாக்குகளின் தொகை அதிகம்.

இத் தேர்தலில் எத்தனையோ கஷ்ட நஷ்டங்களையும், தொந்தரவுகளையும் பயமுறுத்தல்களையும் பொருட் படுத்தாமல் மிக்க மன உறுதியுடன் பதினாயிரக் கணக்கான சகோதர, சகோதரிகளும், இளைஞர்களும் பெருக்கம் காட்டினர். எதற்கும் மசியாது 22365 பேர்கள் உறுதியுடன் நின்று வாக்களித்தனர்.

இத் தேர்தலை ஒரு சத்தியாக்கிரகமாகவே கருதிப் பாடுபட்டனர் தேசத்தொண்டர்கள்.

எல்லோருக்கும் நான் என்றும் கடமைப் பட்டிருக்கிறேன். அறவழி என்றுமே கரடு முரடானது. இடையில் எத்தனை எத்தனையோ தடைகள். எல்லாவற்றையும் கடந்து செல்லப் பொறுமையும், உறுதியும் வேண்டும். ஆண்டவன் நமக்கு அத்தகைய தகுதியை மேலும் கொடுத்து வளர்க்க வேண்டும்.”

# உத்தமத் தலைவரின் மறைவு

பாரத நாட்டின் புனிதத் தலைவர்களில் ஒருவரும் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு எடுத்துக் கொண்ட முன்னணி வீரர்களில் சிறந்தவருமான ஸ்ரீ பி.ஜி. கேர் காலமானது இந்தியாவுக்குப் பெரிய நஷ்டமாகும். ஸ்ரீ கேர் மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து, தமது உழைப்பினாலும் யோக்கியப் பொறுப்பினாலும், அடக்கத்தினாலும் நல்லொழுக்கத்தினாலும் உயர்ந்த நிலையை அடைந்த உத்தமர். சட்டப் பரீட்சையில் தேறி வக்கீல் தொழிலில் ஈடுபட்ட ஸ்ரீ கேர் 1922-ம் வருஷம் அரசியல் துறையில் பங்கு எடுத்துக் கொள்ள முற்பட்டார். மகாத்மா காந்தியின் தலைமையில் சுதந்திரப் போர் நடந்த அக்காலத்தில் அரசியல்வாழ்வு என்பது கொடிய சிறைவாசம் தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எனவே, 1930-லிருந்து 1945-ம் ஆண்டு வரையில் ஸ்ரீ பி. ஜி. கேர் பெரிதும் சிறைக்கூடத்திலேயே கழிக்க நேர்ந்தது.



ஸ்ரீ பி. ஜி. கேர்

பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின்னர் ஸ்ரீ கேர், பம்பாய் மாகாணப் பிரதமராகவும், பிறகு லண்டனில் இந்திய ஹைகமிஷனராகவும் இருந்து தமது திறமையை நிரூபித்துப் புகழ் பெற்றார். அரசியல் நிர்ணய சபை அங்கத்தினராக இருந்து சுதந்திர இந்தியாவின் அரசியல் சாஸனத்தை உருவாக்குவதில் ஸ்ரீ கேர் பூரண பங்கெடுத்துக் கொண்டார். மொழிக் கமிஷனின் தலைவராக இருந்து ஸ்ரீ கேர் செய்த அரிய தொண்டை யாரும் மறக்க முடியாது. அவரது தொண்டுகளைப் பாராட்டி, பாரத நாட்டின் சிறப்புப் பட்டமான பத்ம விபூஷண் என்ற பட்டத்தை நமது ஜனாதிபதி அவருக்கு அளித்து அவரைக் கௌரவித்தார்.

கடைசியாக, காந்தி நினைவு நிதித் தலைவராக மிகச் சிறந்த முறையில் தொண்டு புரிந்த வண்ணம் புகழுடல் எய்திய ஸ்ரீ கேரின் பெருமை சத்திரத்தில் நிரந்தர இடம் பெறும் என்பதில் சந்தேகமில்லை.

# வம்புச் சாவடி

**கொக்கி**

'ஊர் அபிமானம்' என்பது ஒரு பொல்லாத விஷயம்! சிலரை அது பிடித்துக் கொண்டு விட்டால், அதன் மோகத்திலிருந்து அப்பேர்ப்பட்டவர்களை விடுவிப்பது என்பது யாராலும் முடியாது. தங்களுடைய பெயர்களுக்கு முன்னால், ஊர்ப் பெயரை அவர்கள் மறக்காமல் சேர்த்துக் கொண்டிருப்பார்களே, அவர்களைப் பற்றியே குறிப்பிடுகிறேன்.

"உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டால் மேற்படி ஊரபிமானிகள் 'பரமக்குடி பாலகிருஷ்ணன்' என்றோ, அல்லது 'கோவை குழந்தைச்சாமி' என்றோ, அல்லது 'குடந்தை குருமூர்த்தி' என்றேதான் கூறுவார்கள்!

ரயில் வண்டிகளில் இந்த ஊர் அபிமானத்தை இன்னும் நன்கு பார்க்கலாம். வண்டியில் உட்கார இடமில்லாமல் ஒருவர் பரிதாபமாக நின்று கொண்டிருப்பார். அவரோடு, பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டிருப்பவர்களில் ஒருவர் வாய்த் தவறுதலாகப் பேச்சுக் கொடுத்து, "நீங்கள் எந்த ஊர் போக வேண்டும்?" என்று கேட்பார். நிற்பவர், "மணப்பாறை" என்று கூற வேண்டியதுதான் தாமதம். "மணப்பாறையா?.. நானும்..மணப்பாறைதான்" என்று தமது மகிழ்ச்சியை வெளியிடுவார். "அப்படியா.. ஒரே ஊர்க்காரர்களாகி விட்டோம்!" என்று நிற்பவரும் கூறுவார். சிறிது நேரத்தில் இரு மணப்பாறைக்காரர்களும் உட்கார்ந்தபடியே தங்கள் ஊர் சிறப்புக்களைப் பற்றிப் பேசத் தொடங்குவதைக் காண்போம்.

ஆனால், வளரும் ஜனநாயகத்தில் இந்தக் கொள்கைகள் எல்லாம் எடுபடுமா என்பது சந்தேகம்தான்: 'நாம் எல்லோரும் உலக மக்கள்' என்ற எண்ணம் வளர்வதுதான் ஜனநாயக நியதி. ஆகவே, கிராமாபிமானத்தை விட ஊர் அபிமானம் ஜனநாயக நியதிப்படி ஒரு படி உயர்ந்த கொள்கை எனலாம். ஊர் அபிமானத்தை விட ஜில்லா அபிமானம் இன்னும் சிறந்த கொள்கையாகும். ஜில்லா அபிமானத்தை விட மாகாண அபிமானம் இன்னும் சிறப்புடையதாகும். மாகாண அபிமானத்தை விடப் பிரதேச அபிமானம் இன்னும் உயர்வானது. அதைவிடச் சிறந்தது தேசாபிமானமும், எல்லாவற்றுக்கும் சிகரம் போன்றது சர்வதேசாபிமானமுமாகும். பம்பாய்த் தேர்தல் பொதுக் கூட்டம் ஒன்றில், இந்திய சர்க்கார் ஐ. நா. தூதர் திரு வி. கே. கிருஷ்ணமேனன் பேசும் போது, தாம் "பம்பாயில் பிறந்தவன்தான்!" என்று சொல்லி அதற்கு வேடிக்கையாக ஒரு காரணமும் கூறினாராம். அதாவது, பம்பாய் இந்தியாவில் பிறந்த ராஜ்யமாகையால், இந்தியாவில் பிறந்த தாமும், பம்பாயில் பிறந்ததாகவே கருத வேண்டும் என்று உரைத்தார். ஆனால், சர்வதேசப் புகழ்பெற்ற திரு வி. கே. கி. என் ஜனநாயகக் கணக்குப்படி, இந்தியாவில் பிறந்தவரல்ல, உலகத்தில் பிறந்தவரென்றே கருதப்பட வேண்டும்.

"கர்ம வீரர்கள் வெற்றி தோல்வியைச் சமமாகவே பாவிப்பார்கள்" என்பது கீதையின் வாக்கு. தேர்தலில் ஜயித்தால் பிள்ளையாருக்கு ஆயிரத்தெட்டு தேங்காய் உடைப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டால் மட்டும் போதாது. தோற்றாலும் தேங்காய் உடைக்க வேண்டும்: அதுதான் சரியான பிரார்த்தனையாகும். முயற்சியில் ஈடுபடுவதோடு நின்று முடிவு செய்யும் பொறுப்பை விநாயகக்கடவுளுக்கே விட்டுவிட வேண்டும். விநாயகர் கைவிட மாட்டார்.

பாருங்கள், திரு ஈ. வெ. ரா.வை! பிள்ளையார் உருவ உடைப்பில் அவர் ஈடுபட்டார்: எனினும் விநாயகர் அவரைக் கைவிடவில்லை! ஈரோட்டில் ஒரு பிள்ளையார் கோவில்! அந்தப் பிள்ளையார் கோவில் காரியங்களையும் அதன் சொத்துக்களையும் அவர் இன்றளவும் வெகு நன்றாக நிர்வகித்து வருகிறார் என்றால் ஆச்சரியமாயிருக்கிறதல்லவா? சென்னை ஹைகோர்ட்டு அப்பீல் வழக்குத் தீர்ப்பு ஒன்றில் சில தினங்களுக்கு முன் இந்த விவரம் வெளியாகியிருக்கிறது. நீதிபதி கனம் பி. என். ராமசாமி "திரு ஈ. வெ. ரா. பிள்ளையார் கோவில் சொத்துக்கள் முதலியவற்றை நன்கு நிர்வகித்து வருகிறார்" என்ற கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? வடிகட்டிய நாஸ்திகராகிய திரு ஈ. வெ. ரா.வையே விநாயகர் கைவிடவில்லை. அவருக்கு ஹைகோர்ட்டு மூலம் நற்பெயரும் வாங்கித் தந்தார் என்றால் அவரிடம் பக்தி கொண்டு முயற்சியில் ஈடுபடுவோர்களுக்குத் துணை புரிவார் என்பதில் சந்தேகமில்லை.

** ** **

இலங்கை முன்னாள் பிரதமர் திரு கொத்தலாவலை விடுத்ததாகக் கூறப்படும் ஒரு பயமுறுத்தலைப் பார்த்தால், தேர்தல் கீர்தல் ஒன்றுமே வேண்டாம் என்றுதான் எண்ணத் தோன்றும்.

சமீபத்தில் நடந்த தமது கட்சிக் கூட்டத்தில் பேசும் போது மாஜி பிரதமர் திரு கொத்தலாவலை, பிரதமர் பண்டார நாயகா சர்க்காரையும் அவருடைய கட்சியையும் பலமாகத் தாக்கிப் பேசினார். "இலங்கை சட்டசபையிலுள்ள பெரும்பாலான கட்சி அங்கத்தினர்களுக்குச் சரியாக நாலு வார்த்தைகள் கூடப் பேசத் தெரியாது. அதனால்தான் நான் சட்டசபைக்கே போவதில்லை. போனால் கோபம்தான் வரும். கோபத்தில் அவர்களை நான் அடித்தாலும் அடித்து விடுவேன்!" என்றெல்லாம் வசை மாரி பொழிந்தாராம். திரு கொத்தலாவலை சட்டசபை அங்கத்தினர்களை 'அடிப்பேன்' என்று பேசியதைக் கண்டித்துச் சட்டசபையில் தீர்மானம் வரப் போவதாகவும் தெரிகிறது.

திரு கொத்தலாவலை வெறும் விளையாட்டுக்காகத்தான் அவ்வாறு, "சட்டசபைக்குப் போய் அங்கத்தினர்களை அடிப்பேன்" என்று கூறினாரோ, அல்லது கோபத்தில்தான் அவ்வாறு கூறினாரோ எதுவாயினும் சரி, மொத்தத்தில் அவர் பயமுறுத்தல்கள் பத்திரிகைகளில் பலமாக அடிபடுவதில் குறைவில்லை!

# நடுநிலைமை என்னும் பொய்

ராஜாஜி

பாகிஸ்தான் இந்தியாவைத் தாக்கினாலும் இந்தியா பாகிஸ்தானைத் தாக்கினாலும் அமெரிக்காவானது அவ்வாறு ஆக்கிரமிப்புக்கு ஆளான நாட்டுக்கு உதவி செய்ய முன் வரும் என்று பாகிஸ்தானிலுள்ள அமெரிக்க ஸ்தானிகர் அறிவித்திருக்கிறார். இதைப் படிக்கும் அமெரிக்க மக்கள், தங்கள் பிரதிநிதி எவ்வளவு நேர்மையாகப் பேசிவிட்டார் என்று திருப்திப்படலாம். இதைத் தவிர இன்னும் சொல்லலாம், அமெரிக்கா இந்தியாவுக்குக் கூடத்தானே ராணுவ உதவி தருவதாக வாக்களித்தது; இந்தியாதான் பைத்தியக்காரத்தனமாக அந்த உதவியை மறுத்து விட்டது என்று.

அமெரிக்க ஸ்தானிகரின் பேச்செல்லாம் அர்த்தமற்ற பேச்சு, காரியத்துக்கு உதவாதது என்று எவருக்கும் புரியும். 'ஆக்கிரமிப்பு என்றால் என்ன? யார் ஆக்கிரமிப்பாளர்?' என்ற கேள்விகளுக்கு வாதங்களும் எதிர் வாதங்களும் பத்திரிகைகளில் பத்தி பத்தியாக எழுதலாம்; ஐ. நா. சபைகளில் மாதக் கணக்கில் வாதாடலாம், ஒரு முடிவுக்கும் வராமலே. பத்து வருஷங்களாக, பாகிஸ்தான் உடந்தையின் பேரில் காஷ்மீர் தாக்கப்பட்ட பிரச்னை ஐ. நா. சபையில் தீர்ப்புக் கூறப் படாமலே ஊசலாடிக் கொண்டிருக்கிறது என்பதுதான் நமக்குத் தெரியுமே. சமீபத்தில் கூட திரு வி. கே. கிருஷ்ண மேனன் பாகிஸ்தானின் குற்றத்தைப் பற்றி ஒரு தீர்ப்பு கூறுங்கள் என்று கேட்ட போது, ஐ. நா. சபை அதற்குத் தயாராயில்லை. ஒரு முடிவு கூறாமலே கலைந்து விட்டது.

1947-ம் வருஷம் அக்டோபர் மாதம் காஷ்மீர் மீது பாகிஸ்தான் படை எடுத்தது. காஷ்மீர் சர்க்கார் இந்திய சுதந்திரச் சட்டப்படி இந்தியாவுடன் இணைந்து கொண்டது. அதற்கு இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்தவரிடம் எழுத்து மூலமாக அங்கீகாரமும் பெற்றது. ஐ. நா. சபையில் பாகிஸ்தானைப் பற்றிக் குற்றச்சாட்டைத் தாக்கல் செய்தோம். இதுவரை தீர்ப்பு கூறவில்லை.

பாகிஸ்தான் செய்தது அநீதி என்பது மிகத் தெளிவாக ஐ. நா. சபைக்குத் தெரிந்திருந்தும் தீர்ப்பு வரவில்லை!

இந்தியச் சிப்பாய்கள் பல இடையூறுகளைக் கடந்து, கொல்லும் குளிரையும் பனியையும் தாங்கி, மலைகளையும் பள்ளங்களையும் தாண்டி ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்தினார்கள். கடவுளின் அருளும் இருந்தது.

இது நடந்து பத்து வருஷமாகிறது. இப்பொழுதாகிலும் ஐ. நா. சபையோ, அமெரிக்காவோ நியாயம் கூறலாம் அல்லவா? அதைச் செய்ய மறுக்கிறது. ஏன்? நியாயத்தைச் சொல்லிவிட்டால் பாகிஸ்தானின் நட்பை இழந்துவிட நேருமோ, மத்தியகேந்திரத்திலுள்ள முஸ்லிம் நாடுகளின் நட்பு கெட்டு விடுமோ என்கிற பயம்தான். ஆனால் இப்படிச் சும்மா இருந்தால் இந்தியாவின் அதிருப்திக்கு ஆளாக நேரிடுமே என்று சிலர் நினைக்கலாம். அமெரிக்கா இந்தியாவின் அதிருப்தியைக் கொஞ்சதூரம் வரைக்கும் சம்பாதித்துக் கொள்ளத் தயாராகவே இருக்கிறது. ஏனெனில் இந்தியாவின் அதிருப்தி, பாகிஸ்தானைப்போல் உணர்ச்சி வெறிகளைக் கிளப்பக் கூடியதல்ல என்பது அமெரிக்காவுக்குத் தெரியும். இந்தியா தர்மத்துக்குக் கட்டுப்பட்டது என்பது அமெரிக்க சர்க்காருக்குத் தெரியும். அதை நம்பி இந்தியாவை ஓரளவு துன்புறுத்தலாம், பொறுத்துக் கொள்ளும் என்று அமெரிக்கத் தலைவர்கள் எண்ணுகிறார்கள். ஆனால் பாகிஸ்தான் விஷயத்தில் அப்படிச் செய்யத் தயாராக இல்லை!

காஷ்மீர் இந்தியாவுடன் இணைந்ததால் சில பொறுப்புக்களும் கடமைகளும் இப்பொழுது இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ளன. அந்தக் கடமைகளையும் பொறுப்புகளையும் சரிவர நிறைவேற்றியே தீர வேண்டும். எனவே, பாகிஸ்தான் காஷ்மீர்மீது போர் தொடுத்தால் அதை இந்தியா பார்த்துக் கொண்டிருக்க முடியாது. தடுக்க எல்லா முயற்சிகளையும் எடுக்க வேண்டியதாகும்.

பாகிஸ்தான் காஷ்மீர்மீது போர் தொடுத்தால் தாக்கின இடத்திலேயே தற்காப்புக்கு வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதில்லை. எதிர்த் தாக்குதல் முறையும் கையாள வேண்டியதாகும். யுத்தங்களில் தற்காப்புக்காக வேறு ஓர் இடத்தில் எதிர்த் தாக்கு முறையைக் கையாள வேண்டியதாகும். தாக்கும் நாட்டின் இஷ்டப்படிதான் யுத்தம் நடத்த வேண்டும் என்று எதிர்பார்க்கலாகாது. சற்றுத் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால், உதாரணமாக மாஸ்கோவிலிருந்து செலுத்தப்பட்ட ஒரு அணுகுண்டு நியூயார்க் நகரத்தைத் தாக்கினால் அதற்கு அமெரிக்கா, நியூயார்க் நகரத்தில் மட்டும் தற்காப்பு செய்து கொள்ளாது. ருஷ்யாவிலுள்ள ஸ்டாலின் கிராட் நகரைத் தாக்கும்! அதைப்போலவே, பாகிஸ்தான் சர்க்கார் காஷ்மீர் பிரதேசத்தைத் தாக்கினால் இந்தியா தனது ராணுவ நிபுணர்களின் யோசனைப்படி பதில் தாக்குதல் வேறு எங்கேயாகிலும் நடத்த வேண்டியிருக்கும். ஆனால் இம்மாதிரி இந்தியா பதில் தாக்குதல் செய்தால், அது தற்காப்பு நடவடிக்கை என்றும் ஆக்கிரமிப்பு நடவடிக்கை அல்ல என்றும் ஐ. நா. சபையோ, அமெரிக்காவோ உணராது. அவர்கள் மேல் நாட்டு யுத்தங்களில் கடைப்பிடிக்கும் முறைதானே நாமும் கடைப்பிடிக்கிறோம் என்று எவ்வளவு சொன்னாலும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆகவே, பாகிஸ்தானின் அமெரிக்க தூதர் ஹொராஸ் ஹைல்டரெத் அவர்களின் அனுதாபம் அர்த்தமில்லாத வெற்றுரையாகும். அமெரிக்காவின் ராணுவ உதவியினால் பாகிஸ்தானின் மூளையில் மதமும் திமிரும் உண்டாகியிருக்கின்றன. அந்த நிலையில் அது வெறி கொண்டு எதையும் செய்துவிட முடியும். பாகிஸ்தானுக்குக் கிடைத்துள்ள ராணுவ உதவியைக் கண்டு இந்தியா பயப்படவில்லை.

ஆனால் அந்த ராணுவ உதவி நிலைமையை ரொம்பவும் சீர்கெடுத்திருக்கிறது.

உண்மை என்ன? 1947-ம் ஆண்டு இந்தியா பிரிக்கப்பட்டதல்லவா? அந்தப் பிரிவினை நிபந்தனைகளை மாற்றியமைக்க வேண்டும் என்று பிரிட்டன் இன்று விரும்புகிறது. முஸ்லிம்கள் வசிக்கும் காஷ்மீர் பிரதேசம் பாகிஸ்தானுக்கே சேர வேண்டும் என்பது பிரிட்டனுடைய அந்தரங்கக் கொள்கை. 1947-ம் ஆண்டு பார்லிமெண்ட் சட்டத்தில் இது இல்லை. ஆயினும் இப்போது அப்படி நிறைவேற வேண்டுமென்பது பிரிட்டனின் ஆசை.

காஷ்மீர் பிரதேசம் இந்தியாவுடன் இணைக்கப்பட்டு, மக்கள் சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறார்கள் என்பதைத் தங்கள் அரசியல் நிர்ணய சபையின் மூலம் தெரிவித்தாலும் பிரிட்டிஷார் அதை ஒப்பத் தயாராயில்லை. காஷ்மீர் மக்கள் தங்கள் இருப்பிலைச் சொல்லாலும், செயலாலும் நிரூபித்தாலும் பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்பத் தயாராயில்லை. நிம்மதியான வாழ்க்கை வாழ்ந்து காண்பித்தாலும் ஒப்பத் தயாராயில்லை. இதுதான் பிரிட்டிஷாரின் மன நிலை. அமெரிக்காவோ பிரிட்டனைக் கைவிடத் தயாராயில்லை. எகிப்து விஷயத்தில் பிரிட்டன் பயித்தியக்காரத்தனமாக நடந்து கொண்டது அமெரிக்காவுக்குச் சற்றும் பிடிக்கவில்லை; கண்டித்தது. அதன் காரணமாக பிரிட்டனை ரொம்பவும் கோபித்துக் கொண்டு விட்டதற்கு வருத்தப்பட்டு பிரிட்டனின் காரியங்களுக்கு ஓரளவு 'ஆமாம்' பாட்டுபாடிவருகிறது.

எது எப்படியாயினும் உலகம் ஒன்று உணர்ந்து கொள்ள வேண்டும். பாரதநாடு ஒரு முறை பிரிக்கப்பட்டு விட்டது. சில நிபந்தனைகள் ஒப்புக்கொள்ளப் பட்டன. அவற்றை ஐ. நா. சபையோ வேறு எந்தச் சபையோ மாற்றி எழுத விரும்பினால் அது ஒரு நாளும் நடைபெறாது. அந்த நிபந்தனைகளின்படி நியாய முறையில் முதலில் காஷ்மீர் மகாராஜாவும் அதற்குப் பின், காஷ்மீர் அரசியல் நிர்ணய சபையும் காஷ்மீர் ராஜ்யம் இந்தியாவுடன் இணைத்து விட்டதை மாற்றி, அதில் எந்தப் பகுதியையேனும் பாகிஸ்தானுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று எந்த வல்லரசு நினைத்தாலும் முடியாது. மேனாட்டின் மேற்பார்வை இல்லாமல் ஆசியாவில் எந்த நடவடிக்கையும் முடிவு பெறாது என்கிற கொள்கையை அமெரிக்காவும் பிரிட்டனும் வைத்துக் கொண்டிருக்கின்றன; இதைவிட அபத்தமானது வேறு ஒன்றில்லை.

அமெரிக்காவின் ராணுவ உதவி கலகத்துக்குக் காரணமாகி விட்டது என்பது உறுதி. நடுநிலைமைக்கு இடமில்லை. ஆயுதங்களைத் தந்து விட்டு, பிரயோகம் செய்ய வேண்டாம் என்றால் மதம் பிடித்தவன் கேட்பானா?

'ஸ்வராஜ்யா'விலிருந்து மொழி பெயர்த்தது.

# ஆகாச வெடி

"நேற்று வரை 40 ரூபாய் சம்பளத்தில் சப்ராஸி வேலை பார்த்தவர், இன்று தேர்தலில் ஜயித்து எம். எல். ஏ. ஆகிறார். இருந்தாலும், அவர் தமது பழைய உத்தியோகத்தை விடப் போவதில்லையாம்."

—பம்பாய்ச் செய்தி

புதிய பதவி எப்படியும் ஐந்தாண்டுகளில் முடிந்துவிடும் என்ற காரணமாயிருக்கலாம்!

★

"காஞ்சியில் நம் தேர்தல் கூட்டங்கள் இரண்டில் நாயை விரட்டினார்கள், பன்றியை விரட்டினார்கள், கழுதையை விரட்டினார்கள். யார்? இம்மூன்றுக்கும் நெருங்கிய உறவினர்களாகத்தான் இருக்க வேண்டும்!" — தி. க. பத்திரிகை

"உறவினர், வேண்டியவர் வேண்டாதவர் என்றெல்லாம் ஜனநாயகத் தேர்தலில் வித்தியாசம் பாராட்டலாமா?" என்று ஒருவர் கேட்கிறார்.

★

"எதிரிகளை விட மோசமானவர்கள் உதிரிகள்." —ஒரு தி. க. பிரசங்கி

இவ்வாறு கூறி உதிரிகளையும் எதிரிகளாக்கிக் கொண்டு விட்டது. பரிதாபம்!

"செய்தி வேட்டைக்காகத் தம்மை அணுகிய பத்திரிகை நிருபர்களிடம் ஜலதோஷத்தால் தமக்குக் காது கேட்கவில்லையென்றும் உரக்கப் பேசும்படியும் ஜனாதிபதி ஐஸன்ஹோவர் அறிவித்தார்."

—செய்திக் குறிப்பு

இதைவிடச் செய்தி வேட்டையாடும் நிருபர்களுக்கு வேறு என்ன செய்தி வேண்டும்!

★

"ராஜஸ்தானில் ஒரு வோட்டுச் சாவடியில் ஒரு வோட்டு கூடப் பதிவாகவில்லை. அதிகாரிகள் வோட்டுப் பெட்டிகளைக் கொண்டு 'வந்தது போலவே காலியாக எடுத்துச் சென்றார்கள்." —தினசரி

இவ்வளவு சீக்கிரமாக 'வோட்டு எண்ணிக்கை' முடிவு வெளியான வோட்டுச் சாவடி வேறு எதுவும் இராதென்பது நிச்சயம்!

★

"இந்தத் தொகுதியில் தம்மை எதிர்த்துப் போட்டியிட்ட பத்துப் பேரையும் ஜாமீன் இழக்கச் செய்து ஸ்திரீ அபேட்சகர் வெற்றிக் கொடி நாட்டினார்." —செய்தி

வருங்காலத்தில் இனி எந்தத் தேர்தலில் அந்த ஸ்திரீ நின்றாலும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்படுவது நிச்சயம்!

# நன்கு பேணி வளர்ப்பது

## அதிகப்படியான உழைப்பை அளிக்கிறது



முதல்தர பந்தய குதிரை சிட்டியாய் பறப்பதற்கும், ஓடுவதற்கேற்ற சக்தியுடன் இருப்பதற்கும் எவ்வாறு பேணி வளர்க்கப் படுகிறதோ, அதேபோல் கால்டெக்ஸ் தயாரிப்புகள் அபிவிருத்தி செய்யப் படுகின்றன. ஒவ்வொரு கால்டெக்ஸ் தயாரிப்பின் சிறந்த கலவை முறை மற்றும் தொழில் நுட்ப அனுபவம் இவைகளே இது அளிக்கும் அதிகப்படியான சக்தி, வேகம், நம்பகத்தன்மை, சுகமான ஓட்டம் மற்றும் சிக்கனம் இவைகளுக்கு உத்திரவாதம்.

## உங்கள் காருக்குக்

## கால்டெக்ஸ்




வழங்கி




சக்தி மற்றும் வேகத்திற்கு

**கால்டெக்ஸ் ஜளி-ப்ளஸ் பெட்ரோல்**






சிக்கனத்திற்கும், நம்பகத்தன்மைக்கும்

**கால்டெக்ஸ் ஆர்பிஎம் மோட்டார் ஆயில்**






சுகமான சவாரிக்கு

**கால்டெக்ஸ் மார்பக் சாஸிஸ் லூப்ரிகேஷன்**









**அது எப்படி ஓடுகிறதென்பதைக் கவனியுங்கள்!**

உங்கள் நண்

கால்டெக்ஸ் வியாபாரியிடம் ஓட்டிச் செல்லு

# ஈழ நாட்டுப் பிரயாணம் 10

ஈழ நாட்டின் அரசியல் திருவிளையாடல்களைப் பார்த்து நேயர்கள் திகைத்துப் போயிருப்பார்கள். "தமிழ் மக்களை இப்படிக் கொடுமைப்படுத்தும் இந்தச் சிங்களவர்கள் யாரோ! அவர்கள் எப்படி இருப்பார்களோ! அவர்களை ஒருதரம் பார்த்து விட வேண்டும்" என்ற ஆவல் ஏற்பட்டிருக்கும். எனக்கும் அதே ஆவல்தான் ஏற்பட்டது. இலங்கைத் தீவுக்குப் புறப்படுவதற்கு முன்பே சிங்களவர்களைப் பார்க்க வேண்டும் என்ற தாபம் பொங்கி எழுந்து கொண்டே இருந்தது. அவர்கள் எப்படி இருப்பார்கள் என்பதையும் ஒருவாறு கற்பனைசெய்து வைத்திருந்தேன். ஆறடி உயரம் உள்ளவர்களாகவும், ஆஜானுபாகுவாகவும், முறுக்கிவிட்ட மீசையும், அனல் கக்கும் கண்களை உடையவர்களாகவும், பார்ப்பதற்குப் பயங்கரமான உருவத்துடனும் இருப்பார்கள் என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தேன்.

ஆனால் இலங்கைவந்த மறுநாளே அந்த எண்ணம் மாறிவிட்டது. சிங்களமக்களும் நம்மைப் போன்றவர்கள்தான். சிங்களவர் நாகரிகம் வேறு, இந்திய நாகரிகம் வேறு என்பது இல்லை. அவர்கள் மதத்தாலும் இந்தியர்கள் தான்; சாதியாலும் இந்தியர்கள்தான். சூழ்நிலையால்தான் கொஞ்சம் மாறுபட்ட மனத்தினை உடையவர்களாக இருக்கிறார்கள்.

வெகு காலத்துக்கு முன்னால் வட இந்தியாவிலிருந்து அதாவது வங்காளத்திலிருந்து இலங்கைத் தீவுக்கு வந்து குடியேறியவர்கள். வங்காளத்தைச் சேர்ந்த ராஜகுமாரி ஒருத்தி மிருகங்களின் அரசனை சிங்க ராஜனைக் காதலித்தாளாம். அவளையும் அவள் காதலித்த சிங்கத்தையும் கப்பலில் ஏற்றிக் கடலில் விட்டு விட்டார்கள். கடலில் மிதந்து வந்த அந்தக் கப்பல் இலங்கைத் தீவில் வந்து ஒதுங்கியது. அவர்களுடைய வம்சத்திலிருந்து வந்தவர்கள்தான் சிங்களவர்கள். இப்படிச் சிங்களவர்களைப் பற்றி ஒரு கதை வழங்குகிறது. இந்த விசித்திரக் கதையை நாம் நம்பத் தயாராயில்லை. ஆனாலும் அவர்கள் வங்காளத்தில் இருந்து வந்து குடியேறியவர்கள் என்பதை நாம் மறுக்க முடியாது. அவர்கள் உடல் அமைப்பு, நடை உடைகள், வழக்க பழக்கங்கள், பெயர்கள் எல்லாமே அவர்கள் இந்தியர்கள்தான் என்பதற்கு இன்றும் சான்று கூறுகின்றன.

*** *** ***

சிங்கள மக்களுக்குள்ளே இருக்கும் சாதி வித்தியாசக் கொடுமை அப்பப்பா! எழுத்தில் சொல்ல முடியாது. அவ்வளவு கொடுமை! அவர்களுக்குள்ளேதான் எத்தனை எத்தனை பிரிவுகள். சிங்களவர்களில் ரொடியா என்ற இனத்தவர்தான் மிகத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள். ஆனால் இந்தச் சாதியைச் சேர்ந்த பெண்கள் அழகு மிக்கவர்கள். அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்களைப் போலச் சொகுசாக இருக்கிறார்கள். ரதல்ல என்ற இனத்தவர் மிக உயர்ந்த சாதியார். ஆனால் அழகு குறைவானவர்கள். இந்த இரண்டு சாதிகளுக்கும் இடையில் எத்தனையோ பல சாதிகள். அதில் பலப் பல கிளைகள். சாதிக் கட்டுப்பாடு, மூடப்பழக்க வழக்கங்கள், போலி நாகரிகம், வறட்டு ஜம்பம் ஆகியவற்றில் சிங்களவர்களை யாரும் மிஞ்ச முடியாது. அன்றாடம் சாப்பாட்டுக்கு வழி இல்லாவிட்

## யாரோ, இந்தச் சிங்களவர்கள்



டால்கூட அழகான உடைகளை அணிந்து கொள்வார்கள் சிங்களப் பெண்கள்.

சிங்களப் பெண்களின் உடையைப் பார்த்தால் மிக எளிமையாகத்தான் இருக்கிறது. அவர்கள் கேரள நாட்டுக் கிராமத்துப் பெண்கள் அணிந்து கொள்வது போல மேலே ஒரு ஜாக்கெட்டும், இடையில் ஒரு துண்டும்தான் அணிந்திருக்கிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் ஒரு துண்டை மட்டும் உடுத்திக் கொள்ளவில்லை விதம் விதமான வர்ணங்களில் மூன்று முதல் ஐந்து சேலைகள் வரையில் அணிந்திருக்கிறார்கள். ஒன்றின்மேல் ஒன்றாகப் பலவித வண்ணப் பொற் சேலைகளை அணிந்திருக்கிறார்கள். அவர்கள் நடக்கும் போது அந்தச் சேலைகள் எல்லாம் ஒவ்வொன்றாகத் தெரிகின்றன. அவைதான் எத்தனை எத்தனை நிறங்களையுடையவைகளாயிருக்கின்றன. ஒவ்வொரு சேலையும் மூன்று கஜம் நீளம் உள்ளது. ஒன்றின்மேல் ஒன்றாகக் கட்டியிருக்கும் இந்தப் புடவைகளில் எல்லாவற்றுக்கும் மேலே கட்டியிருக்கும் புடவை மட்டும் மிக உயர்ந்த ரகமாக இருக்கிறது. இதைமட்டும் ஒரு நாளைக்குப் பல தடவை மாற்றி உடுத்திக் கொண்டு விடுகிறார்கள்.

நம் நாட்டுப் பெண்களிடம் காணும் நாணத்தைப் போலச் சிங்களப் பெண்களிடம் காண முடியவில்லை. ஆண்களைப் போலவே பெண்களும் சரளமாகப் பழகுகிறார்கள். பொதுவாக இருபது வயதுக்குமேல்தான் பெண்களுக்குத் திருமணம் செய்கிறார்கள். திருமணத்தில் எதிர் ஜாமீன் போன்ற தொல்லைகள் ஒன்றுமில்லை. சமயம் விட்டு சமயம் திருமணம் செய்து கொள்வதும், சிங்களப் பெண்களைத் தமிழர்கள் திருமணம் புரிந்து கொள்வதும் சர்வ சகஜம். விவாகப் பிரிவினை பாத்தியதைகள் உண்டு. மறுமணம் செய்துகொள்ளும் உரிமையும் உண்டு. இவைகள் எல்லாம் பழங் காலத் தமிழர் நாகரிக அடிப்படையில் அவர்கள் கொண்டவைகளா? இல்லை, இந்தக் காலத்தில் ஏற்பட்டனவா என்ற விவரங்கள் ஒன்றும் சரியாகத் தெரியவில்லை.

சிங்களவர்களின் கிராமத்து வாழ்க்கை மிக ரஸமாக இருக்கிறது. அதிலும் வயலில் நாற்று நடுவதை அவர்கள் கிராமப் பொது விழாவாகவே கொண்டாடுகிறார்கள். ஒருகிராமத்தில் யாராவது ஒரு விவசாயி தம்முடைய வயலில் நாற்று நட வேண்டுமானால் அவருக்கு நடவு ஆட்களைத் தேடிப் பிடிக்கும் தொல்லை கிடையாது. "இன்றைய தினம் என் வயலில் நாற்று நடப் போகிறேன்" என்று கிராமத்தில் உள்ள ஒவ்வொரு வீட்டிலும் சொல்லி விடுவார். உடனே அந்தந்த வீட்டில் உள்ள இளம் பெண்கள் எல்லாரும் அலங்காரமாக உடை உடுத்திக் கொண்டு வயலுக்கு வந்து விடுவார்கள். அந்த விவசாயி கொடுக்கும் நாற்றை எடுத்துக் கொண்டு அவருடைய வயலில் நட ஆரம்பித்து விடுவார்கள். அற்புதமான நடவுப் பாடலைப் பாடிக் கொண்டு அவர்கள் நடவு நடும் அற்புதக் காட்சி கண் கொள்ளாக் காட்சி.

பொன் இழையையும் பட்டின் இழையையும் கொண்ட பல புதுப் புது சேலைகள் அணிந்து ஒரு கையிலே இருக்கும் நாற்றை மறு கையால் பறித்து வய



# யாரோ!



வில் அந்தப் பெண்கள் வரிசை வரிசையாக நின்று நாற்று நடும் காட்சியைப் பார்க்கும் போது உண்மைச் சம்பவம் போலவே தோன்றுவதில்லை. ஏதோ நாடகத்தில், சினிமாவில், கற்பனை உலகில் காணும் ஒரு அபூர்வமான காட்சியைப் போல்தான் இருக்கும். கவிஞர்கள் பார்த்துப் பரவசத்துடன் பாட வேண்டிய காட்சி. ஓவியர்கள் சித்திரத்தில் தீட்ட வேண்டிய சித்திரம்.

நடவு முடிந்தவுடன் அவர்கள் எல்லாம் உற்சாகமாக வீடு திரும்பி விடுவார்கள். நடவு நட்டதற்காக வேண்டி அவர்கள் எந்தச் சன்மானமும் பெறுவதில்லை. ஒவ்வொரு தொழிலையுமே இப்படி ஊர் திரண்டு வந்து உற்சாகமாகச் செய்வதாயிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

இந்த விவரங்களையெல்லாம் திரு நவம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே எங்கள் கார் ஒரு கிராமத்தைத் தாண்டியது. அது சிங்களவர்கள் அதிகமாக வாழும் கிராமம். "இந்தக் கிராமத்தை நன்றாகப் பாருங்கள். அமைதி தவழும் இந்தக் கிராமம் சில மாதங்களுக்கு முன்னால் வெறி பிடித்து நின்றது. இந்தக் கிராமத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் கடைகள் பட்டப் பகலிலே சூறையாடப்பட்டன. ஒரு தமிழ் வாத்தியாரின் சாமர்த்தியமும் அவருக்கு உயிர்ப் பிச்சை அளித்த இந்தக் கிராமத் தலைவரின் பண்பும் சரித்திர முக்கியம் பெற வேண்டிய அற்புத சம்பவமாகும்" என்றார் மட்டக்களப்பு நண்பர் திரு நவம்.

## வீரத் தமிழன்

எங்கும் அராஜகம் நிலவியது. நாள்தோறும் அடிதடியும், கலகமும், கொள்ளையும், சில இடங்களில் கொலையும் கூட நடந்தன. அழகுக்கும் அமைதிக்கும் பெயர் போன இந்தத் தியாவல என்ற கிராமம் பயங்கரமாகத் தோற்றமளித்தது. மொழி வெறியால், இனத்தின் பெயரால் மனிதன் மனிதனை அடித்தான்; கடித்தான்; வெட்டினான்; குத்தினான். சிங்களவர்களும் தமிழர்களும் சேர்ந்து வசித்து வந்த இடங்களில் எல்லாம் பயங்கரமான கலகங்கள் நிகழ்ந்தன. தமிழர்கள் பல இடங்களில் அநியாயமாகத் தாக்கப்பட்டனர். மனிதப் பண்பு சீர் குலைந்தது. மனித நாகரிகம் தூக்கி எறியப்பட்டது.

வெறி பிடித்த சிங்களக் கூட்டத்தினர் கையில் தடியும், அரிவாளும், மண்வெட்டியும் தூக்கிக்கொண்டு தமிழர்கள் எங்கு இருக்கின்றனர் என்று தேடித்திரிய ஆரம்பித்தனர். இந்த வெறி பிடித்த கூட்டத்திலிருந்து சில தமிழர்கள் ஒரு மாதிரி தப்பிப் பிழைத்துத் தமிழ்ப் பகுதிக்குச் சென்று விட்டனர்.

இந்த மாதிரி சமயத்தில் மட்டக் களப்பில் இருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. என் தாயார் மிகவும் அபாயமான நிலையில் இருப்பதாகவும் உடனே புறப்பட்டு வரவும் என்று அதில் குறிப்பிட்டு இருந்தது. எனக்கு என்ன செய்வது என்றே தெரிய வில்லை. என் தாய்க்கு நான் ஒரே பிள்ளை. எனக்கு ஒரு தங்கையும் இருந்தாள். அவர்களுக்கு நான்தான் ஆண் துணை. இந்தச் சமயத்தில் தியாவல கிராமத்திலிருந்து மட்டக்களப்புக்குப் போக முயலுவது யமனையே எதிர்கொண்டு அழைப்பது போலாகும். ஆகவே நான் போகாமல் இருந்து விடலாம் என்று நினைத்தேன். ஆனால் மரணப் படுக்கையில் இருக்கும் என் வயோதிகத் தாய், ஆண் துணையில்லாமல் நிற்கும் என் அருமைத் தங்கை இவர்கள் முகங்கள் என் கண் முன்னே தோன்றிக் கொண்டே இருந்தன. நான் எப்படியும் தியாவல கிராமத்தில் இருந்து மட்டக்களப்புக்குப் புறப்பட்டுவிடுவது என்றே தீர்மானித்து விட்டேன்.

*** *** ***

நான் இங்கு உபாத்தியாயராக வேலை பார்த்து வருகிறேன். சிங்களவக் குழந்தைகளும் தமிழ்க் குழந்தைகளும் என்னிடம் படித்து வருகின்றனர். நானும் ஒரு சிங்களவர் வீட்டில்தான் வசித்து வருகிறேன். என் மீது நான் குடியிருக்கும் வீட்டுச் சொந்தக்காரரான சிங்களவர் உயிரையே வைத்திருக்கிறார். அவர்தான் அந்தக் கிராமத்தின் தலைவர்கூட. ஆனாலும் ஊரே திரண்டு வரும் போது அவர் என்ன செய்துவிட முடியும்?

சூரியன் மறைந்து விட்டான். என் தாயாரின் நினைவு எனக்கு வந்து விட்டது. என் தங்கை சின்னக் குழந்தைக்குச் சமானம். அவளுக்கு ஒன்றுமே தெரியாது. ஓடி ஆடி விளையாடிக் கொண்டிருப்பவள். அவளைச் சாப்பிட வைப்பதற்குள் என் தாய்க்குப் போதும் போதும் என்றாகிவிடும். பதினைந்து வயது வந்த பெண்ணாக இருந்தாலும் தூங்கும் பொழுது கூட பக்கத்தில் பட்டு நூலில் செய்த நாயை வைத்துக் கொண்டுதான் தூங்குவாள். அப்படிப்பட்ட குழந்தை உள்ளம் படைத்த தங்கை இப்பொழுது என்ன செய்கிறாளோ என்று நினைக்கும் போது எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்துவிட்டது. எவ்வளவு அடக்கினாலும் ஆத்திரம் பீறிக் கொண்டு வந்து விட்டது. கண்களில் கண்ணீர் வழிய ஆரம்பித்து விட்டது. ஒரு கணநேரம்தான் இப்படிப்பட்ட நிலைமை இருந்தது. அடுத்த கணம் சுதாரித்துக் கொண்டேன். என் துணிமணிகளை எடுத்துப் பெட்டிக்குள் வைத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பத் தயாராகி விட்டேன்.

கிராமத்தின் குறுக்குப் பாதை வழியாகச் செல்ல ஆரம்பித்தேன். சிங்களவர் கண்ணில் அகப்பட்டுவிடக் கூடாதே என்று பயந்து கொண்டே சென்றேன். வழியில் காலில் ஏதோ தட்டுப்பட்டதுபோலிருந்தது. குனிந்து பார்த்தேன். ஒரு அழகிய இளைஞன்; தமிழ் வாலிபன்; அடிபட்டு மயக்கம் போட்டுக் கிடந்தான். அந்த வாலிபனை அடித்தவுடன் அவன் ஏதோ மயங்கி விழுந்திருக்கிறான். அவன் உயிரே போய்விட்டது என்று அவனை இங்கு ஒதுப்புறமாகத் தூக்கி வந்து போட்டு விட்டுச் சிங்களவக் குண்டர்கள் ஓடி யிருக்க வேண்டும். ஒரு சொட்டுத் தண்ணீருக்காக ஏங்கியது போலிருந்தது அந்த வாலிபனின் திறந்த வாய். அருகில் இருந்த வாய்க்காலுக்கு அவசரமாகச் சென்றேன். கைக் குட்டையை நனைத்துக் கொண்டு வந்து அவன் வாயில் பிழிந்தேன். ஒரு மடக்குத் தண்ணீர் உள்ளுக்குள் சென்றதுமே அவன் மயக்கம் தெளிய ஆரம்பித்து விட்டது. ஈரக் கைக்குட்

# உலகத்தை மிகக் கோலாகலமாக வரவேற்பது......



உங்கள் மர்பி ரேடியோதான்.
அதன் மிகச் சிறந்த
உழைப்புக்கும் அற்புதமும்
தெளிவும் நிரம்பிய தொனிக்கும்
அதை பல்லாயிரக்கணக்கானவர்கள்
வாங்கிப் போற்றி மகிழ்கிறார்கள்!

# மர்பி

இன்று எல்லோராலும் விரும்பப்படும் ரேடியோ!



மாடல் 298

- ஆல்வேவ்
- 5 வால்வுகள்
- 3-பாண்ட்
- AC/DC
- ரூ. 215/- உள்ளூர் வரிகள் தனி

இனிமையான ஒலி!
அழகான தோற்றம்!

டையால் அவன் முகத்தையும் ஒரு தரம் துடைத்து விட்டேன். அவன் இரண்டு தரம் கண்களைச் சிமிட்டி விட்டு மெதுவாக எழுந்தான். பயத்தால் திருதிரு என்று விழித்தான்.

"பயப்படாதே! சிங்களவர் யாருமில்லை நான் தமிழன்தான்" என்றேன்.

நாலாபுறமும் ஒரு தரம் சுற்றிப் பார்த்து விட்டு, "அந்தக் குண்டர்கள் எல்லாம் போய் விட்டார்களா?" என்று கேட்டான்.

"போய் விட்டார்கள். இனி இங்கு ஒரு கணம் கூடத் தாமதிக்கக் கூடாது. புறப்படு, மட்டக்களப்புக்குச் செல்வோம்" என்றேன்.

அந்த வாலிபன் மௌனமாக என் பின்னால் வரத் தொடங்கினான். ஒரு கையில் என் பெட்டியைப் பிடித்துக் கொண்டு மற்றக் கையால் அவன் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு வேகமாக நடக்க ஆரம்பித்தேன்.

அப்பொழுது "நவரத்தினம், நில்! எங்கே போகிறாய்?" என்று ஒரு இடி முழக்கக் குரல் கேட்டது. குரல் வந்த திசையைப் பார்த்தேன். நான் குடியிருந்த வீட்டுக்காரச் சிங்களவர் என்னை நோக்கி வெறிபிடித்தவர் போல் ஓடிவந்தார். எனக்கு உலகமே சுழல ஆரம்பித்து விட்டது. 'நேற்றுவரையில் நம்மிடம் அன்பும் மரியாதையும் காட்டிய இந்த மனிதரே என்னைத் துரத்துகிறாரே' என்று நடுநடுங்கிப் போனேன். என் மூச்சே நின்று விடும் போலாகி விட்டது.

"தம்பி! இந்தச் சமயத்தில் நீ தனியே கிளம்பலாமா? வழியெல்லாம் குண்டர்கள் இருக்கிறார்களே" என்றார் அந்தப் பெரியவர். இப்படி அவர் சொன்னவுடன்தான் எனக்கு மூச்சு வந்தது. நன்றி ததும்பும் கண்களுடன் அந்தப் பெரியவரைப் பார்த்தேன்.

"ஐயா! தங்கள் அன்புக்கு மிகவும் நன்றி! என் தாய் மரணப்படுக்கையில் இருக்கிறார் என்று தந்தி வந்திருக்கிறது. என் தங்கை என் தாயை நம்பி இருக்கிறாள். இப்பொழுது இரண்டு பேருக்குமே ஆண் துணை இல்லை. நான் உடனே ஊருக்குப் போய்த்தான் ஆக வேணும்" என்றேன்.

"எது எப்படி இருந்தாலும் முதலில் நீங்கள் இருவரும் வீட்டுக்கு வாருங்கள். இரண்டு நாட்கள் கழித்துக் கலகம் எல்லாம் அடங்கி ஒடுங்கிய பிறகு செல்லலாம்" என்றார்.

"ஐயா! நான் ஒரு வீரத் தமிழன்! வீரத் தமிழனுக்குப் பிறந்தவன்! இந்தச் சமயத்தில் என்ன அபாயம் ஏற்பட்டாலும் என் தாயைப் போய்ப் பார்த்தே ஆக வேண்டும். அவரைக் காப்பாற்றியே யாகவேண்டும்" என்றேன்.

"அதற்காக இந்த அபாய சமயத்தில் செல்லலாமா? உமக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் பிறகு உங்கள் தங்கைக்கும் தாய்க்கும் யார் ஆதரவு?" என்றார். அப்போது அவர் முகத்தில் தோன்றிய கனிவை இதற்கு முன் நான் பார்த்ததே கிடையாது.

இதற்குள் சிங்களவக் குண்டர்கள் அந்தப் பக்கம் வந்து விட்டனர். அவர் உடனே தம் பலம் முழுவதையும் பிரயோகித்து என்னைத் தள்ளிக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டார்.

இதைப் பார்த்து விட்டனர் அந்த வெறி பிடித்த கூட்டத்தினர். கும்பலாக வந்து நாங்கள் இருந்த வீட்டைச் சூழ்ந்து கொண்டனர். "சிங்களம் வாழ்க!" என்று கோஷிக்க ஆரம்பித்து விட்டனர்.

நாங்கள் இருந்த வீட்டுச் சொந்தக்காரர், "சிங்களம் வாழ்க!" என்று பதிலுக்குக் கோஷித்து விட்டு வெளியே வந்தார்.

கூட்டத்தில் தலைவனாகத் தோன்றிய வெறி பிடித்த இளைஞன், "அந்தத் தமிழர்களை எங்களிடம் ஒப்புவித்து விடும்!" என்றான்.

"அவர்கள் என் உறவினர்கள்" என்று தயங்காமல் பதில் கூறினார் பெரியவர்.

"தமிழர்கள் உங்கள் உறவினர்களா?" என்று சிங்கம் கர்ஜிப்பது போல் கர்ஜித்து, அவரை ஒதுக்கித் தள்ளி விட்டு வீட்டுக்குள் பாய ஆரம்பித்தான் அந்த இளைஞன்.

"நில், அப்படியே!" என்று இடிமுழக்கக் குரலில் கத்தினார் பெரியவர். கூட்டம் ஒரு கணம் அப்படியே அசந்து விட்டது. "நான் இந்தக் கிராமத்தின் தலைவன். அந்தப் பிள்ளைகள் மேல் கையை வைத்தால் உங்கள் அத்தனை பேரையும் உருத் தெரியாமல் செய்து விடுவேன். முதலில் என்னைக் கொன்று தீர்த்து விட்டுப் பிறகு அந்தப் பிள்ளைகளிடம் செல்லுங்கள்" என்று அதிகாரமான குரலில் ஆணையிட்டார்.

எனக்காக அந்தப் பெரியார் தம்மையே தியாகம் செய்து கொள்ள முன் வந்தது எனக்கு என்னவோ போல் இருந்தது. திடீரென்று ஏதோ ஆவேசத்தில் உந்தப்பட்டவன் போல் அந்தப் பெரியாருக்கு முன்னால் சென்றேன். "ஐயா, பெரியவரே! நீங்கள் இந்தக் குண்டர்களிடம் இறைஞ்ச வேண்டாம். இந்த நவரத்தினம் ஒரு வீரத் தமிழன்; அது மட்டுமல்ல. ஒரு வீரத் தமிழனுக்குப் பிறந்தவன். வீரத் தமிழன் என்றுமே யாரைக் கண்டும் அஞ்சியதில்லை" என்று சொல்லி என் மார்பை நிமிர்த்திக் காண்பித்தேன்.

என்னை அப்படியே தூக்கிக் கொண்டு வந்து வீட்டுக்குள் போட்டு விட்டு வெளிக் கதவை இழுத்துச் சாத்தி விட்டார் கிராமத் தலைவர். பிறகு கதவுக்கு வெளியில் நின்று கொண்டு வெளியில் நிற்கும் கூட்டத்தைப் பார்த்து, "இப்பொழுது இங்கிருந்து போகப் போகிறீர்களா, இல்லையா?" என்று கத்தினார்.

கூட்டத்தினர் வாய் பேசாமல் அங்கிருந்து நழுவிச் சென்று விட்டனர்.

மறுநாளே நல்ல துணையுடன் என்னை மட்டக்களப்புக்கு அனுப்பி வைத்தார். இதயம் படபடக்க என் தாயைப் பார்க்க ஓடினேன். என்னுடைய தாயார் நோய் நொடி இன்றிச் சுகமாக வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். "அப்பா! வந்தாயா? எங்கே உன்னை உயிரோடு பார்க்கப் போகிறேனோ என்று துடிதுடித்துக் கொண்டிருந்தேன்" என்று ஆவலுடன் கேட்டுக்கொண்டே என்னை அணைத்துக் கொண்டாள். என் தங்கை "அண்ணா!" என்று கத்திக் கொண்டே ஓடி வந்து கழுத்தைக் கட்டிக் கொண்டாள்.

"ஆமாம்! உங்களுக்கு அபாயம் என்று அவசரத் தந்தி வந்ததே!" என்றேன்.

"நீ உடனே அங்கிருந்து புறப்பட்டு வர வேணும் என்று நான்தான் தந்தி கொடுத்தேன்" என்றார் என்னுடைய தாயார்.

"அம்மா! சிங்களவர்கள் எல்லாருமே அப்படி இல்லை அம்மா! நான் குடியிருந்த வீட்டுக்காரச் சிங்களவர் மட்டும் இல்லை என்றால் என்னை நீ உயிருடனேயே பார்த்திருக்க முடியாது. அந்த உத்தமப் பெரியவர்தான் என்னைக் காப்பாற்றினார்" என்றேன்.

"அந்தச் சிங்களப் பெரியவர் நீடூழி வாழட்டும்" என்றார் என்னுடைய தாயார்.

*** *** ***

இந்தச் சம்பவத்தைத் திரு நவம் கூறி முடித்ததும் எங்கள் காரை ஓட்டிவந்த டிரைவர், "ஐயா சொன்னதெல்லாம் உண்மைதான்; நானும் ஒரு சிங்களவன்தான். எனக்கு நன்றாகத் தமிழ் பேசவரும்!" என்றார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'ஒரு சிங்களவர் கார் ஓட்டுவதை நம்பியா நாம் இந்தக் காட்டுப் பிரதேசத்தில் பிரயாணம் செய்வது' என்ற பயம் ஏற்பட்டு விட்டது.

என் நிலையை ஒருவாறு புரிந்து கொண்ட அந்தச் சிங்கள டிரைவர் "நீங்கள் ஒன்றும் பயப்பட வேண்டாம். எல்லாம் அரசியல் வாதிகளான சிங்களவர்கள்தான் அப்படிக் கலவரம் செய்வார்கள். நாங்கள் எல்லாம் உங்கள் சகோதரர்கள். கிராமப்புறத்தில் வாழ்ந்து வருபவர்கள். எங்களை நம்புங்கள்" என்று சொல்லி விட்டுக் காரை ஓட்டினார். கார் தமிழ்த் தெய்வம் கோயில் கொண்டிருக்கும் கதிர்காமத்தை நோக்கி அறுபது மைல் வேகத்தில் பறந்து கொண்டிருந்தது. (தொடரும்)

# பிரார்த்தனை

## ஸ்ரீவத்ஸன்



பட்டினத்தடிகள் சொன்னார்:

''குடி இருந்த வீட்டுக்குக் கொள்ளி வைப்பேன்'' என்று. எங்கெங்கேயோ அலைந்தும் கூடத் தாயின் சடலத்துக்குத் தகனக்கிரியை செய்ய வந்து சேர்ந்துவிட்டார்.

மகன் கை நெருப்பு இல்லாவிடில் பெற்ற தாயின் நெஞ்சு வேகாது. தாய்க்கு நெருப்பிடக் கொடுத்து வைக்காத மகன் கடமையைச் செய்தவனாக முடியாது.

நேற்று பிற்பகல் ஒரு வயதான ஸ்திரீக்குச் சிதை மூட்டினேன், கடலையில். அவள் என் பெற்ற தாயாரில்லை. கலிகாரத் தாயாருமில்லை. நெருங்கிய உறவினரும் இல்லை. அனாதை ஸ்திரீயும் இல்லை. பின்பு அவள் யார்? அவளுக்கு நான் சிதை மூட்டுவானேன்? அவள் என்ன பிள்ளை இல்லாத மலடியா? பிள்ளை அவளை ஒதுக்கி விட்டானா? பிள்ளைக்கும் தாய்க்கும் ஏதாவது மனஸ்தாபமா? எதுவுமே இல்லை.

இரண்டு தினங்களுக்கு முன்புகூட, தான் இறந்து விடுவோம் என்று அவள் நினைக்கவில்லை. யார்தான் நினைத்தார்கள்? ஆனால் இன்று அவள் பிடிசாம்பல் ஆகிவிட்டாள்.

அதைக் காவிரியிலும் கரைத்தாகி விட்டது. ஒரு விதத்திலும் சம்பந்தமில்லாத நான் கரைப்பானேன்?

இரண்டாவது உலக மகா யுத்தம் முடிவடைந்த சமயம்.

எனக்கு அந்த ஊருக்கு மாற்றலாகியது. எங்கள் கம்பெனியின் கிளைகள்பினாங்கு, சிங்கப்பூர், ரங்கூன் இவ்விடங்களில்கூட உண்டு. அந்த ஊர் பட்டிக்காடும் இல்லை; பட்டணமும் இல்லை.

பெரிய வீடு ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். எனக்குக் கலியாணமாகி ஆறு மாதங்களே ஆகியிருந்தன. என் மனைவி அப்போது மூன்று மாதக் கர்ப்பிணி.

நான் அவசர வேலையாகப் பட்டணம் போயிருந்தேன். போய் விட்டுத் திரும்பி வந்தபோது உள்ளே நுழைந்ததும் திடுக்கிட்டேன்.

கூடத்தில் கட்டிலில் சோகமே உருவாகப் படுத்திருந்தாள் என் அருமை மனைவி பாமா.

பதைபதைத்துப் போனேன்.

''பாமா! என்ன இது?'' என்றேன்.

''நேற்றிரவு திடீரென்று கர்ப்பச் சிதைவு ஏற்பட்டு விட்டது. தெரிந்தவர்கள் ஒருவரும் இல்லை. எதேச்சையாக மூன்றாவது வீட்டிலிருந்த பாட்டி வந்து சேர்ந்தாள். அவள் இரவு முழுவதும் கண் விழித்து என்னைக் காப்பாற்றினாள். இல்லாவிட்டால் ரொம்பச் சிரமப்



பிப்ரவரி மார்ச் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற கதை

பட்டிருப்பேன். இந்த ஊர் லேடி டாக்டர் கூடத் திடீரென்று தந்தி வந்து மூன்று நாள் லீவிலே ஊருக்குப் போய் விட்டாளாம்!" என்றாள் என் மனைவி பாமா.

பாட்டி கஞ்சி தயாரித்துக் கொண்டிருந்தாள், சமையலறையில்.

பாட்டியைப் பார்த்ததும் என் மனசு என்னவோ செய்தது. அன்று முதல் முதல் அவள் முகத்தில் விழித்த வேளைதானோ என்னவோ. இந்த மூன்று வருஷ காலமும் அவளை என் தாயாரைப் போலவே நினைத்து வந்தேன். தாயாருக்குச் செய்யும் கடமையைப் போல், அவள் உடலுக்கும் தீயை மூட்டி அஸ்தியையும் கரைத்து விட்டேன்.

இரண்டு மூன்று நாட்கள் பாட்டிகூடவே இருந்து என் மனைவிக்கு உதவி செய்தாள்.

"பாட்டி! மூன்றாவது வீட்டிலே நீங்கள் தனியாகத்தானே இருக்கிறீர்கள்? எங்கள் வீட்டிலேயே வந்து இருந்து விடுங்களேன். எங்களுக்கும் பெரியவர்கள் யாரும் இல்லை. துணையாக இருக்கும்" என்றாள் பாமா. நானும் அவ்வாறே அந்த மூதாட்டியிடம் வேண்டிக் கொண்டேன்.

அடுத்த நாளே பாட்டி எங்களுடன் வந்து விட்டாள். என் மனைவியை அவள் தன் பெண்ணாகவே பாவித்து விட்டாள் என்றால் மிகையாகாது. என் மனைவி வாயிலாக, பாட்டியைப் பற்றியும் அவள் குடும்பத்தைப் பற்றியும் தெரிந்து கொண்டேன்.

★

**பா**ட்டி சிறு வயதிலேயே கணவனை இழந்தவள். ஆனால் அரை வயிற்றுக் கஞ்சிக்கு வைத்துவிட்டே போயிருந்தார் அவள் கணவர். பாட்டிக்கு ஒரே மகன் பாஸ்கரன். அவனை வளர்த்து ஆளாக்கி விட்டாள். அவன் பி. ஏ. பாஸ் செய்து விட்டதும் வேலைக்கு மனுக்கள் போட்டான். பெண்ணைப் பெற்றவர்கள் ஒருவர் பின் ஒருவராகப் படையெடுக்க ஆரம்பித்தார்கள்.

பாஸ்கரன் திடீரென்று ஒரு நாள் தலைவலி என்று படுத்தான். டாக்டர் வந்து பார்த்தார். டைபாயிட் ஜுரம். வரவர ஜுரம் அதிகமாகி விட்டது. இரண்டாவது வாரம் முடிந்து மூன்றாவது வார ஆரம்பம். அன்று அவன் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. டாக்டர் கைவிரித்து விட்டார். பாட்டி கதறி விட்டாள்.

"திருப்பதி வேங்கடாசலபதி! என் கண் முன்னேயே என் மகனை நான் பறி கொடுக்க மாட்டேன். இதற்குத்தானா இவ்வளவு சிரமப்பட்டு வளர்த்தேன்! என்னால் புத்திரசோகத்தைத் தாங்கவே முடியாது. என் பிள்ளைக்கு நீதான் உயிர்ப் பிச்சை கொடுக்க வேண்டும். கலியாணமானதும் மஞ்சள் வேஷ்டியுடன் மாலையும் கழுத்துமாக அவனையும் அவன் மனைவியையும் உன் சன்னிதானத்துக்கு அழைத்து வந்து பிரார்த்தனை செலுத்துகிறேன். அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடுங்கள்" என்று மெய்யுருக வேண்டிக் கொண்டாள்.

வைத்தியர்களுக்கெல்லாம் பெரிய வைத்தியராகிய ஸ்ரீ வேங்கடாசலபதி மனம் வைத்தார்; கருணை பாலித்தார்.

பாஸ்கரன் கண் விழித்தான். அவனுக்குப் படிப்படியாக உடம்பு தேறிவிட்டது.

அதுமுதல் அவள் மூச்சிலே ஏழுமலையான் பிரார்த்தனையும் சேர்ந்து இழை ஓடியது.

நல்ல குடும்பத்தில் உள்ள பெண்ணாகப் பார்த்து, பாஸ்கரனுக்கு விவாகம் செய்வித்து விடவேண்டியது. மஞ்சள் வேஷ்டியும் மாலையும் கழுத்துமாக மகனையும் மருமகளையும் திருப்பதிக்கு அழைத்துப் போக வேண்டியது. இதுதான் அவளுக்குச் சதா சிந்தனை.



ஓரிரண்டு பேர்கள் வந்தார்கள், ஜாதகம் கேட்டு. அதே சமயம்தான் மலேயா சர்க்காரிலே ஒருவிதத் தொழிற் பயிற்சிக்கு இந்தியாவிலிருந்து சில பட்டதாரிகளை அனுப்பச் சர்க்கார் திட்டமிட்டிருந்தார்கள். அதிர்ஷ்ட வசமாக, பாஸ்கரனுக்கும் அந்தச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவன் போகத் துடித்தான். ஆனால் பாட்டிக்கோ விருப்பமில்லை.

''கண்காணாத இடத்துக்குப் போக வேண்டாம். இங்கேயே ஒருவேலை தேடிக்கொண்டு கல்யாணம் செய்து கொள். திருப்பதிக்குப் பிரார்த்தனை செலுத்த வேண்டும்'' என்றாள்.

''பிரார்த்தனை எங்கே ஓடிவிடப்போகிறது, அம்மா? ஒரே ஒரு வருடம்தானே? நான் என்ன நிரந்தரமாக அங்கே தங்கிவிடப் போகிறேனா, என்ன! ஓடுகிற ஓட்டம் ஒரு வருஷம் காற்றாகப் பறந்து விடும். நான் காலேஜிலே படிக்கும்போது நீ தனியாக இல்லையா? இன்னும் ஒரு வருஷம் நான் காலேஜில் படிப்பதாக எண்ணிக் கொள். அங்கு போய் ஒரு வருடம் பயிற்சி பெற்று வந்துவிட்டால் எனக்கு நூற்றுக்கணக்கான ரூபாய் சம்பளம் கிடைக்கும்'' என்றான்.

எந்தத் தாயாருக்குத்தான் தன் மகனின் அதிர்ஷ்டத்தைக் கெடுக்க மனம் வரும்? தவிரவும் ஒரு வருஷ காலம்தானே? அவள் அதற்குச் சம்மதித்தாள்.

அவன் புறப்படும் தினம் வந்தது.

அவன் புறப்படும் போது, ''பாஸ்கரா! ஒரு வருஷம் ஆனதும் ஓடிவந்துவிடு. உன்னையும் உன் மனைவியையும் கல்யாண கோலத்தில் மாலையும் கழுத்துமாகத் திருப்பதி ஏழுமலையான் சன்னதிக்கு அழைத்து வருவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதால் அதை நிறைவேற்ற வேண்டியது உன் பொறுப்பு. நீ வருவதற்குள் உனக்கு ஒருபெண் பார்த்து வைக்கிறேன்'' என்றாள் அவள்.

''நீ பார்த்து எந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தாலும் எனக்குச் சம்மதம்தான், அம்மா! நான் அதை மீறவா போகிறேன்? உன் பிரார்த்தனையை நிறைவேற்றுவது என் பொறுப்பு'' என்று கூறிவிட்டுப் பாஸ்கரன் மலேயா புறப்பட்டு விட்டான்.

* * *

அவன் போய் ஒரு வருஷம் முடியும் தருணம். இன்னும் ஒரு வாரத்தில் அவன் புறப்பட்டு விடுவான் இந்தியாவுக்கு. ஆனால்?

ஜப்பான் அமெரிக்காவுக்குச் சொந்தமான பேர்ல்ஹார்பரைத் தாக்கி யுத்தத்தில் திடீரென்று குதித்து விட்டது. பிரிட்டிஷாருக்குச் சொந்தமான இரு பெரிய கப்பல்களை மூழ்கடித்து விட்டது. சிங்கப்பூரில் குண்டு மழை பெய்தது. சரித்திரமே கண்டிராத வகையில் மிகச் சிறிய காலத்தில் மலேயா நாடு ஜப்பானியர் வசமாகி விட்டது. இந்தியாவில் உள்ளவர்களின் நெருங்கிய உறவினர்கள் மலாய் நாட்டில் இருந்து வந்தார்கள். தங்கள் உறவினர்கள் என்ன ஆனார்கள் என்று தெரியாமல் இந்தியாவில் உள்ளவர்கள் துடிதுடித்தார்கள். அவர்களில் பாட்டியும் ஒருத்தி.

''ஏழுமலையப்பா! என் மகன் உயிருடன் திரும்பி வரவேண்டும். நல்ல குடும்பத்தில் வந்த பெண்ணைக் கல்யாணம் செய்வித்து உன் சன்னதிக்கு அவர்களை மாலையும் கழுத்துமாக அழைத்து வருகிறேன்'' என்று பிரார்த்தனை செய்து கொண்டாள்.

யுத்தம் முடிவடைந்தது. பாட்டி எப்படித்தான் உயிருடன் இருந்தாளோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

மலாய் நாட்டில் உள்ளவர்கள் தாய்நாட்டில் உள்ளவர்களுக்குக் கடிதங்கள் போட ஆரம்பித்தார்கள்.

பலர் ஊர் திரும்பினார்கள். பாட்டியின் பிள்ளையும் கடிதம் போட்டான். பாட்டி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள். அவன் கூடிய சீக்கிரம் வருவதாக எழுதினான். பாட்டிக்கு அவன் மாதா மாதம் அதிகமாகவே பணம் அனுப்பிக் கொண்டு வந்தான்.

பாட்டியும் ஒரு வீட்டில் வாடகைக்கு இருந்து கொண்டு மகனின் வரவுக்காக எதிர் பார்த்திருந்தாள். அவன் அனுப்பும் பணத்தில் சேர்த்து வைத்து மருமகளுக்கு நகை வாங்கிச் சேர்க்கலானாள்.

அந்தச் சமயத்தில்தான் நாங்கள் அவ்வூருக்கு வந்தோம். என் மனைவிக்குக் கர்ப்பச் சிதைவு ஏற்பட்டது. அந்தப் பாட்டி அதற்கு உதவி செய்தாள். பாட்டி எங்கள் குடும்பத்துடன் சேர்ந்து வசிக்க ஆரம்பித்து விட்டாள். இதுதான் பாட்டியைப் பற்றிய கதை.

* * *

கிட்டத்தட்ட ஒரு வருஷ காலம் வேகமாக ஓடி விட்டது.

''தை மாதம் பிறந்து விட்டது. உடனே புறப்பட்டு வா. கல்யாணம் செய்வித்துத் திருப்பதிக்கு மாலையும் கழுத்துமாக உன்னை அழைத்துப் போக வேண்டும்'' என்று மகனுக்குக் கடிதம் எழுதினாள் பாட்டி.

''இரண்டு வருட காலத்துக்கு ஒப்பந்தம் எழுதிக் கொடுத்திருக்கிறேன், அம்மா. அது முடியும்வரையில் ஊருக்கு



# பகலானாலும், இரவானாலும், ஒரு

# காமிரா கொண்டு வீட்டினுள்

காலையிலும், குளிப்பாட்டும்பொழுதும், ஆகாரத்தின் பொழுதும் அல்லது அயர்ந்து தூங்கும்பொழுதும் உங்கள் சின்ன ராஜா எவ்வளவு அழகாகத் தோற்றமளிக்கிறான்! "இப்பொழுது மட்டும் அவனைப் படம் பிடித்திருந்தால்" என்று எவ்வளவு தடவைகள் நீங்கள் நினைத்ததுண்டு! இன்றே ஒரு 'கோடக்' காமிரா மற்றும் ஃப்ளாஷ்ஹோல்டர் கொண்டு உங்கள் ஆசையை நிறைவேற்றுங்கள்!

ஃப்ளாஷின் வெளிச்சத்தில் படம் எடுப்பது மிகவும் எளிது. தமாஷாகக்கூட. இதற்கு விசேஷமாக தெரியவேண்டியது ஒன்றுமில்லை. உங்கள் காமிராவில் ஃப்ளாஷ்ஹோல்டரைப் பொருத்தி, பல்பை மாட்டி, எப்பொழுதும் போல் குறிபார்த்து எடுக்கவும். அவ்வளவே தான்! ஃப்ளாஷின் வெளிச்சம் போதிய அளவில் தேவையான இடத்தில் விழுவதால், அழகிய படங்கள் எடுப்பது மிகவும் எளிது.

கவர்ச்சிகரமான படங்கள் எடுப்பதற்கேற்ற அரிய வாய்ப்புகள் வீட்டினுள்தான் 'ஏற்படுகின்றன' என்பதை ஞாபகத்தில் வையுங்கள். அந்த அரிய சந்தர்ப்பங்களை நழுவவிடாதீர்கள். மிதமான விலையுள்ள 'கோடக்' ஃப்ளாஷ் ஹோல்டர் ஒன்று வாங்கி அழகிய படங்கள் பிடித்து என்றும் கண்டு மகிழுங்கள்!

'கோடக்' ஃப்ளாஷ்ஹோல்டர் மாடல் II, பிரௌனியும் காமிராக்களுக்குப் பொருந்தும். விலை ரூ. 31/-. 'கோடக்' ஃப்ளாஷ்ஹோல்டர்கள் பல்வேறு ரகங்களில் உள்ளன. அவைகளில் ஒன்று உங்கள் காமிராவிற்குப் பொருந்தும்.

- ப்ரௌனி 'க்ரெஸ்டா' காமிரா
- 'ப்ரௌனி' ரிப்லெக்ஸ் காமிரா
- சிக்ஸ்-20 கோடக் 'ஜூனியர்' II காமிரா
- கோடக் 'ரெடினெட்' II காமிரா

விலைக் குறிப்பில் வரி அடங்கவில்லை



## நல்ல தெளிவான படங்கள் எடுக்க 'கோடக்'

# ‘கோடக்’ பிளாஷ்

## அழகான படங்கள் பிடிக்கலாம்



கோடக் லிட். (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது. கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது) பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

**பிலிமையே எப்பொழுதும் உபயோகியுங்கள் !**

அனுப்ப மாட்டார்களே'' என்று எழுதினான் பாட்டியின் மகன் பாஸ்கரன்.

பாட்டி நம்பிக்கையை விடவில்லை. அநேகமாக இரண்டாவது வருஷம் முடியும் தருணம். அந்தச் சமயம்தான் எங்கள் காரியாலய விஷயமாகச் சிங்கப்பூரில் உள்ள காரியாலயத்துக்குப் போய் வரவேண்டியிருந்தது.

ஆபீஸ் செலவில் சிங்கப்பூர் போய்ச் சுற்றிவிட்டு வரவும் பாட்டியின் பிள்ளையைப் பார்த்துச் சொல்லிவிட்டு வரவும் நானே சிங்கப்பூர் போனேன்.

நான் சிங்கப்பூர் போனதும் அவனுடைய வீட்டுக்குப் போனேன்.

வீட்டை அடையாளம் கண்டு பிடித்துக் கொண்டு போனேன். வீட்டுக் கதவு சாத்தியிருந்தது. கதவைத் தட்டினேன்.

ஒரு மலாய்க்காரி வந்து கதவைத் திறந்தாள். எனக்கு அவள் மொழி தெரியாது. என்ன மொழியில் கேட்பது எனத் திகைத்தேன். அதற்குள், ''நீங்கள் யார்?'' என்று கேட்டாள் அவள் தமிழில்.

அவள் நல்ல தமிழில் சுத்தமாகப் பேசியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

''நான் இந்தியாவிலிருந்து வருகிறேன். பாஸ்கரனைப் பார்க்க வந்தேன். அவன் தாயார் என் வீட்டில் இருக்கிறார்'' என்றேன்.



''அப்படியா? உள்ளே வாருங்கள்'' என்று வரவேற்றாள் அவள்.

''நீங்கள் யார்? பாஸ்கரன் இங்குதானே இருக்கிறார்?'' என்று கேட்டேன்.

''நான் அவருடைய மனைவி'' என்றாள்.

எனக்கு உலகமே இருண்டது. வானம் இடிந்து தலையில் விழுந்ததுபோல் ஆயிற்று. ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை.

'மகனுக்கு நல்ல இடத்தில் மணம் செய்வித்து மாலையும் கழுத்துமாய் மஞ்சள் வேஷ்டியுடன் மகனையும் மருமகளையும் ஏழுமலையான் சன்னதிக்கு அழைத்து வருவதாக ஏழு வருஷங்களுக்கு முன்பு பிரார்த்தனை செய்து கொண்டு பிரார்த்தனையை நிறைவேற்ற மூச்சைக் கையில் பிடித்துக் கொண்டிருக்கும் தாயார் எங்கே? அதைப்பற்றியே சிந்திக்காமல் மலாய்க்காரியை மணம் செய்து கொண்ட மகாபாவி எங்கே? அவனைக் கண்டம் துண்டமாக வெட்டிப் போட்டால் என்ன?' என்று எனக்கு ஆத்திரம் வந்தது.

என் முகத்தில் தோன்றிய வெறுப்பை அவள் தெரிந்து கொண்டாள்.

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரிகிறது. ஆனால் இதற்கு நான்தான் பொறுப்பாளி. அவர் பேரில் கொஞ்சம்கூடக் குற்றமில்லை. முழுவதையும் நானே சொல்லி விடுகிறேன்'' என்று கூறினாள்.

''அவன் எங்கே; வீட்டுக்கு வருவதற்கு நேரமாகுமா?'' என்று கேட்டேன்.

''வந்து விடுவார். சற்று இருங்கள்'' என்று சொல்லி விட்டு அவள் பேச ஆரம்பித்தாள்.

* * *

''என்னுடைய தகப்பனாரும் ஒரு தமிழர்தான். இங்கு ஒரு ரப்பர்த் தோட்டத்தில் வேலை செய்து வந்தார். அப்போது அவருக்கும் ஒரு மலாய்க்காரிக்கும் சிநேகிதம் உண்டாகி அவர் அவளை மணந்து கொண்டார். அவர்கள் பெண்தான் நான்.

எனக்குப் பத்து வயது இருக்கும்போதுதான் என் தாயார் இறந்து விட்டாள். அதன் பிறகு என் தகப்பனார் விவாகம் செய்து கொள்ளவில்லை. சிறு வயதிலிருந்தே எனக்குத் தமிழில் அசாத்திய மோகம். மலாய் பாஷையுடன் நன்றாகத் தமிழும் கற்றுக் கொண்டேன்.

என் தந்தைக்குத் தமிழர்கள் என்றால் அலாதிப் பிரியம். எனக்கும் தமிழ் நன்றாகப் பேச வரும்; எழுதவும் வரும். மலாய் பாஷையும் பேசுவேன். எனக்கு வயது வந்ததும் என்னைத் தமிழர் ஒருவருக்கு மணம் செய்து வைத்துவிட என் தந்தை முயன்றார். அந்தச் சமயம் தான் ஜப்பான் யுத்தம் வந்தது; கடுமையான குண்டு வீச்சு நடந்தது. நித்யகண்டம் பூர்ணாயிசா யிருந்தது. அன்று வெளியில் போயிருந்தார் என் தந்தை. அபாய அறிவிப்புச்சங்கு ஊதியது.

ஜப்பானியர்கள் கண் மூக்குத் தெரியாதபடி குண்டு வீசி விட்டார்கள். அபாய அறிவிப்பு நீங்கியதும் வெளியில் வந்து பார்த்தேன். தெருக்கோடியில் என் தந்தையும் இன்னொருவரும் கிடந்தார்கள். இருவரையும் ஏ. ஆர். பி. தொண்டர்கள் உதவியுடன் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தேன். டாக்டர் வந்து பார்த்தார். தந்தையை ஒரு கட்டிலிலும் அவரை மற்றொரு கட்டிலிலும் படுக்க வைத்தேன். என் தந்தைக்கு உடனேயே அதிர்ச்சி நீங்கி விட்டது. !

அன்று முழுவதும் அவர் கண் விழிக்கவில்லை. மறுநாள் கண் விழித்தார்;

'நான் எங்கே இருக்கிறேன்' என்று நல்ல தமிழில் கேட்டார். நான் விளக்கினேன்.

அப்புறம் அவர் ஒருவாரம் வரையில் எங்களுடனேயே தங்கி விட்டார்.

மறுவாரம் என் தந்தை வெளியில் போனவர் குண்டு வீச்சுக்குப் பலியாகி விட்டார். நான் அனாதையாகி விட்டேன். அவர் உடம்பு குணமானதும் என்னிடம் சொல்லிக்கொண்டு தம் இருப்பிடம் போக நினைத்தார்.

'என்னைக் கைவிட்டு விடாதீர்கள். அப்பாவும் போய் விட்டார். நான் அனாதை' என்று அவர் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கதறினேன்.

'பயப்படாதே! நான் அடிக்கடி வந்து போகிறேன்' என்று சொல்லிச் சென்றார்.

அதற்கு நான் 'உங்களை விட்டு என்னால் உயிருடன் இருக்க முடியாது. என்னை நீங்கள் ஏற்காவிடில் மறுமுறை அபாய அறிவிப்புச் சங்கு ஊதும்போது நான் குண்டு வீச்சுக்குத் தலையைக் கொடுப்பேன்' என்றேன்.

அவர் பயந்துவிட்டார். ஒருநாள் அவகாசம் கேட்டார். அன்றிரவு முழுவதும் அவர் தூங்கவே இல்லை. மறுநாள் காலையில் அவர் சம்மதித்து விட்டார்.

அன்று முதல் நாங்கள் சதிபதிகளாகி விட்டோம். அவர் பலர் அறிய என்னைத் திருமணமும் செய்து கொண்டார்.

ஐந்து மாதங்களுக்கு முன்பு ஒரு நாள். ஆபீஸிலிருந்து வந்தவர் படுத்து விட்டார். ஒரேவாரம் ஜுரம் அடித்தது. அன்றிரவு அவர் நிலைமை மோசமாகி விட்டது.

என்னிடம் அவர், 'இதோ பார். இவ்வளவு காலமாகச் சொல்லாத ரகசியத்தை உன்னிடம் சொல்லுகிறேன். ஊரிலே என் தாயார், நான் திரும்பிவரப்போகிறேன், வந்ததும் ஒரு பெண்ணை எனக்குக் கலியாணம் செய்வித்து மாலையும் கழுத்துமாய் மஞ்சள் வேஷ்டியும் அதுவுமாக என்னையும் மருமகளையும் திருப்பதி ஏழுமலையான் சன்னதிக்கு அழைத்துப் போக வேண்டும் என்ற பிரார்த்தனையை நிறைவேற்றத் துடித்துக் கொண்டிருக்கிறாள். இங்கு நானோ கிருகஸ்தாஸ்ரமத்தில் ஈடுபட்டு எத்தனையோ நாட்கள் ஆகி விட்டன. இதை அவள் அறிந்தால் தாயுள்ளம் எவ்வளவு வேதனை அடையும் என்பதை எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை' என்றார்.

எனக்கு அதைக் கேட்கும்போது அழுகை அழுகையாக வந்தது.

அவர் மேலும் தொடர்ந்தார்: 'உன்னை ஏற்று என் தாயாரின் பிரார்த்தனையைக் கைவிடுவதா? பிரார்த்தனைக்குப் பயந்து உன்னைக் கைவிடுவதா? இதில் எதையும் விடமுடியாது. வடதுருவத்தையும் தென் துருவத்தையும் யாராவது இணைக்க முடியுமா? இக்கட்டான நிலைமை உண்டாகி விட்டது. இதைவிட நான் மலேயா வந்த மறு வருடமே யுத்தம் வராதிருந்தால் திரும்பி ஊர் போய் அம்மாவின் பிரார்த்தனை நிறைவேற வழி செய்திருக்கலாம். அல்லது குண்டு வீச்சில் இறந்திருந்தால் ஒரு கவலையும் ஏற்பட்டிருக்காது. உன்னை ஏற்பதால் அம்மாவைக் கைவிடும் பாவமோ, அம்மாவின் பிரார்த்தனைக்காக உன்னைக் கைவிடும் பாவமோ செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்காது. என்ன சொல்லி என்ன? ஆண்டவன் நம்மை ஆட்டி வைக்கும் போது அதற்கு எதிர் ஆட்டம் ஆட நம்மால் முடியுமா? நடந்தது நடந்து விட்டது. இனி நான் அதிக நேரம் உயிருடன் இருக்க முடியாது. நான் இறந்து விட்டாலும் என் தாயார் உள்ளவரையில் மாசா மாசம் நான் அனுப்புவது போல் பணத்தை மட்டும் தவறாமல் அனுப்பி வா.

''எப்போதாவது என் தாயார் கடிதம்எழுதினால் நாலே வரியில் 'கூடிய சீக்கிரம் வந்து சேருகிறேன்' என்று நான் எழுதுவது போல எழுதி விடு. நான் இறந்து விட்டதையோ அல்லது நான் உன்னை மணம் செய்துகொண்டதையோ என் தாயாருக்கு அறிவிக்க வேண்டாம்!'' என்றார்.

அன்றிரவு அவர் காலமாகி விட்டார். இன்னும் இரண்டு மாதகாலம் உயிரோடு இருந்தாரானால் குழந்தையையும் பார்த்திருக்கலாம். அவர் சொல்படி மாதாமாதம் கடந்த ஐந்து மாதகாலமாகவே நான்தான் பணம் அனுப்பி வருகிறேன். என் உயிர் உள்ள வரையில் இந்தக் கடமையிலிருந்து சிறிதும் தவற மாட்டேன்.

இதை எல்லாம் உங்களிடம் சொல்லி விட்டேன். உங்களை என் சகோதரனாகவே பாவிக்கிறேன். இந்த ரகசியத்தைக் காப்பாற்றி அவர் தாயார், அதாவது என் மாமியார், மனம் தளராதபடி அவர்களைக் காப்பாற்றுங்கள்'' என்று முடித்தாள் அந்தப் பெண்.

அந்தப் பையனின் உயரிய குணமும் அந்த மலாய்க்காரியின் பெருந்தன்மையும் என்னைத் திக்குமுக்காட வைத்தன. பாட்டிக்குப் பேரனோ, பேத்தியோ இரண்டு மாதங்களில் பிறக்கப் போகிறது. அதைப் பாட்டியும் பார்க்க முடியாது. பாஸ்கரனும் பார்க்க முடியாது. நல்ல குழந்தை!

பாவம், மலாய்க்காரி அவளைப் போலக் குணவதி இருக்கவே முடியாது. இக்கட்டான நிலையில் அகப்பட்டுக் கொண்டு தவித்த பாஸ்கரனிடமும் இரக்கம் அதிகமாகியது. அவன் தாயாரிடமோ அதைவிடப் பன்மடங்கு இரக்கம் உண்டாகி விட்டது.

★

ஊர் திரும்பி விட்டேன். ''பாஸ்கரனைப் பார்த்தீர்களா? என்ன சொன்னான்? எப்பொழுது வருகிறான்? கலியாணத்துக்கு என்ன சொன்னான்? திருப்பதி பிரார்த்தனையை அவனுக்கு ஞாபகப்படுத்தினீர்களா?'' என்று ஆவலுடன் கேட்டாள் பாட்டி.

''இரண்டே மாதம், பாட்டி!'' என்றேன். அங்கே கேள்விப்பட்ட விஷயத்தை என் மனைவியிடம் கூடச் சொல்லாமல் மனத்தைக் கட்டுப்படுத்தி விட்டேன். இரண்டு மாத காலம் ஆகிவிட்டது.

அன்று மத்தியானம் பாட்டி என் மனைவியிடம், ''அப்பாடா! இப்போதுதான் வெங்கடாசலபதி கண்ணைத் திறக்கப் போகிறார்.

## தியாகம்

மகாகவி ரவீந்திரநாத் தாகூரின் அற்புதமான வங்காளிக் கதைகளில் ஒன்று 'தியாகம்'. தாகூரின் கதைகளில் ஊறித் திளைத்த பிரபல ஆசிரியர் த. நா. குமாரசாமி அவர்கள் இதைத் தமிழில் வழங்குகிறார். இந்தச் சிறு கதை 24—3—57 'கல்கி' இதழில் வெளியாகிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

பிரார்த்தனை செய்துகொண்டு ஏழு வருடங்களாகி விட்டன. இதுவரை வேளை வரவில்லை. இப்பொழுது வந்துவிட்டது. பிரார்த்தனை செலுத்த!'' என்றாள் பாட்டி.

அவளது குரலில் தொனித்த திட நம்பிக்கை என்னைத் திடுக்கிட வைத்தது.

அன்றிரவு என் மனைவி என்னிடம், ''ஏன்னா! எங்க அண்ணா பெண் சந்திராவைப் பாட்டி பிள்ளைக்குக் கொடுத்தால் என்ன? ஜாதகத்துக்கு எழுதட்டுமா ?'' என்று கேட்டாள்.

என் வாக்கில் சனி இருந்தது போலிருக்கிறது. எந்த ரகசியத்தை மனைவிக்குக் கூடத் தெரியக்கூடாது என்று இதுவரையில் காப்பாற்றி வந்தேனோ, அதை மறந்து விட்டேன்;

''பாட்டி பிள்ளைக்கா? அவன்தான் மலாய்க்காரியைக் கலியாணம் செய்து கொண்டுவிட்டானே! குழந்தையும் பிறக்கப் போகிறதே!'' என்று சொல்லி விட்டேன். அப்புறம் தான் விழித்துக் கொண்டேன். நல்ல வேளை! பாட்டியின் பிள்ளை இறந்ததைச் சொல்லவில்லை.

''பாமா! தப்பித் தவறிப் பாட்டியிடம் சொல்லிவிடாதே!'' என்று எச்சரித்தேன்.

என் மனைவி ஆச்சரியப்பட்டாள்.

அதேசமயம் ''பாஸ்கரா! வேங்கடாசலபதிக்கு அபராதம் செய்து விட்டாயேடா. ஏழுவருடமாகப் பிரார்த்தனை செய்து கொண்டதைச் செலுத்த விடாமல் செய்து விட்டாயே? தெய்வ குற்றம் பொல்லாததாச்சே. இதற்குத்தானா மூடுமந்திரம் செய்தாய்?'' என்று 'ஓ'வென்று அலறியபடியே பாட்டி உள்ளே வந்து விட்டாள். அடுத்தகணம் அவள் மூர்ச்சையடைந்து விட்டாள்.

எப்படிப்பட்ட மடையன் நான்! அவசரப்பட்டு மனைவியிடம் சொல்லி அதைப் பாட்டியும் கேட்கும்படி ஆகிவிட்டதே! பாட்டியின் அதிர்ச்சிக்கு நானல்லவா பொறுப்பாளி? நல்லவேளை! பாஸ்கரனின் சாவைப் பற்றிச் சொல்லாதவரையில் க்ஷேமம்தான்.

ஓடினேன் டாக்டரிடம். அவர் வந்து பார்த்து உதட்டைப் பிதுக்கினார்.

விடியற்காலம். ஐந்து மணிக்குப் பாட்டி இலேசாகக் கண் திறந்தாள்.

''யார் பாஸ்கரனா, இதோ வருகிறேனடா கண்ணா. உன் பேரிலே எனக்குக் கோபமில்லை. உன்னை நான் மன்னித்து விடலாம். ஆனால் வேங்கடாசலபதி நான் பிரார்த்தனை செலுத்தாததற்கு என்னை மன்னிக்க மாட்டாரே! இதோ வருகிறேன், பாஸ்கரா !'' என்றாள். அடுத்த நிமிஷம் தலை தொங்கிவிட்டது.

இறந்துபோன பாஸ்கரனைப் பாட்டி சாகும்போது மனக் கண்ணில் கண்டு விட்டாள் போலிருக்கிறது. இல்லாவிடில் 'இதோ வருகிறேன் பாஸ்கரா !' என்று சொல்லுவாளா ?

நானே பாட்டிக்கு நெருப்புப் போட்டேன்.

'பாட்டியின் மரணத்துக்கு நானேதான் ஜவாப்தாரியோ! எதற்காக மனைவியிடம் இதைச் சொன்னேன்?' என்று என்னையே நொந்து கொண்டேன்.

மறுநாள் பாஸ்கரனின் மனைவிக்குப் பாஸ்கரனின் தாயார் இறந்து விட்டதைக் கடிதம் மூலம் தெரிவித்தேன்.

என்னுடைய கடிதம் பாஸ்கரனின் மனைவிக்குக் கிடைக்கும் அதே நேரத்தில் பாஸ்கரனின் மனைவி எழுதிய கடிதம் என் கையில் கிடைத்தது. பிரித்துப் பார்த்தேன்.

பாஸ்கரனுக்குப் பெண் குழந்தை பிறந்திருப்பதைக் கடிதம் சொல்லியது. கடிதத்தில் குழந்தை பிறந்த மலேயா மணி குறிப்பிடப்பட்டிருந்தது. நம் நாட்டு மணிக் கணக்கு போட்டுப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! பாஸ்கரனின் தாயார் இறந்தது வியாழக்கிழமை மூதல் தேதி விடியற்காலை ஐந்து மணி. பாஸ்கரன் மனைவிக்குப் பெண் குழந்தை பிறந்திருப்பது வியாழக் கிழமை மூதல் தேதி விடியற்காலை ஐந்தரை மணி.

என் மனைவியிடம் இதைச் சொன்னேன்.

''பார்த்தீர்களா! என்ன ஆச்சரியம்! பாட்டிக்கு மகனிடம் உள்ள பாசம் அங்கேயே போய்ப் பெண்ணாய்ப் பிறந்து விட்டாள். அந்தக் குடும்பத்தை விட்டு அவள் வேறு எங்கே போவாள்?'' என்றாள் என் மனைவி.

''எல்லாம் வேங்கடாசலபதியின் செயல்!''

பாட்டி தன் மருமகளுக்காகச் சேர்த்து வைத்திருந்த நகைகளை எடுத்து, பாஸ்கரன் மனைவிக்கு ரிஜிஸ்தர் பார்ஸலில் அனுப்பினேன். குழந்தைக்குப் பாட்டியின் பெயர் — மீனு என்று வைக்கும்படி எழுதினேன்.

---

<u>அருள்வாக்கு</u>

நித்தியம் மனத்தினாலும் வாக்கினாலும் உடம்பினாலும், பணத்தினாலும் நல்ல காரியங்களைச் செய்துவரவேண்டும். நமக்குக் கிடைக்கும் பணத்தில் ஒரு தம்பிடியையாவது ஒவ்வொரு நாளும் தர்மத்துக்காக உண்டியல் கட்டிப் போடவேண்டும். அந்தப் பணத்தைக் குடும்பத்துக்குப் பிரயோசனப்படுத்தாமல் தர்மத்துக்கு விநியோகம் பண்ணவேண்டும். நம்முடைய பணமெல்லாம் நம்முடையதல்ல என்ற ஞாபகம் இருக்க வேண்டும். இந்த உடம்பு போனவுடன் அது நம்முடைய சம்பத்தை விட்டுவிடும். அந்தப் பணத்தை நம்முடையதாகச் செய்ய வேண்டுமானால் நாம் எங்கேபோனாலும் செல்லக்கூடிய நோட்டாக மாற்றவேண்டும். மேலுலகத்தில் இந்தப் பணம் செல்லாது. இந்தப் பணத்தைத் தர்ம நோட்டாக மாற்றி விட்டால் அது எங்கேயும் செல்லும். அப்பொழுது இந்தப் பணமும் நமக்குச் சொந்தமாகும். ஆகையால் குழந்தை முதல் பெரியவர்கள் வரையில் தனித்தனித் தர்மத்துக்காக ஒவ்வொரு உண்டியல் வைத்துக் கொள்ளவேண்டும். நாம் பிறந்தது முதல் இந்த மாதிரிப் பழக்கங்களை வைத்துக் கொண்டிருந்தால் இதற்குள் எவ்வளவோ செய்திருக்கலாம். நம்முடைய காரியத்தை நாம் மறந்து விட்டோம். குழந்தைகளுக்கென்றே இப்பொழுது தர்ம உண்டியல் ஏற்படுத்த வேண்டும். அவர்களுக்காக இன்ஷ்யூர் செய்வதில்லையா? இந்த இன்ஷ்யூரன்ஸ் இந்தப் பிறவிக்குப் பின்பும் (After life) உபயோகப்படுமாதலால் இதை வாழ்வுக்குப் பிறகுமுள்ள க்ஷேமநிதி (After life Insurance) என்று கருத வேண்டும். — ஸ்ரீ சங்கராச்சாரியார்

---



# அது "கௌ & கேட்" பார்வை

குருகுருப்பான கண்கள், உறுதியான தேக அமைப்பு, நன்கு வளர்ச்சி பெற்ற எலும்புகளின்மேல் உள்ள வலுவான சதைப்பற்றுகளின் மூலம், நீங்கள் அது ஒரு "கௌ அண்ட் கேட்" குழந்தை என எப்பொழுதும் நிச்சயமாக சொல்லலாம். எலும்புகளுக்கும் சதைகளுக்கும் நன்கு ஊட்டமளிக்கக்கூடிய ஓர் இயற்கையான உணவு "கௌ அண்ட் கேட்" மிக எளிதில் ஜீரணம் ஆகக்கூடியது. எப்பொழுதும் குழந்தை குதூகலமாகவும், திருப்தியுடன் காணப்படும்.

உங்கள் குழந்தைக்கு "கௌ அண்ட் கேட்"டை வற்புறுத்திக் கேளுங்கள்.




5450

**COW & GATE MILK FOOD**

*The* FOOD *of* ROYAL BABIES

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

OCG/24 RZ

---

# பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## (பிரைவேட்) லிமிடெட்

ரு. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414 ... மதராஸ் - 5
தந்தி: 'EVERMANS'... போன்: 85834

சேரக் கடைசி தேதி 20-3-1957 ... முதல் ஏலத் தேதி 23-3-1957

| 25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (4-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப் படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

## எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

டெல்லி கிளை ஆபீஸ் விலாசம்: B. 6, பிளாக் III டெல்லி-அஜ்மீரி கேட் ஸ்கீம், புது டெல்லி-1

★★★ காஞ்சி காமகோடி பீடத்தைக் கடந்த ஐம்பது ஆண்டுகளாக ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் அலங்கரித்து வருகிறார்கள்; தர்மத்தையும் பக்தி மார்க்கத்தையும் மக்களிடையே பரப்பி வருகிறார்கள். பொன் விழா வைபவம் இவ்வாரத்தில் நடைபெறுகிறது. இத்தருணத்தில், ஆதி சங்கரரையும் காஞ்சியையும், காமகோடி பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ சங்கராச்சாரியாரையும் இவ்வார அட்டையில் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். ஸ்ரீ சுவாமிகளைப்பற்றிய கட்டுரை ஒன்றையும் கீழே காணலாம். —ஆசிரியர்

# ஆத்மீகத் துறையில் அளவற்ற சாதனைகள்

ஜி. கிருஷ்ணமூர்த்தி பி.ஏ.பி.எல்.

குரு பக்தி பெரிதா? கடவுள் பக்தி பெரிதா? கடவுள் பக்திதான் பெரிது என்று சாதாரண அறிவு படைத்தவர்களாகிய நமக்குத் தோன்றும்.

ஆனால் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் புலனாகும், குரு பக்திதான் மேலானது என்று!

கடவுள் நமது வழிபாட்டினால் மகிழ்ந்தாரானால் நமக்கு எல்லாவித ஐசுவரியங்களையும் அருள்வார்; சுக போகங்களையும் தருவார்.

ஆனால் குரு....?

கடவுளையே நமக்கு அருள்வார். ஐசுவரியங்களுக்கெல்லாம் மேலான ஐசுவரியமான கடவுள் என்னும் ஐசுவரியத்தையே அருள்வார்.

ஆகவே, எந்த பக்தி சிறந்தது?

குருபக்தி தானே?

இதையே பெரிய பெரிய மகாத்மாக்களும் பக்த கவிகளும் அழகழகான சுலோகங்கள், பாடல்கள் மூலம் எடுத்துரைத்திருக்கிறார்கள்.

ஆத்மிகத் துறையிலே அளவிறந்த சாதனைகளைப் புரிந்து உலகத்துக்கே தலையாக நிற்கும் நமது பாரத தேசம் எத்தனை எத்தனையோ மகான்களை உலகத்துக்கு அளித்துள்ளது.

காலடியிலே அவதரித்து மூன்று பத்துகளைத் தாண்டுவதற்குள்ளாகவே ஆத்மிகத் துறையில் உலகம் வியக்கும் அற்புத சாதனைகளைச்செய்தவர் ஆதிசங்கரர். ஈசுவரனின் அவதாரம் என்றே உலகோரால் போற்றப்படும் சங்கரர் முப்பத்திரண்டு வயது முடிவதற்குள்ளாகவே முழு வாழ்வு வாழ்ந்து இறைவனோடு ஒன்றறக் கலந்து விட்டார். ஆயினும் உலகத்துக்கெல்லாம் ஞான குருவாகத் திகழ்கிறார். அவரால் ஸ்தாபிக்கப் பெற்ற ஐந்து பீடங்களிலே மிக முக்கியமாக விளங்குவது காஞ்சி காமகோடி பீடம் ஆகும். நகரங்களுள் சிறந்த நகரம் என்ற புகழ் பெற்றதும் இந்தக் காஞ்சிதானே?

இத்தகைய காஞ்சி காமகோடி பீடத்தை-ஆதிசங்கரரின் வழிவழி வந்த குரு பரம்பரையை - அறுபத்தெட்டாவது யதீந்திரராக அலங்கரித்து வருகிறார்கள், ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

இளம் பிராயத்தில், அதாவது நைஷ்டிகப் பிரும்மச்சாரியாக இருந்து வந்த காலத்திலேயே இம் மகான் துறவறத்தை மேற்கொண்டார்கள். பிரும்மசரியம், ஆகார நியமம், மௌனம், உபவாசம் போன்ற தமது ஆசிரமத்துக்குள்ள ஆசார நியமங்களை முறைப்படி அனுஷ்டித்துத் தவசிரேஷ்டராக விளங்கி வரும் சுவாமிகள், கடந்த ஐம்பது ஆண்டுகளாகப் பீடத்தின் பெருமையை ஓங்கி வளரச் செய்து வருகிறார்கள். மெய், வாய், மனம் மூன்றினாலும் உலகத்தின் நலனைப் பேணி வருகிறார்கள். தமது உள்ளத்தையும் உடலையும் பக்குவப்படுத்தி ஆத்மானந்தத் திலே ஊறித் திளைத்து வருகிறார்கள்.

சுவாமிகள் பூர்வாசிரமத்திலே, அத்வைதத்துக்குத் தூண் போல் இருந்தவரும், அறிவுக் களஞ்சியமாகவும் அமைச்சர் திலகமாகவும் திகழ்ந்தவருமான கோவிந்த தீக்ஷிதரின் வழி வழி வந்தவர். கர்நாடக சங்கீதத்தின் மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசுவாமி தீக்ஷிதர், எழுபத்திரண்டு மேளகர்த்தாக்கள் சம்பந்தமான நூலை ஒழுங்குபடுத்திய வேங்கடமகி போன்ற பெரியார்கள் இந்த வம்ச பரம்பரையில் தோன்றியவர்களே. அந்த வம்சத்தின் அறிவுத்திறனும் அபார சங்கீத ஞானமும் நமது சுவாமிகளிடத்தில் அதி அற்புதமாக அமைந்திருக்கின்றன.

'மகாத்மாக்கள் உலகத்தில் என்றென்றும் நடமாடி வருவார்கள்' என்பது உபநிஷத வாக்கியம். இதை மெய்ப்பிக்கும் அறிவுச் சுடராக விளங்கி வருகிறார்கள் நமது சுவாமிகள். களை சொட்டும் முகம்; பெருங்கருணை பெருக்கெடுத்து ஓடும் பார்வை; குழந்தை போன்ற கபடமில்லாக் குணம். பார்த்த மாத்திரத்திலேயே பக்தர்களின் துயரத்தைத் துடைத்தெறிந்து அருள் பாலிக்கும் தோற்றம். ஏழை, பணக்காரர், குழந்தை—கிழவர் என்ற பாகுபாடின்றி எல்லோருடனும் சர்வ சகஜமாகச் சரளமாகப் பேசும் சுபாவம்—இது தான் நமது சுவாமிகள்.

சுவாமிகள் பேசுவதே ஒரு தனி அழகாயிருக்கும். அரிய பெரிய விஷயங்களையும் சிறுவர்களும் புரிந்து கொள்ளும்படி சரளமான சொற்றொடர்களால் விளக்குவார்கள்.

சுவாமிகளது ஞாபக சக்தி அபாரம். பல ஆண்டுகளுக்கு முன் நடந்த சின்னஞ்சிறு சம்பவத்தைக் கூடச் சுவாமிகள் நடந்தது நடந்தபடியே கூறும் பொழுது, உடல் சிலிர்க்கும்; உள்ளம் உவக்கும்.

தினந்தோறும் அவர் செய்யும் சந்திர மௌளீசுவர பூஜையைக் காண மக்கள் கூடுவார்கள். அப்பொழுது தெய்வ தரிசனமே கிடைத்து விட்டது போன்ற பெருமகிழ்ச்சி உண்டாகும். ஏழை எளியவர்களின் துயரங்களைத் துடைத்து, வந்தவர்களை விசாரித்து நாலு நல்ல வார்த்தைகள் கூறி மக்களின் மனத்தைத் தர்ம காரியங்களில் திருப்பு

வார்கள். அவர்களைத் தரிசிக்க வந்த யாவரும் நிறைந்த மனத்துடனேதான் திரும்புவார்கள்.

தானத்தில் சிறந்தது அன்னதானம் அல்லவா? அவர் பீடம் ஏறிய நாளாக ஏழை எளியவர்களுக்கு உணவு இல்லை என்று சொன்னதே இல்லை. பல திருவிழாக்களில் மடத்தின் சார்பில் அன்னதானம் செய்வித்துள்ளார்கள்.

ஆண்டுதோறும் அதி விமர்சையாக வியாச பூஜை நடத்துகிறார்கள். தமக்கு முன் பீடத்தை அலங்கரித்த ஆசாரியர்களின் சமாதிக்குப் பக்தி சிரத்தையுடன் குரு ஆராதனையும் செய்து வருகிறார்கள்.

அத்வைத சித்தாந்தத்தை அகில உலகத்துக்கும் போதித்த ஆதி சங்கரருக்குப் பல இடங்களிலும் குருகுலங்கள் கட்டிப் பூஜைக்கு ஏற்பாடுகள் செய்ததோடு ஆண்டுதோறும் சங்கர ஜயந்தியை விமரிசையாகக் கொண்டாடவும் வழிவகை செய்திருக்கிறார்கள். அது மட்டும் அல்ல; ஆண்டு தோறும் அத்வைத சபை நடத்தித் தாமும் சாஸ்திர சர்ச்சைகளில் பங்கு எடுத்துக் கொள்கிறார்கள்.

சுவாமிகள் ஆகம சாஸ்திரத்திலும் மந்திர சாஸ்திரத்திலும் பரிபூரண ஞானம் உள்ளவர்கள். வேதாந்தத்தில் உள்ள பெரிய பெரிய தத்துவங்களையும் சாதாரண உதாரணங்களைக் கொண்டு உள்ளத்தில் பதியும்படி விளக்குவதில் சுவாமிகளை யாருமே மிஞ்ச முடியாது.

தர்ம சாஸ்திரங்களிலும் அரசாங்கச் சட்டங்களிலும் ஆழ்ந்த அறிவும் அபார அநுபவமும் பெற்ற சுவாமிகள் விவாக ரத்துச் சட்டம் போன்ற சட்டங்கள் நாட்டுக்கு எத்தகைய தீங்கு இழைக்கக் கூடும் என்பதைத் தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டிப் பெரிய பெரிய சட்ட நிபுணர்களையே திகைக்க வைத்திருக்கிறார்கள். ஹிந்து அறநிலையப் பாதுகாப்பு சபையின் அதிகாரங்களும் சட்டதிட்டங்களும் எப்படி அமைய வேண்டும் என்பதையும் தெளிவாகக் கூறியுள்ளார்கள்.

வேத சாஸ்திர ஞானத்தை வளர்க்க வேண்டும் என்பது சுவாமிகளின் ஆசை. சமீபத்தில் சம்ஸ்கிருத கமிஷன் முன்பு கூடத் தமது ஆசையை வெகு தெளிவாக வெளியிட்டுள்ளார்கள். தமக்குப் பின் தமது பீடத்தை அலங்கரிக்கக் கூடியவர் வேதசாஸ்திர வித்பன்னராகவும், உலக க்ஷேமத்தையே தமது குறிக்கோளாகக் கொண்டவராகவும் இருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன், வேதமறிந்த பிரும்மசாரி ஒருவரைத் தேர்ந்தெடுத்துச் சந்நியாசம் கொடுத்துத் தமது மேற் பார்வையிலேயே சகலவிதமான கல்வியறிவும் புகட்டி வருகிறார்கள்.

சுவாமிகளுக்கு வடமொழி தென்மொழி என்ற பாகுபாடோ, சைவம் — வைஷ்ணவம் என்ற விரோத பாவமோ கொஞ்சங்கூடக் கிடையாது. மக்கள் தெய்வ பக்தியோடும் நன்னெறியோடும் வாழவேண்டும் என்ற ஒரே பரந்த நோக்கம்தான் அவருக்கு. மொழிக் கிளர்ச்சி, சமயக் கிளர்ச்சி எல்லாவற்றையும் அறவே ஒழிக்கும் நோக்கத்துடன் திருப்பாவை - திருவெம்பாவை மகாநாடுகள் நடத்தி நாடெங்கும் பிரசாரம் செய்து சமதர்மத்தை நிலைநாட்டி வருகிறார்கள்.

ஒரு பீடத்தை அலங்கரிக்க வேண்டியிருப்பதால் சுவாமிகள் பல்லக்கு, ஒட்டகம், குதிரை, யானை போன்ற பல பரிவாரங்களை நிர்வகிக்க வேண்டியிருக்கிறது. பகட்டாகத் தோன்றக்கூடிய பட்டணப் பிரவேசம் போன்ற பல காரியங்களுக்கு இடம் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால் மக்கள் மனசு ஒரு மாதிரியிருக்கிறதா? சிலருக்கு 'எதற்கு இந்த வீண் ஆடம்பரம்?' என்று தோன்றுவது இயல்புதானே? எல்லாம் தெரிந்த சுவாமிகளுக்கு மக்கள் இப்படி எண்ணக் கூடும் என்று தெரியாதா? இப்பொழுது தமது பரிவாரங்களையெல்லாம் எவ்வளவோ குறைத்துக் கொண்டு விட்டார்கள். இருந்தாலும் ஒரு சமயம், மக்களின் மனத்தில் உள்ள அந்தச் சந்தேகத்தைப் போக்குவதற்கு வேடிக்கையாக ஒரு சமாதானம் கூறினார்கள் :

ஹைகோர்ட்டில் ஸர் டி. முத்துசாமி அய்யரின் சிலை இருக்கிறது. நீதிபதிக்குரிய சகல லட்சணங்களுடனும் அதைச் சமைத்து வைத்திருக்கிறார்கள். அந்தச் சிலையைப் பார்த்தவுடனேயே நமக்கு அவர் ஒரு நீதிபதி என்ற நினைவு வருகிறது. ஆனால் அவர் ஜீவியவந்தராக இருந்த காலத்தில் வீட்டிலும், கோர்ட்டில் காட்சி அளிக்கும் கோலத்தில் தானா இருந்திருப்பார்? எல்லோரையும்போல் சாதாரண உடை உடுத்தி, வீட்டு வேலை, நீதிபதி வேலை முதலியவற்றை அவர் கவனித்திருக்கலாம் அல்லவா?

அதேபோல் அந்தக்காலத்தில் ஆதிசங்கரர், நான் இப்பொழுது இருக்கும் மாதிரி பரிவாரங்கள் புடைசூழ இருந்திருக்க வேண்டும் என்பதில்லை; இருந்திருக்கவும் மாட்டார். அவரையும் அவரது பெருமை மிகுந்த இந்தப் பீடத்தையும் நினைவுறுத்தும் ஒரு கருவியாக நானும் எனது இந்தப் பரிவாரங்களும் இருக்கின்றோமே ஒழிய வேறில்லை.

இதுபோல் சுவாமிகளின் வாழ்க்கையில் எத்தனை எத்தனையோ சம்பவங்கள்!

காஞ்சீபுரத்தை அடுத்து ஒரு கோவில் இருக்கிறது. அங்கேயுள்ள தக்ஷிணாமூர்த்தி புன்முறுவலுடன் மோனத்தவத்தில் ஆழ்ந்திருக்கிறார். சுவாமிகளுக்கு அந்தத் தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தினிடம் அலாதி ஈடுபாடு. தமது கையாலேயே பூஜை செய்து அதன் எதிரே அமர்ந்து தாமும் மோனத்தவம் புரிவார்கள். வரும் பக்தர்களையெல்லாம் அந்தத் தக்ஷிணாமூர்த்தியைத் தரிசிக்கும்படி சொல்வார்கள்.

'ஞானம் பெறுவதற்கு மௌனம் அவசியம். அந்த மௌனம் உன்னிடம் காணவில்லையே!' என்று எண்ணி நகையாடுவது போலவும், 'நான் மௌனத்தாலேயே ஞானம் பெற்றேன். நீயும் அப்படியே முயற்சி செய்!' என்று இளநகையுடன் உபதேசிப்பது போலவும் அந்தத் தக்ஷிணாமூர்த்தி தோன்றுவதால் சுவாமிகள் பக்தர்களிடம் அப்படிச் சொல்கிறாரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

---

'நல்ல குருவை அடைந்தவர்கள்தான் ஆத்மாவை அறிய முடியும்' என்று உபநிஷதம் கூறுகிறது. நாம் அத்தகைய குருநாதரைப் பெற்றிருக்கிறோம். அவரது உபதேசப்படி வாழ்க்கையை வகுத்துக் கொண்டால், இன்பம் பெற்று நல்வாழ்வு வாழ முடியும்.

# தக்ஷிண ரெயில்வே

## அறிவிப்பு

1-5-57 முதல் 30-4-58 வரை உள்ள ஓர் ஆண்டு காலத்திற்கு ரெயில்வேக்குத் தேவையான யூனிபாரம் உடைகளை வெட்டித் தைக்கவும் மற்றும் குல்லாய்கள், ஹாட்கள் முதலியவைகளை சப்ளை செய்யவும் சீலிட்ட டெண்டர்கள், தக்ஷிண ரெயில்வே சீப் கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸில் (அயனாவரம் போஸ்ட், சென்னை-23) 28-3-57 பிற்பகல் 3 மணி வரை ஏற்றுக் கொள்ளப்படும்.

டெண்டர் பாரம் ஒன்றுக்கு ரூ. 10/- வீதம் ரொக்கமாகவோ மணியார்டர் மூலமாகவோ செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். வேறு எவ்வகையிலும் அனுப்பப்படும் தொகை அங்கீகரிக்கப்பட மாட்டாது.

டெண்டர் பாரங்கள் 26-3-1957 பகல் 12 மணிக்குப் பிறகு கொடுக்கப்பட மாட்டாது.

T. N. TALATI

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்



மணமகன்: ரிட்டயர்டு டிஸ்ட்ரிக்டு ஸர்வேயர் ஸ்ரீ டி. எஸ். சுப்பிரமணிய அய்யர் குமாரரும், சென்னையில் கஸ்டம்ஸ் அஸிஸ்டண்டு கலெக்டருமாகிய ஸ்ரீ டி. எஸ். சுவாமிநாதன், M. Sc., I. C. & E. S.

மணமகள்: ரிட்டயர்டு அஸிஸ்டண்டு எக்ஸைஸ் கமிஷனர் ஸ்ரீ பி. என். சங்கர அய்யர் குமாரி சௌபாக்யவதி ஸரஸ்வதி. இத் திருமணம் 4-2-1957-ல் சென்னையில் வெகு விமரிசையாக நடந்தேறியது.

வாழ்க. ஸரஸ்வதி — சுவாமிநாதன்

# மாலவல்லியின் தியாகம்

பன்னிரண்டாம் அத்தியாயம்

## அக்கமகாதேரர்

"ஓ, நண்பரா! வாருங்கள். இவ்வளவு சீக்கிரத்தில் மறுபடியும் உங்களைச் சந்திக்க முடியும் என்று நான் நினைக்கவே இல்லை. சம்பாதி வன புத்த விஹாரத்தில் யாரோ ஒரு புத்த பிக்ஷுவை எவனோ கத்தியால் குத்திக் கொன்று விட்டுப் போய் விட்டானாம். என்ன அக்கிரமம், பாருங்கள்" என்றான் பூதுகன் வீரவிடங்கனிடம்.

"ஆமாம். அக்கிரமம்தான்! நேற்று இரவு உங்களிடம் சிக்கிக் கொண்ட புத்தபிக்ஷுவைப் பிடிக்க வந்த எமன் உங்களிடமிருந்து அவனைப் பிரிக்க முடியாமையால் வேறு எங்கோ ஏமாந்திருந்த வேறு ஒரு புத்த பிக்ஷுவின் உயிரைக் கொள்ளை கொண்டு போய் விட்டான். தம்முடைய கொள்கைகளிலிருந்து மாறி அக்கிரமச் செயல் புரிய நினைக்கும் எந்த வெளி வேஷத் துறவிக்கும் இத்தகைய கதிதான் நேரிடும்" என்றான் வீரவிடங்கன்.

"அது தான் தெரிந்திருக்கிறதே! ஆனால் தம்மீது பிறர் வஞ்சம் வைத்துப் பிறர் தம்மைக் கொல்ல நினைக்கும் அளவில் ஒரு பௌத்த பிக்ஷு என்ன அப்படி அக்கிரமச்செயல் செய்திருக்கப் போகிறார்?" என்றான் பூதுகன்.

"என்ன அக்கிரமச் செயலில் ஈடுபட்டிருந்தாரோ யார் கண்டார்கள்? ஏதேனும் தகாத காரியங்களில் ஈடுபடாத வரையில் சாதாரண புத்த சன்னியாசியைப் படுகொலை செய்ய வேண்டுமென்று எந்த மனிதனுக்கு எண்ணம் ஏற்பட்டிருக்கப் போகிறது?" என்று பதிலளித்தான் வீரவிடங்கன்.

"அந்தப் பௌத்த பிக்ஷு காஞ்சியிலிருந்து வந்தவராம். அவர் பெயர் ரவிதாசராம். ஏற்கனவே அவர் ஜைன சமயத்தினராக இருந்தார் என்று சொல்லிக் கொள்கிறார்கள். ஒருவேளை அவர் ஜைன மதத்திலிருந்து விலகிய பிறகு ஜைன மதவாதிகள் அவர் மீது ஆத்திரம் வைத்து ஏதேனும் செய்திருக்கலாமோ?" என்றான் பூதுகன்.

"ஜைன மதவாதிகளா? ஒரு நாளும் இத்தகைய காரியங்களில் ஈடுபடமாட்டார்கள். வேறு யாரோதான் அவரைக் கொலை செய்திருக்க வேண்டும்" என்றான் வீரவிடங்கன்.

"நீங்கள் சொல்வதும் சரிதான். பல கெட்ட எண்ணங்கள் கொண்ட வஞ்சகர்கள் எல்லாம் புத்த சங்கத்தில் சுலபமாக பிக்ஷுக்களாகச் சேர்ந்து விட முடிகிறதென்றால் அக்கிரமங்கள் நடப்பதற்குக் கேட்பானேன்? என் மனத்தில் ஒரே கவலைதான். நேற்று இரவு நெடு நேரம் வரையில் கடற்கரையில் இருந்த மாலவல்லியே இந்தக் கொலைக்குக் காரணமாவாள் என்று உலகம் கூறினால் அது அவளுக்கு எத்தகைய தீங்கை விளைவிக்கும் என்பதைப் பற்றித்தான் நாம் யோசிக்க வேண்டியிருக்கிறது" என்றான் பூதுகன்.

இதைக் கேட்டதும் வீரவிடங்கன் திகைப்படைந்தவனாக, "அப்படி அவள் மீது பழியைச் சுமத்துவதற்குக் காரணம் என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

"தினம் இரவு வேளையில் ஒரு பிக்ஷுணி தனக்குரிய இடமாகிய பௌத்த விஹாரத்திலிருந்து வெளிக் கிளம்பிச் செல்லுவதே மிகத் தவறான காரியம் அல்லவா!" என்றான் பூதுகன்.

"தவறுதான். ஆனால் அவளுக்



கி.ரா.கோபாலன்

கும் இந்தக் கொலைக்கும் சம்பந்தம் இருக்குமென்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' என்று கேட்டான் வீரவிடங்கன்.

''நான் அப்படி நினைக்கவில்லை. ஆனால் மாலவல்லியின் நடத்தையைக் கண்டு மற்றவர்கள் அவளைச் சந்தேகித்துக் குற்றம் சொல்லாமல் இருக்க முடியாது அல்லவா?'' என்றான் பூதுகன்.

''அது உண்மைதான்'' என்று கூறிச் சிறிதுநேரம் யோசனையிலிருந்து விட்டு, ''அப்படி ஏதேனும் நடந்தால் அதை என்னால் பொறுக்க முடியாது. நான் என்னுடைய உயிரைக் கொடுத்தேனும் அவளைக் காப்பாற்றி விடுவேன்'' என்றான் வீரவிடங்கன் தீர்மானமான குரலில்.

''இதுகூட நீங்கள் செய்யாவிட்டால் என்ன இருக்கிறது? ஆனால் இப்பொழுது அதைப் பற்றி யோசித்து நாம் குழப்ப மடைவதைவிட இத்தகைய ஆபத்து ஏற்படாத வண்ணம் பாதுகாப்பதற்கு வேண்டிய யோசனை செய்வது தான் நல்லது'' என்றான் பூதுகன்.

''என்ன செய்யலாம்?''

''நாம் முதலில் நிலைமையை அறிந்து கொள்வது மிகவும் அவசியம். நாம் இருவரும் புத்த விஹாரத்துக்குப் போய்ப் பார்த்தால், அங்குள்ளவர்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பது நமக்கு விளங்கி விடுமல்லவா?'' என்று யோசனை கூறினான் பூதுகன்.

''அதுவும் நல்ல யோசனைதான். வாருங்கள் போவோம். நேற்று உங்கள் நட்பு கிடைத்தது நல்லதென்று நினைத்



தேன். இன்று கிடைத்த உங்கள் நட்பு கிடைத்தற்கரியது என்று எனக்கு விளங்கியது!'' என்றான் வீரவிடங்கன் மகிழ்ச்சியோடு.

'' நண்பர்களாகி விட்டால் ஒருவரோடு ஒருவர் உண்மையாகவும் உள் அந்தரங்கத்தோடும் ஒளிவு மறைவு இல்லாமலும் நடந்து கொள்வது எவ்வளவு சிறந்ததாக இருக்கும் தெரியுமா? அப்படியே நீங்கள் நடந்து கொள்வீர்கள் என்று தான் நம்புகிறேன்'' என்று கூறினான் பூதுகன்.

பூதுகனின் வார்த்தை வீரவிடங்கனின் மனத்தில் ஏதோ கிளர்ச்சியை ஏற்படுத்தி



விட்டது என்பது அவனுடைய முக பாவத்திலிருந்து நன்கு தெரிந்தது. "நான் எப்பொழுதும் என்னோடு உயிருக்கு உயிராகப் பழகுகிறவர்களிடம் உண்மையாகவும் உள் அந்தரங்க சுத்தியோடும்தான் நடந்து கொள்வது வழக்கம்" என்றான் வீரவிடங்கன்.

"அது வரையில் சந்தோஷம். அப்படியே நாமும் நடந்து கொள்வோம்" என்று சொல்லிய படியே அங்கிருந்து நடந்தான் பூதுகன்.

அவனைப் பின் தொடர்ந்து நடந்து சென்றான் வீரவிடங்கன். அவர்கள் இருவரும் சம்பாதி வன புத்த விஹாரத்தை அடைந்த பொழுது அங்கு சிறிது கூட்டம் நிறைந்ததாக இருந்தது. அந்த விஹாரத்திலுள்ள பௌத்த பிக்ஷுக்களும், நகர மக்களில் சிலரும், அரசாங்க அதிகாரிகள் சிலரும் கூடி இருந்தனர். எல்லோருடைய முகத்திலும் ஒரு பரபரப்பு உணர்ச்சி தென்பட்டது. சிலர் கூடிக் கூடி ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். பூதுகனும் வீரவிடங்கனும் புத்தபிரான் சன்னதி போல் விளங்கிய அந்தப் பெரிய கூடத்துக்கு வந்து சேர்ந்தனர். அந்தக் கூட்டத்தின் நடுவே கொலையுண்ட ரவிதாசரின் உடல் கிடத்தப் பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் அரசாங்க அதிகாரிகளும், பிக்ஷுக்களும் குழுமி இருந்தனர்.



ரவிதாசரின் மார்பில் கத்தியால் குத்தப் பட்டிருந்த காயம் ஆழமாகப் பதிந்திருந்தது. அதோடு மட்டுமல்லாமல் அவருடைய தேகத்தில் பல பாகங்களில் சிறு சிறு காயங்கள் ஏற்பட்டிருந்தன. அவர் தம்மைக் கொல்ல வந்த எதிரியோடு தீவிரமாகப் போர் புரிந்த பின்தான் கொலை செய்யப்பட்டிருக்கிறார் என்பதை அவர் உடலில் பல இடங்களில் இருந்த காயங்கள் நன்கு உணர்த்தின. அரசாங்க அதிகாரிகள் அந்தப் புத்த சங்கத்தின் மகாதேரராய் விளங்கும் அக்கமகாதேரரை விசாரணை செய்து கொண்டிருந்தார்கள். வீரவிடங்கனின் கண்களும், பூதுகனின் கண்களும் பிக்ஷுணிக் கோலம் தரித்த மாலவல்லி அங்கெங்கேனும் இருக்கிறாளா என்பதைத்தான் தேடின. ஆனால் அவளைப் பார்க்க முடியவில்லை.

அங்கு நின்று பேசிக் கொண்டிருந்த பலருடைய வார்த்தைகளைக் கேட்க முடிந்தது. அவர்களால். அவர்களுடைய வார்த்தைகள் பூதுகனுக்கும் வீரவிடங்கனுக்கும் பெரிய கலக்கத்தையும், அதிருப்தியையும் கொடுப்பதாய் இருந்தன.

அந்த புத்த விஹாரத்தில் பிக்ஷுவாயிருந்த கலங்கமாலரையரும் பிக்ஷுணியாக இருந்த மாலவல்லியும் திடீரென்று தலைமறைந்து விட்டதால் ரவிதாசர் கொலைக்கு அவர்கள் தான் காரணமாக இருக்க வேண்டும் என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். அதிலும் முக்கியமாக ரவிதாசர் பிக்ஷுணியாகிய மாலவல்லியிடம் ஏதோ குற்றங் கண்டு அதை விசாரணை செய்ய வேண்டும் என்று விரும்பியதும் மற்ற எல்லோருக்கும் தெரியும். இந்த விரோதத்தின் காரணமாக இத்தகைய கொடூரமான செய்கை நடந்திருக்கலாமோ என்று யாவருக்கும் தோன்றியது. அங்கு விசாரணைக்காக வந்திருந்த அரசாங்க அதிகாரிகளிடம் ஒவ்வொருவரும் அதையேதான் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தனர்.

தலைமை பிக்ஷுவாக இருந்து அந்த விஹாரத்தைப் பாதுகாத்து வந்த அக்கமகாதேரர் மிகவும் மனம் உடைந்து போயிருந்தார். புத்தரின் சன்னிதானத்தில் இத்தகைய கொடூரமான செய்கை நடந்தது, உன்னதமான புத்த லட்சியங்களைக் கொண்ட சங்கத்துக்கும், பௌத்த சமயத்துக்கும் இழுக்கை ஏற்படுத்திவிட்டதாக எண்ணி மனம் புழுங்கினார் அந்த மகான். கருணை உருவாகிய புத்தர் பெருமானின் கொள்கைகள், இலட்சியங்கள், கனவுகள் இவைகளெல்லாம் அவருடைய சீடர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களாலேயே பாழாக்கப் படுவதை எண்ணி அவர் மனம் புழுவாய்த் துடித்தது. அவர் இப்பொழுது எதுவுமே பேசும் நிலையில் இல்லை. அவருடைய

# கலிங்கா

# ட்யூப்ஸ்












தண்ணீர், மற்றும் 'காஸ்'
விநியோகத்துக்கும் சகல
விதமான தொழிற்சாலை,
வீட்டுத் தேவைகளுக்கும்
உயர்தர ஸ்டீல் குழாய்கள்.

## KALINGA TUBES LTD.

33, CHITTARANJAN AVENUE,
CALCUTTA-12.

*Works :* CHOUDWAR, CUTTACK

**INDIA'S FIRST CONTINUOUS STEEL TUBE FACTORY**

மனம் புத்த பெருமானின் பொறுமை மிக்க திருவுருவை எண்ணி, 'பொறுமை எங்கே? பொறுமை எங்கே?' என்று தேடிக் கொண்டிருந்தது. இத்தகைய நன்மார்க்கங்களைப் பின்பற்றாத பிக்ஷுக்களும் பிக்ஷுணிகளும் நிறைந்த அந்த விஹாரத்திலிருந்து எங்கேனும் வனாந்தரங்களிலுள்ள மலைக் குகைகளில் போய்த் தங்கியிருந்து நிர்வாண சித்தியை அடையும் மார்க்கத்தைக் கைக்கொள்ளலாம் என்றே நினைத்தது.

மாலவல்லியை அங்கே காணாமல் மனக்குழப்பமும் திகிலும் அடைந்திருந்த பூதுகனுக்கு அக்கமகாதேரரின் வேதனை சூழ்ந்த முகம் மிகுந்த பச்சாத்தாபத்தை உண்டாக்கியது. இத்தகைய புனித மூர்த்தி ஏன் இந்த ஊழல்கள் நிறைந்த பிக்ஷுக்களிடையே சுழன்று கொண்டிருக்க வேண்டும் என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. அக்கமகா தேரர் ஒருவரைத் தவிர அங்குள்ள மற்ற எந்த பிக்ஷுவும் புத்த பெருமானின் புனித மார்க்கங்களை அனுசரித்து ஒழுகும் சீலர்களாக அவனுக்குப் படவில்லை. கொடூர செய்கைக்குக் காரணமாக மாலவல்லி இருக்க மாட்டாள் என்று அவன் நினைப்பது போல் அக்கமகாதேரரும் நினைக்கக்கூடும் என்று நம்பினான். மெதுவாக அவரிடம் நெருங்கிப் பேசி அவருடைய மன அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள நினைத்தான். அவரை அணுகித் தன் வணக்கத்தைச் செலுத்திவிட்டு, "இந்தக் கொடூரமான செயல்களைப் பற்றி அடிகளின் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டான்.

ஆழ்ந்த சிந்தனையிலிருந்த அக்கமகா தேரர் வருத்தம் நிறைந்த குரலில், "எதையும் புத்தர்பிரான்தான் அறிவார். உலகத்தின் துயரைத் துடைத்து அன்பை நிலைநாட்டுவதற்காக நிறுவப்பட்ட தரும சங்கத்திலும் கூட இத்தகைய கொடூரமான செய்கைகள் நடப்பதை எண்ணித்தான் மனம் இடிந்து போய் விட்டது. நான் எதையும் சொல்ல முடியாத நிலையில் இப்பொழுது இருக்கிறேன். இது நடந்ததற்காக வருந்துகிறேனே தவிர, 'இது எப்படி நடந்தது? இதை யார் செய்தார்கள்?' என்பதில் என் சிந்தனையைச் செலுத்துவதும் தவறு. என்னைப் போன்ற நிலையில் உள்ளோர் இது மாத்திரம் அல்ல, எங்குமே இம்மாதிரி நேராதவண்ணம் தடுக்கவேண்டுமென்று புத்தர்பிரானைப் பிரார்த்திப்பதுதான் வழி" என்றார்.

அந்த மகாபுருஷரின் வார்த்தைகள் அவர் எத்தகைய உயர்ந்த நோக்கமும் கொள்கையும் உடையவர் என்பதைத் தான் பூதுகனுக்கு எடுத்துக் காட்டுவதாக இருந்தன. அவரைக் கிளறி எதையும் கேட்க விரும்பாவிட்டாலும் அவர் மனத்திலும் ஒரு உண்மையைப் பதிய வைக்கப் பூதுகன் விரும்பினான்.

"தேவரீர்! இச்சங்கத்தில் மகா தேரராயிருக்கிறீர்கள். இச்சங்கத்தின் பொறுப்புக்களை நீங்கள் உணராமல் இருக்க முடியாது. இச்சங்கத்தைச் சீராக வைத்துக் கொள்வதில் மற்றவர்களுக்கு உள்ள கடமையைவிட உங்கள் கடமை மிகப் பெரிது. இன்று நடந்த காரியத்தை இப்படியே விட்டு விட்டால் நாளை புத்தர் பெருமானின் சன்னிதானத்தில் இதை விட ஈனமான காரியங்களெல்லாம் நடப்பதற்கு இடம் கொடுப்பது போல் ஆகி விடுமல்லவா? நான் தங்களுக்கு அதிகம் சொல்ல வேண்டாம். தாங்கள் இது விஷயத்தில் சிறிது கவனம் செலுத்துவீர்கள் என்றே நினைக்கிறேன். ஏனென்றால் நீங்கள் கவனம் செலுத்தாவிட்டால் உண்மையான குற்றவாளி கண்டு பிடிக்கப்படாமல், குற்றமற்றவர்கள் கொடுமை யனுபவிக்கும் நிலைமை ஏற்படும். இந்தச் சங்கத்தில் ஏற்பட்ட கொடுமையோடு இன்னொரு கொடுமையையும் அறியாமையினால் ஏற்படுமானால் அது புத்தர்பிரானின் உள்ளத்துக்கு உவப்பானதாகாது."

"நீ சொல்வது சரிதான். உண்மையான துறவு மார்க்கத்தைக் கொண்ட ஒருவன் இத்தகைய காரியங்களில் எல்லாம் ஈடுபடுவது அவனுடைய மனச்சாந்தியைக் குலைப்பதோடு அவனுடைய தருமத்துக்கும் புறம்பானதாக இருக்கிறது. நான் கூடுமான வரையில் பிக்ஷுக்களையும், பிக்ஷுணிகளையும் அழைத்து ஓரளவு வேண்டுமானால் விசாரிக்க முடியும். அவர்களிடமிருந்து ஏதேனும் உண்மை வெளியானால் நல்லதுதான். அந்தக் கடமை எனக்கு எப்பொழுதும் உள்ளது. அது மனவேதனை நிரம்பியதாயினும் அதைச் செய்ய நான் எப்பொழுதும் சித்தமாய் இருக்கிறேன்" என்றார் அக்கமகா தேரர்.

"இந்த விஷயத்தில் இதுவரை கவலை செலுத்த அடிகளார் மனம் ஒப்பியதில் நான் மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன். இந்தக் குரூரம் நடந்ததற்கு இங்கிருந்த ஒரு பௌத்த பிக்ஷுணியே காரணமாக இருப்பாள் என்று தங்களுக்கு ஏதேனும் தோன்றுகிறதா?..." என்று கேட்டான்.

"அதையும் புத்தர்பிரான்தான் அறிவார். நான் சட்டென்று எப்படி அப்படிச் சொல்ல முடியும்?"

''இங்குள்ள மற்றவர்கள் அப்படிப் பேசிக் கொள்ளுகிறார்களே......?''

''மற்றவர்களின் மன அபிப்பிராயத்துக்கு நான் என்ன செய்ய முடியும்?'' என்றார் அவர்.

''அதுவும் உண்மைதான். ஆனால் இந்தச் சங்கத்தை அரசியல் நோக்கம் கொண்ட சூழ்ச்சிக்காரர்கள் தலைமறைவாக இருந்து காரியங்களைச் செய்ய அனுகூலமான இடம் எனக் கருதி பிக்ஷுக் கோலம் பூண்டு புகலிடமாக அடைந்திருக்கிறார்களே, அது உங்களுக்குத் தெரியுமா?''

''இருக்கலாம். புத்த சங்கத்தில் ஈடுபட்டுச் சில மார்க்கங்களைப் பின்பற்றத் துணிந்தவர்களுக்கு இங்கு பிக்ஷுக்களாக உரிமை அளிக்கப்படுகிறது. ஆனால் யார் யார் எந்த நோக்கத்தில் சங்கத்தில் வந்து சேருகிறார்கள் என்று நான் எப்படி அறிந்திருக்க முடியும்?''

''அதை நான் ஒப்புக் கொள்கிறேன். கொலை செய்யப்பட்டுக் கிடக்கும் ரவிதாசரும் தலைமறைவாகப் போய் விட்ட கலங்கமாலரையரும் ஏதோ தங்கள் சொந்த நோக்கத்துடன்தான் இந்தச் சங்கத்தில் புகுந்து ஏதோ சூழ்ச்சிகரமான காரியங்களில் ஈடுபட்டிருந்தார்கள் என்பது தங்களுக்குத் தெரியுமா? அதோடு பிக்ஷுணியாக இருக்கும் இளம் பெண் மாலவல்லி ஏதோ உலகத்தில் தன்னைச் சூழ்ந்திருந்த ஆபத்திலிருந்துதன்னை விலக்கிக் கொண்டு வாழவோ, அல்லது தான் அனுபவிக்க விரும்பும் சுகங்களைப் பிறருடைய இடையூறின்றி அனுபவிக்கவோதான் இந்த புத்த சங்கத்தில் பிக்ஷுணியாகச் சேர்ந்தாள் என்று நான் நினைக்கிறேன். முக்கியமாக, கலங்கமாலரையர் தஞ்சை மன்னர் மாறன் முத்தரையரின் சேனாதிபதியாக இருந்தவர். அவருடைய எண்ணம் எல்லாம் மறுபடியும் இந்நாட்டில் சோழ வம்சத்தினரின் உன்னத சாம்ராஜ்யம் ஏற்படக் கூடாது என்பது தான். அதற்காக அவர் பல சூழ்ச்சிகளையும் அடாத செயல்களையும் செய்து வருகிறார். அவருடைய சூழ்ச்சிகளையும் தகாத காரியங்களையும் சுய ரூபத்தில் இருந்து செய்வது தன் உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்தி விடும் என்பதை உணர்ந்து தான் பிக்ஷுக் கோலம் பூண்டு பல காரியங்களைச் செய்ய முயன்றிருக்கிறார் என்று தெரிகின்றது. இத்தகைய கேவலமான காரியங்களை யெல்லாம் மகா உத்தமராகிய நீங்கள் எப்படி அறிந்திருக்க முடியும்? அதோடுமட்டுமல்ல; கொலையுண்டுகிடக்கும் ரவிதாசர் காஞ்சியிலிருந்து வந்தவர். ஏற்கனவே ஜைன சமயத்தைச் சேர்ந்தவர் எனக் கருதுகிறேன். இளம் துறவி மாலவல்லியும் காஞ்சியிலிருந்து வந்தவள். மாலவல்லி இக்காவிரிப் பூம்பட்டினத்துக்கு வந்து ஒரு பௌத்த பிக்ஷுணி ஆகிவிட்டாள் என்பதையறிந்து தான் ரவிதாசரும் இங்கு வந்து ஒரு பௌத்தத் துறவி ஆகி இருக்க வேண்டும். அவர் ஒரு பௌத்த பிக்ஷுக்குரிய கடமைகளையும் தர்ம வழிகளையும் பின் பற்றாமல் 'எப்பொழுதும் பிக்ஷுணியாகிய மாலவல்லி என்ன செய்கிறாள்? எங்கே போகிறாள்?' என்பதிலேயே கவனம் செலுத்தக் கூடியவராக இருந்திருக்கிறார். இவற்றை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டாம். நேற்று மாலை இங்கு புத்தர் பெருமானின் திருவடிகளில் அந்த பிக்ஷுணி மலர்களைச் சமர்ப்பிக்கச் சென்றபோது அவள் ஏதோ தகாத காரியங்களைச் செய்து விட்டாள் என்று ரவிதாசர் குற்றம் சாட்டி அவள் பெருமானின் திருவடிகளில் மலர் அர்ச்சிக்க அருகதையற்றவள்என்றுகூச்சலிட்டதையும் தாங்கள் அறிவீர்கள். அந்த பிக்ஷுணி ஏதோ குற்றம் செய்தவளாகவே இருப்பினும் பூசை நேரத்தில் அவளைத் தடுப்பது எவ்வளவு மதியீனம், கேவலம்? இது உண்மையான ஒரு பிக்ஷுக்குரிய தருமமா? இதிலிருந்து தாங்கள் ஊகித்துத் தெரிந்து கொள்ளலாம், இந்த பௌத்தவிஹாரத்தில் எத்தகைய மனிதர்கள் எல்லாம் துறவுக்கோலம் பூண்டு திரிகிறார்கள் என்று.''



அக்கமகா தேரர் எல்லாவற்றையும் கேட்டு விட்டுக் கண்களை மூடிக்கொண்டு மௌனமாக நின்று கொண்டிருந்தார். அவர் மனத்தில் எத்தகைய வேதனைகள் எழுந்து துன்புறுத்துகின்றன என்பது அவருடைய முகக்குறியிலிருந்து விளங்கியது. ''இங்கு என்ன நடக்கிறது என்று அறியாது போனது என்னைப் போன்ற

துறவிக்கு ஏற்பட்ட துரதிர்ஷ்டம்தான் —எப்படியோ இந்தப் பௌத்த விஹாரத்துக்கும் பௌத்த சங்கத்துக்கும் ஏற்பட்ட பெரிய களங்கம் இது ஒன்று போதும். இனிமேல் இப்படிப்பட்ட களங்கம் ஏற்படாத வண்ணம் இந்த சேதியமும், சங்கமும் காப்பாற்றப் படட்டும்'' என்று சொல்லி விட்டுத் திரும்பினார். உலகில் யாவற்றையும் துச்சமாக எண்ணித் துறந்து விட்டுச் சாந்தி நிலையில் மனத்தைப் பக்குவப் படுத்தி வைத்துக் கொண்டிருந்த அக்க மகா தேரரின் மனநிலை பூதுகனைத் திகைக்க வைத்தது.

தன்னோடு வந்த வீரவிடங்கனின் ஞாபகம் வரவே அவன் எங்கே இருக்கிறான் என்பதைப் பார்க்க விரும்பினான். ஆனால் சிறிது நேரத்துக்கு முன் வரை தனக்குச் சிறிது தூரத்தில் கூட்டத்தோடு கூட்டமாக நின்று கொண்டிருந்த வீரவிடங்கனை அப்போது காணவில்லை. அவன் வேறு எங்கேனும் போயிருப்பானோ என்று சுற்றிலும் தேடினான். பூதுகனுக்கு எல்லாம் விநோதமாக இருந்தது. வீரவிடங்கன் இப்பொழுது எங்கே போயிருப்பான்? ஒருவேளை அவன் வெளியே ஆசிரமத்தில் எங்கேனும் இருப்பானோ என்று நினைத்து அங்கிருந்து வெளியே வந்து தோட்டத்தைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினான். சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தான். பாவம்! தோட்டத்திலும் அவனைக் காணவில்லை. தன்னிடம் சொல்லாமல் வீரவிடங்கன் அந்த இடத்தைவிட்டு அகன்றதற்குக் காரணம் தெரியவில்லை.

பூதுகனுக்கு வீரவிடங்கன் அந்த இடத்தை விட்டே போய் விட்டான் என்பது நன்கு விளங்கியது. தனக்கு உற்ற நண்பனாகி விட்டது போல் பேசிய வீரவிடங்கன் இப்படிப்பட்ட முக்கியமான சந்தர்ப்பத்தில் தன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் போய் விடுவான் என்று நினைக்க வில்லை. அவனுடைய காதலி அந்த புத்த விஹாரத்திலிருந்து தலைமறைவாக எங்கோ போய் விட்டாள் என்பதைக் கேள்விப் பட்டதும், புத்தவிஹாரத்தை விட்டு ஓடி விட்டவள்தான் அங்கு நடந்த கோரக் கொலைக்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று மற்றவர்கள் பேசிக் கொண்டதும் வீரவிடங்கன் உள்ளத்திலும் பெரிய திகிலையும் துயரத்தையும் ஏற்படுத்தி விட்டது என்பதைப் பூதுகன் உணர்ந்திருந்தான். ஆனால் அவன் இத்தகைய துயரம் நிறைந்த வேளையில் தன்னிடம் சொல்லிக் கொள்ளாமலேயே போய் விடுவான் என்று அவன் நினைக்கவில்லை.

அப்பொழுது தான் அவன் உள்ளத்திலும் அந்தக் கோரக் கொலைக்கும் வீரவிடங்கனுக்கும் கூட ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று நினைப்பதற்கு இடம் உண்டாயிற்று. பெரிய சாம்ராஜ்யச் சூழ்ச்சியில் இத்தகைய கொலை நடந்திருக்கா விட்டாலும் காதலிலும், பெண்ணாசையிலும் கூட இத்தகைய கோரக் கொலைகள் எல்லாம் நடப்பது சகஜம்தானே? மாலவல்லியை உளவு பார்த்து வந்த ரவிதாசனைப் பற்றி வீரவிடங்கன் நிச்சயமாக அறிந்துதான் இருக்க வேண்டும் என்று திடமாக நம்பினான். மாலவல்லி, ரவிதாசன், வீரவிடங்கன், கலங்க மாலரையன் இவர்கள் நால்வரும் ஏதோ ஒரு பகைமையோடும் போட்டியோடும் கூடிய காரியத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதைப் பூதுகன் உணர்ந்து கொண்டான். அவன் மனம் குழம்பிய படியே மெதுவாக நடந்தான். (தொடரும்)

---

## முன்னும் பின்னும்!









''இந்தாருங்கள் ஐயா, இந்தத் தொகையை வரவு வைத்துக் கொள்ளுங்கள்! நான் என் குழந்தைக்கு வாங்கிய மூன்று சக்கர சைக்கிளுக்குச் செலுத்தவேண்டியகடைசித் தவணை!''

''ரொம்ப வந்தனம். குழந்தை இப்பொழுது எப்படியிருக்கிறான்?''

''சௌக்கியமாயிருக்கிறான். அவனுக்கு அடுத்த வாரம் கல்யாணம்!''

★



''எங்கள் தாத்தா பத்து வருஷமாகத் தலை வெட்டிக் கிறதே இல்லை!''

''அப்பப்பா! அவ்வளவு கருமியா அவர்?''

''இல்லை! அவருக்கு வழுக்கைத் தலை!''

★

ஒரு சித்திரக் காட்சிச் சாலையைக் கணவனும் மனைவியும் பார்வையிட்டுக் கொண்டு வந்தார்கள்.

மனைவி (பார்வை சற்று மந்தம்):—நாம் இதுவரையில் பார்த்துக் கொண்டு வந்த சித்திரங்களில் இது ரொம்பக் கோரமாக இருக்கிறது. இல்லையா?

கணவன் (கலவரத்துடன்):—வா, வா! நாம் போகலாம். அது சித்திரம் இல்லை. நிலைக் கண்ணாடி!



நண்பர்:—இன்றைக்கு உங்கள் குருவின் ''பாட்டுக்கச்சேரி'' நடக்கப் போகிறதே, நீங்கள் பாட்டைக் கேட்கப் போகவில்லையா?

சிஷ்யர்:—போய்த்தானே ஆகணும்! இல்லை என்றால் நாளைக்கு அவரிடம், 'பாட்டு'க் கேட்கிறது யார்!

மோட்டாரில் வந்தவர்:—''ஏன், ஐயா! இந்த ரஸ்தா நல்ல ரஸ்தாதானே? ரொம்ப மேடும் பள்ளமுமாயிருக்காதே?

வழிப்போக்கர்:—சற்று இங்கேயே காத்துக் கொண்டிருங்கள். இந்த ரஸ்தாவைப் பற்றித் தெரிந்தவர், தூரத்திலே பள்ளத்தில் விழுந்து விட்டார்! சீக்கிரத்தில் வந்து விடுவார் என்று நினைக்கிறேன்!

★

நீதிபதி (குற்றவாளியிடம்):—என்ன? நீ விட்டெறிந்த கல் என் கையளவு பருமன் இருக்குமா?...

குற்றவாளி:—அதைவிட அதிகப் பருமன் இருக்கும்!

நீதிபதி:—அப்படியானால் என் தலையளவு பருமன் இருக்குமா?

குற்றவாளி:—அவ்வளவு பெரிசாக இருக்கலாம். ஆனால் அவ்வளவு கடினமாக இராது!

★



''என்ன மறந்து விட்டாலும் எங்க முதலாளியின் பிறந்த நாள் மட்டும் எனக்கு மறந்து விடாது.''

''ஏன் உனக்கு ஏதாவது அன்று வெகுமதிகள் தருவாரா?''

''இல்லை! அன்றைக்கு ஒரு நாள் தான் என்னிடம் கோபிக்காமல் பிரியமாக நடந்து கொள்வார்!''

★

''குழந்தை ரொம்ப அழகாயிருக்கிறதே! உன் கணவரின் ஜாடையைக் கொண்டிருக்கிறது குழந்தை!''

''ஐயையோ! அப்படியா? இந்தக் குழந்தையை நாங்கள் சுவீகாரம் அல்லவா எடுத்துக் கொண்டிருக்கிறோம்!''

★

ஆசிரியர்:—ஏண்டா, விச்சு! பதினைந்தாவது நூற்றாண்டில் இருந்த பிரபல விஞ்ஞானிகளைப் பற்றி உனக்கு ஏதாவது சொல்ல முடியுமா?...

பையன்:—ஓ, தெரியுமே! அவர்கள் இறந்து விட்டார்கள், ஸார்!

★

பையன்:—அக்கா! நீ நேற்று இரவு முழுதும் குறட்டை விட்டுக் கொண்டிருந்தாய்!...



அக்கா:—அப்படியா! நான் கேட்கவில்லையே? ஆனால் நான் குறட்டை விட்டது சங்கீதம் கேட்கிற மாதிரி இருந்திருக்குமே?

பையன்:—அம்மா, வீட்டில் ஏதோ ஒரு பெருச்சாளி வந்து விட்டதென்று இரவு முழுதும் அமர்க்களம் பண்ணி விட்டாள்!

# ஜாக்கிரதை! சிறிதும் சிந்தக்கூடாது

சிந்திய பாலைப்பற்றி கவலைப்பட்டு பிரயோஜனமில்லை எனக் கேள்விப்பட்டிருக்கிறேன்! ஆனால் ருசிவாய்ந்த என் க்ளாக்ஸோ ஆகாரத்தை ஒரு துளி சிந்த நேரிட்டாலும், எனக்கு அழுது கூச்சலிட நியாயம் உண்டு என்பதைத் தெரிவிக்கிறேன். இது தவிர வேறு ஒரு பொழுதும் நான் முணு முணுப்பதை நீங்கள் பார்க்கமாட்டீர்கள். ஒழுங்காக எனக்கு க்ளாக்ஸோ கொடுக்க ஆரம்பித்த காலத்திலிருந்து, எல்லா க்ளாக்ஸோ குழந்தைகளைப் போல, நானும் குறைவற்ற செல்வமாக விளங்குகிறேன்.

நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ

**Glaxo**

குழந்தைகளின் பரிசுத்தமான
பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புது டில்லி




## 6. விசுவாமித்திரர்களுக்கு !

மாதுஸ்ரீ நயாக்ராவை அறிந்தவர் சிலர்; அறியாதவர் பலர். அறிந்தவருக்கு இவரைப் பற்றி எவ்வளவு சொன்னாலும் போதாது. மேலும் மேலும் இவரைப் பற்றிச் சொல்ல வேண்டும்; இவரைப்பற்றிப் பிறர்சொல்லக் கேட்க வேண்டும் என்ற ஆசை குன்றாது. தெரியாதவருக்கோ கேட்கக் கேட்க ருசி அதிகரிக்கும். ராமாயணத்தைக் கேட்காத்வர் இல்லை. கேட்டவருக்கு இன்னுமொருதரம் கேட்பதானாலும் அலுப்புத் தட்டாது; கேட்காதவருக்கோ முதன் முதலில் கேட்கும்போது தம்மை மறந்து அனுபவிக்கும் நிலை ஏற்படும். மாதுஸ்ரீ நயாக்ராவின் சரிதமும் ஏறக்குறைய இவ்வினத்தையே சேர்ந்தது.

தொண்டு கிழம்; தொண்ணூறு வயதான தொண்டு கிழம். தனிக் கட்டை; உற்றார் உறவினர் ஒருவருமற்ற ஏகாங்கி. ஊருக்கு வெளியே தனித்து நிற்கும் வீட்டில்....இல்லை, இல்லை, விழல் கூரை வேய்ந்த மண் சுவரும் சிறிய ஜன்னல்களும் உள்ள ஒரு குடிசையில் வாசம். வீட்டைச் சுற்றி மரம், செடி, புதர். இவற்றுக்கிடையே வீடு, இருப்பதேதெரியாமல் மறைந்திருக்கும். வெளிப்புறத்து வேலியைத் தாண்டி உள்ளே சென்றால்தான் வீடு இருப்பது தெரியும். ஆனால் மிகவும் சுத்தமாக வீட்டையும் தோட்டத்தையும் வைத்திருக்கும் நிலையைக் கண்டால் யாரையுமே பிரமிக்கச் செய்யும்.

ராமு என்று ஒரு சுவீகாரப் பேரன். அனு என்று ஒரு சுவீகாரப் பேத்தி. இவர்களிடம் அளவற்ற அன்பு இந்தத் தனிக் கட்டைக்கு. தன் ஜாதியைச் சேர்ந்தவர்கள்கூட அல்ல, இந்த சுவீகாரப் பேரனும் பேத்தியும். ஆனாலும் இந்தக் கிழவிக்கு இவர்களிடம் ஏன் இவ்வளவு பற்றுதல்? இதை யாராவது கேட்டுவிட்டால் போதும். உடனே கிழவி தொடங்கி விடுவாள்:

''பந்துக்கள் என்பவர் யார்? உடன் பிறந்தார் சுற்றத்தார் என்போரெல்லாம் நமக்குத் தெரிந்தவர்கள். அவரிடம் நட்புரிமை இருத்தல் அவசியம். ஆனால் அவர்கள் பந்துக்களாகி விடுவார்களா? நமது லட்சியம், விருப்பு வெறுப்பு ஆகியவற்றில் நம்முடன் ஒன்றியவர்தான் நமது பந்துக்கள்.'' இப்படி, விட்டால்போதுமென்று ஆகும் வரையில் ஒரு பிரசங்கமாரி பொழிந்து விடுவாள் மாதுஸ்ரீ நயாக்ரா. அரசியல், வியாபாரம், பொருளாதாரம், விஞ்ஞானம், மெய்ஞானம், எந்த விஷயமானாலும் சரி, மாதுஸ்ரீ நயாக்ராவுக்குத் தெரியாத நுட்பங்களே கிடையாது. எந்த விஷயத்தைப் பற்றி யானாலும் ஒரு நிபுணனை மிஞ்சுமளவுக்கு அலசி அலசிப் பேசும் திறமை பெற்றவள்.

'டைனடிக்ஸ்' என்பது மனோ சாஸ்திரத்தை யொட்டிய ஒரு விஞ்ஞானக் கலை. சென்ற சுமார் முப்பது ஆண்டுகளாகத்தான் மேல்நாட்டு விஞ்ஞானிகளின் கவனத்தைக் கவர்ந்துள்ளது. இரண்டாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகு இக்கலை ஆச்சரியப் படும்படியான அளவுக்கு வளர்ந்து முன்னேற்றம் பெற்று விளங்குகிறது. கணிதம், பௌதிகம், வாதம், வானம், வைத்தியம், மனோசாஸ்திரம் முதலிய விஞ்ஞானத் துறைகளில் பெயர் பெற்ற



அறிஞர்களும்கலைஞர்களும் இந்த 'டைனடிக்ஸ்' என்ற விஞ்ஞானக் கலையில் ஆர் வங்கொண்டு, பயின்று, ஏற்று நடைமுறையிலும் கொண்டு வந்துள்ளனர். ஆராய்ச்சிகளுக்குக் குறை வில்லை. புத்தகங்களும் பிர சுரமாகியுள்ளன.

'டைனடிக்ஸ்' என்னும் கலையையும், அதன் அடிப் படையான தத்துவங்களை யும் விளக்கும் ஒரு புத்தகம். இது பல் லாயிரக்கணக்காகச் 'சுடச்சுட' விற்றுப் போயிருக்கிறது. அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் இருந்த பிரபல 'டாக்டர்'களுள் பலர், தாம் அதுவரையில் பயின்று வந்த வைத்திய—ரண சிகிச்சை முறைகளை 'டைனடிக்ஸை' அனுசரித்து மாற்றி அமைத்துக் கொண்டுள்ளனர். இப் புத்தகத்தின் பிரதி ஒன்றை மாதுஸ்ரீ நயாக்ராவும் பார்க்க நேர்ந்தது. அவ் வளவுதான்...செல்லப் பேரன் ராமு வுடன் இக்கலையின் அடிப்படைத் தத்துவங்களையும் அதன் நுட்பங்களை யும் பற்றிவாய் ஓயாமல் பேசலானாள் மாதுஸ்ரீ. குடைந்து குடைந்து கேள்வி கள். துருவித் துருவிக் குறுக்குக் கேள்வி கள், ஒருவகை சமாதானங்கள் என்று இப்படி ஒரு விஸ்தாரமான விமர்சனம். இந்த விமர்சனமே சிறியதொரு புத்தக மென்றாகி விட்டது. ஆனால் 'கட்டுரை' என்ற பெயரில் பிரசுரமாகி யுள்ளது. இதற்கு "டைனடிக்ஸும், அதற்கப்பா லும்" ("Dianetics & Beyond") என்று பெயரும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

விமர்சன உருவில் கட்டுரையிலுள்ள விஷயங்கள், ஆட்சேப சமாதானங்கள் ஒருபுறம்இருக்கட்டும். 'டைனடிக்ஸி'ன் அடிப்படையான தத்துவங்களையும், மேனாட்டு விஞ்ஞானிகள் ஆராய்ச்சி களின் பலனாகத் தெளிந்த உண்மைகளை யும் தெரிந்து கொள்வது அவசியம். ஏன்? வசிஷ்டரே 'பிரும்ம ரிஷியே!' என்றுஅழைப்பது விச்வாமித்திரருக்கும் அவருடைய தாஸர்களுக்கும் தெரிவதற் காகத்தான். அவ்வுண்மைகளாவன:—

மூளையில் சில கேந்திர ஸ்தானங்களில் நிகழும் ஒரு வகை அணுசக்தியின் மாறு பாடுகளால் அல்லாது (Electronic Changes) மானிட மனத்தில் எண்ணங் கள் தோன்றுவதில்லை.

தாய்மைப் பேற்றை அடையவிருக் கும் ஒருவரின் மனத்திலெழும் எண்ணங் கள், அவருடைய கர்ப்பத்திலிருக்கும் பிண்டத்தின் சரீரத்திலும் மூளையிலும்



சில வடுக்களை (Engrams) உண்டாக்குகின்றன.

இவ்வடுக்களின் வகையை யனுசரித்து கர்ப்ப பிண்டம் சிசுவாக வளருகிறது. பிறகு அது உலகில் பிறந்து வள ரும் பொழுது அதன் உடல் வளர்ச்சியின் தராதரங் களும், ஆரோக்கிய அனா ரோக்கிய நிலைகளும்கூட இவ் வடுக்களையே சார்ந் திருக்கின்றன. விருப்பு வெறுப்பு, நேர்மைக் குணம், நெறி, நல்லொழுக்கம்—தீய ஒழுக்கம் புத்திக் கூர்மை, ஞாபகசக்தி முதலிய மனோ பாவங்களும் இவ்வடுக்களின் விளைவே.

எளிதிலேயே,குறிப்பிட்ட சில வியாதி களுக்கு இலக்காகும் நிலையும் இந்த வடுக்கள் காரணமாகவே ஏற்படுகின் றன. காரணம் என்ன? சகிப்புத் தன்மையைக் குறைக்கும் சக்தி அந்த வடுக்களுக்கு இருப்பதுதான்.

'டைனடிக்ஸ்'என்னும் மேற்சொன்ன அறிவை எவ்விதமாகப் பயன்படுத்தி மனிதனின் சரீரத்தையும் மனத்தையும் பற்றிய ரோகங்களைக் குணப்படுத்த முடியும் என்பதைப் புள்ளி விவரங்க ளுடன் மேலுமுள்ள சில விவரங்கள் ஆதார பூர்வமாக விளக்குகின்றன.

'டைனடிக்ஸ்' வகுக்கும் முறைகளை அனுசரித்துச் செய்யப்பட்ட சிகிச்சை களுக்கு நூற்றுக்கு நூறு வீதம் பூர்ண குணம் கிடைத்திருக்கிறது. ரண சிகிச்சை செய்ய வேண்டிய கொடிய நோய்கள் பலவற்றில் — ஏறத்தாழ எல்லாவற்றிலும்-ரண சிகிச்சை நிபுண ரின் உதவி அறவே தவிர்க்கப்பட் டிருக்கிறது. வைத்திய நிபுணர்கள் அசாத்திய மென்று தீர்மானமாகச் சொல்லிவிட்ட உடல், மனம் சம்பந்தப் பட்ட நோய்கள் மிகக் குறுகிய காலத் தில் அதிசயிக்கத்தக்க முறையில் குணம் அடைந்திருக்கின்றன, சில ரோகங் களைத் தடை செய்யவும் செய்திருக் கிறது. எனவே, வைத்திய நிபுணர் களே பிரமித்துப் போயினர்.

இவ்விதமாகச் சமீப காலத்தில் மேல் நாட்டில் பரவி வரும் 'டைனடிக்ஸ்' என்னும் இந்த விஞ்ஞானக் கலை சரீரத் துக்கும் மனத்துக்கும் உள்ள சம்பந் தத்தை நன்றாய் விளக்குகிறது. இவ் விஷயமாக நம் நாட்டுச் சாஸ்திரங்கள் சொல்வதை அப்படியே ஒத்திருக்கிறது! இவ்வாறு மேல் நாட்டு வசிஷ்டர்களே 'பிரம்மரிஷி!' என்று சொன்ன பிற காவது நம் நாட்டு விச்வாமித்திரர்கள் சாந்தம் பெறுவார்களா? (தொடரும்)

## லக்ஸ் டாய்லெட் சோப்பை
## நீங்களே உபயோகித்து பார்க்குமாறு
## சிபார்சு செய்கிறார் லலிதா. "தூய்மை,
## வெண்மை—இரண்டும் பொருந்திய சோப் இதோ!"

தமது மேனியை அப்பழுக்கின்றி வைத்திருக்க லலிதா எப்பொழுதும் உபயோகிப்பது லக்ஸ் டாய்லெட் சோப். அதன் செழிப்பான நறுமணமுள்ள நுரை எத்தகைய மெருகேற்றுகிறது என்பதை அவர் அறிவார்.
சினிமா நட்சத்திரங்கள் செய்வதை நீங்களும் பின்பற்றுங்கள்—உங்கள் மேனிக்குப் பாதுகாப்புத் தரும் மென்மையான இப் பராமரிப்பை அளித்திடுங்கள். ஞாபகமிருக்கட்டும், லக்ஸ் டாய்லெட் சோப்பின் அற்புத வெண்மைத் தோற்றமே அதன் தூய்மைக்கு அத்தாட்சி.

## லக்ஸ் டாய்லெட் சோப்




**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 494-50 TM



கதை

# ஜிகினா ரவிக்கை

கு.ப.சேது அம்மாள்

தஞ்சைமா நகரத்து அரண்மனை அன்று மங்கள அலங்காரத்தோடு கண் விழித்தது.

மன்னர் துளஜாஜியின் பட்டத்துராணியான காமாட்சியின் பிறந்ததின விழாவில் அரண்மனை வாசலில் முழங்கும் வாத்தியகோஷம் திசைகளை அதிரச் செய்து கொண்டிருந்தது.

சமஸ்தானத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களும், நகரப் பிரமுகர்களும் புதுப்புது ஆடை அலங்காரங்களோடு ராஜ சபைக்கு விரைந்து கொண்டிருந்தார்கள்.

காமாட்சியின் அந்தப்புரத்தில் ராஜ குடும்பத்துப் பெண் மணிகளும், உயர் குடும்பத்துப் பெண்மணிகளும் குழுமி இருந்தார்கள்.

காமாட்சி தேவி மங்கல நீராடிப் புத்தாடைகள் ஆபரணங்கள் அணிந்து, மலர் சூடி, நெற்றியில் கஸ்தூரி திலகமும் குங்குமமும் துலங்க, குலதெய்வத்தை வணங்கி வழிபாடுகள் செய்து விட்டு அந்தப்புரத்துக்குள் ஒய்யாரமாகப் பிரவேசித்தாள்.

மைதீட்டி அழகிடப் பெற்ற அவளுடைய தீர்க்கமான கண்கள் சுற்றிச் சுழன்று யாரையோ தேடின! அந்தக் குறிப்பை உணர்ந்த பணிப்பெண் அருகில் வந்ததும், "ராஜாயி வரவில்லையா, கங்கா?" என்று கேட்டாள் ராணி.

"இதோ வந்து கொண்டே இருக்கிறேனே!" என்ற குரல் கேட்டுத் திரும்பினாள் மகாராணி.

அவளுடைய அருமைச் சிநேகிதி ராஜாயி புன்னகை மலர நின்று கொண்டிருந்தாள்.

"ராஜாயி! ஏன் இவ்வளவு நேரம் உனக்கு? பூஜையின்போதே உன்னை வரச் சொல்லவில்லையா?" என்று வினவினாள் ராணி.

"ஆம். நேரம்தான் ஆகிவிட்டது! தேவி, மன்னித்தருள வேண்டும்!" என்று குறும்பாகச் சொல்லிச் சிரித்த வண்ணம் கை கூப்பினாள் ராஜாயி. ராணி காமாட்சி கலகலவென்று சிரித்தாள்.

உடனே மகாராஜாவின் புரோகிதர் வீட்டு மூதாட்டியான சுமங்கலி வந்து அங்கு தங்கத் தாம்பாளத்தில் வைக்கப்பட்டிருந்த புஷ்பம், சந்தனம், குங்குமத்தைக் காமாட்சிக்கு அணிவித்து, மங்கலப் பொருள்கள் நிறைந்த அந்தத் தட்டையும், ஆடை ஆபரணங்கள் நிறைந்த மற்றொரு நவரத்தின கசிதமான தாம்பாளத்தையும் எடுத்துக் கையில் கொடுத்து ஆசீர்வதித்தாள்.

பிறகு முறையாக அந்தப்புரத்து மற்ற ஸ்திரீகளும், பிரமுகர்கள் வீட்டுப் பெண்மணிகளும் தாங்கள் கொண்டுவந்த காணிக்கைப் பொருள்களைச் செலுத்தித் தங்களது சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

கடைசி மட்டும் காத்திருந்து விட்டு ராஜாயி, நெற்றியில் குங்குமமிட்டுப் பட்டு வஸ்திரத்தில் சுற்றியிருந்த தனது காணிக்கைப் பொருளைக் கையில் கொடுத்து அன்புப் பெருக்குடன், "காமாட்சி! உன் தோழியின் எளிய, ஆனால் அன்பு நிறைந்த சிறு பரிசு இது உனக்கு!" என்று கூறினாள்.

ராஜாயியின் அன்பு நிறைந்த சொற்களால் காமாட்சியின் மனம் நெகிழ்ந்தது. நீர் நிரம்பிய கண்களை உயர்த்தித் தோழியைப் பார்த்தாள்.

பிறகு மன்னருடைய உத்தரவை அனுசரித்து வந்தவர்களுக்குத் தன் கையினால், ஆடைகள், ஆபரணங்கள், தன தான்யங்கள் யாவும் வழங்கினாள்.

எப்பொழுது இதெல்லாம் முடியும் என்று காத்திருந்தவள் போல ஆசனத்தை விட்டு எழுந்து எல்லோருக்கும் விடை கொடுத்து அனுப்பிவிட்டு ராஜாயியின் கையைப் பற்றித் தனது அறைக்குச் சென்றாள். வைத்திருந்த பட்டு வஸ்திர முடிப்பை அவிழ்த்தாள்.

ஜிகினா வேலை செய்த பச்சை வெல்வெட்டினால் ஆன ரவிக்கை ஒன்று இருந்தது!

பிரித்துப் பார்த்தாள் காமாட்சி. ஆச்சரியத்தினால் அவள் கண்கள் விரிந்தன! மிகுந்த சந்தோஷத்துடன் தோழியின் கையைப்பற்றி, "ராஜாயி! உன் கையால் வேலை செய்ததா இது?" என்று கேட்டாள்.

"இல்லை, தையல்காரி ஸோனுபாயிடம் கொடுத்துச் செய்யச் சொன்னேன். உனக்குப் பிடித்திருக்கிறதா, காமாட்சி?"

"அபூர்வமான வேலை, ராஜாயி. மிகமிக உயர்வு என்று மன்னரால் தயாரிக்கப்பட்ட என் உடைகளில் எதுவும் இம்மாதிரி இல்லை."

ராஜாயியும், "ஆமாம்! வாஸ்தவம்தான். ஸோனுபாயின் வேலைப்பாடு தரமானதுதான்! அதனால்தான் உயர் குடும்பத்துப் பெண்கள் எல்லாம் அவளிடம் கொடுக்கிறார்கள். அந்தப் பெண்ணும் ரொம்ப நல்லமாதிரி.

அவள் செய்யும் பூ வேலையும் ரொம்ப நன்றாகத்தான் இருக்கும்...."

"அப்படியா? அவளை அழைத்துக் கொண்டு வாயேன் நாளைக்கு. வேலை கொடுப்போம் அவளுக்கு. அழைத்தால் அவள் வருவாள் அல்லவா?" என்று கேட்டாள் ராணி.

"வராமல் என்ன? அதிலும் அரண்மனை அந்தப்புர வேலை என்றால் குதித்துக் கொண்டு வரமாட்டாளா!"

"ரொம்ப சரி, நாளைக்குக் கட்டாயமாக அவளை அழைத்துக் கொண்டு வா!"

"உத்தரவுப்படி....அதோ! மகாராஜா வருகிறாற் போலிருக்கிறது. — நான் போய் வரட்டுமா?"

"அவசியம் நாளைக்கு அந்தப் பெண்ணோடு வரவேண்டும்" என்று அவளுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு மன்னரை எதிர் கொண்டு அழைக்க வேகமாக எழுந்து சென்றாள் ராணி காமாட்சி.

காமாட்சியின் பேரழகுக்கு ஆசைப்பட்டு, அரும் பிரயாசைப்பட்டு மணம் புரிந்துகொண்டார் மன்னர். அவளைத் தமது நேத்திர ஸ்தானத்தில் வைத்துக் காப்பாற்றியும் வந்தார்.



அவளுடைய தீர்க்காயுளைக் கருதி ஜன்ம தினத்தன்று அநேக தான தர்மங்கள் செய்து விட்டு, தமது மனப்பூர்வமான ஆசியைத் தருவதற்காக வந்து கொண்டிருந்தார் அரசர். இயற்கையிலேயே வடிவழகு பொருந்திய அந்தக் காமாட்சி மகாராணிக்குரிய அலங்காரத்தோடு சௌந்தர்ய தேவதை போல் தம்மை எதிர்கொள்ள வந்ததும் ஆனந்த பரவசமாகி அவளது சிரசில் கை வைத்து, "தேவி! அம்பிகை உனக்கு நீண்ட ஆயுளை அருள வேண்டும்" என்று கூறி மன்னர் ஆசீர்வதித்தார்.

மன்னரின் பாதம் தொட்டு வணங்கி, இன்முகத்துடன், "மகாராஜா! பரிசு ஒன்றுமில்லையா எனக்கு?" என்று வேடிக்கையாகக் கேட்டாள் மகாராணி.

துளஸாஜி ஒருகணம் யோசித்து விட்டு அவள் முகவாயைப் பற்றி, "காமாட்சி! எனது செல்வமே! உன்னை என்று சித்திரத்தில் கண்டேனோ அன்றே என்னையும், என்னுடைய உடைமைகளையும் உனக்கு அளித்து விட்டேனே! மறுபடியும் உனக்குக் கொடுக்க...." என்று கூறினார். பிரேமைப் பெருக்கினால் அவரது வார்த்தை தடைப்பட்டது. அரசருடைய அன்புக்கு ஆழம் காண முயன்ற காமாட்சி தடுமாறிப் போனவளாக, "பிராணபதி! பரிகாசத்துக்கன்றோ வினவினேன். கிடக்கிறது. இதோ பாருங்கள்! ஒரு அபூர்வமான வஸ்து எனக்குக் கிடைத்திருக்கிறது" என்று கூறி ராஜாயி கொண்டு வந்து கொடுத்த ஜிகினா ரவிக்கையை எடுத்து அரசர் கையில் கொடுத்தாள். பிரித்துப் பார்த்த மன்னர், "இது ஏது, காமாட்சி? யார் கொடுத்தது?" என்று வியப்போடு கேட்டார்.

"என் சிநேகிதி ஒருத்தி..ராஜாயி என்று."

"அவள் செய்த பூ வேலையா இது?"

"இல்லை. வேறு யாரோ ஒரு தையற்காரியாம்; ஸோனுபாய் என்று...."

அரசர் ஆச்சரியத்தில் ஆழ்ந்தவராக, "ஆச்சரியம்! நமக்கும் தெரியாமல் இவ்வளவு கைதேர்ந்த பெண் இருக்கிறாளா நம் நகரத்தில்?" என்று கேட்டார்.

"நாளைக்கு அவளை அழைத்து வரச்சொல்லி இருக்கிறேன். பாவம், கூலிக்கு வேலை செய்து கொடுக்கிறாள்" என்று இரக்கத்தோடு மொழிந்தாள் ராணி.

"வந்தாளானால் தாராளமாகச் சன்மானம் கொடுத்தனுப்பு, ராணி!" என்று கூறிவிட்டு எழுந்தார் துளஸாஜி மகாராஜா.

மறுதினம் பிற்பகல். வாசற்கதவு தட்டப்படுகிற சத்தம் கேட்டு எழுந்து வந்து கதவைத்திறந்த ராஜாயி, வாசலில் ஸோனுபாய் நின்றதைக்கண்டதும், "வா, ஸோனு! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். உள்ளே வா!" என்று அவளை அழைத்துக் கொண்டு உள்ளே திரும்பினாள்.

ஸோனுபாய், "என்னம்மா சமாசாரம்? என்ன தைக்கணும்?" என்று கேட்டாள்.

"உட்காரு, கொஞ்சம்! உன்னோடு பேச வேண்டும்!" என்றாள் ராஜாயி.

திடுக்கிட்டு விழித்தாள் ஸோனு:

"உன்னிடம் காமாட்சி தேவிக்கு என்று பூ வேலை செய்து வாங்கினேன் அல்லவா, ஒரு பச்சை ரவிக்கை?"

"ஆமாம்."

"அது ராணிக்கு ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது. உனக்கு அரண்மனை அந்தப்புரத்தில் வேலை கிடைக்கும். 'லோ, லோ' என்று தெருத் தெருவாக நீயும் கிழவரும் அலைய வேண்டாம், இனி மேல்."

"நானா! ராஜாங்கத்திலா எனக்கு உத்தியோகம்? ஐயையோ! என்னால் முடியாதம்மா!"

"ஏன்?"

"எனக்குப் பயம். அங்கெல்லாம் நான் வரமாட்டேன். அப்பா கோபிப்பார்."

"ஒன்றும் கோபிக்க மாட்டார். அசட்டுப் பெண்ணே! வலுவில் வரும் ஸ்ரீதேவியைக் காலால் உதைக்காதே. புறப்படு. மாலைக்குள் திரும்பி விடலாம். ஒன்றும் பயப்படாதே!" என்று தைரியப்படுத்தினாள் ராஜாயி.

"இருங்கள். அப்பா வீட்டில்தான் இருக்கிறார். ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு

வந்து விடுகிறேன்'' என்று எழுந்து வாசலுக்குத் திரும்பினாள் ஸோனு.

''சீக்கிரம் வரணும். காத்திருப்பேன்!'' என்று சொல்லி எச்சரித்தாள் ராஜாயி.

ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு வந்த ஸோனுபாயைக் கண்ட சகாராம்ராவ், ''எங்கு போனாய்?'' என்று கேட்டார்.

''ராஜாயி அம்மா கூப்பிட்டு அனுப்பியிருந்தார்கள். போய் வந்தேன்.''

''உம்.''

''நேற்று, ராணிக்குப் பிறந்த நாள் பரிசு என்று என்னை ரவிக்கையிலே பூ வேலைசெய்து தரச் சொல்லவில்லையா?''

''ஆமாம்.''

''அதைப் பார்த்த ராணிக்குப் பூ வேலை ரொம்பப் பிடித்து விட்டதாம். என்னைப் பார்க்கவேண்டுமென்று சொல்கிறார்களாம்!''

''அந்த அம்மாளும் கூட வருவதானால் போய்விட்டு வாயேன்.''

''பயமாக இருக்கிறது, அப்பா!''

''பயமென்ன?''

''என்னவா? எனக்கு மனமில்லை.''



''சே, அது தப்பு. ராணியாகக் கூப்பிட்டு அனுப்பினால் போகாமலிருப்பது கூடாது. போய் விட்டு வா, அம்மா!''

''எதற்குக் கூப்பிடுகிறார்கள், தெரியுமா? அவர்களுக்கு வேலை செய்ய.''

''அப்படியிருந்தால் அது பவானி தேவியின் அனுக்கிரகம் தான். ஸோனு. போய் விட்டு வா. ராஜசமூகத்துக்கு வெறுங் கையோடு போகக் கூடாது. ஏதோ நம்ம சக்திக்கு ஏற்றது கொண்டு போய்க் கொடுத்துப் பார்த்து விட்டு வா!''

''அரண்மனைச் சேவகத்தில் ஆதாயமிருப்பதுபோல், ஆபத்தும் இருக்கலாமே?''

''என்ன விஷயம் என்று பார்த்துக் கொண்டுவா. ஆபத்தாக இருந்தால் நீ அங்கே போக வேண்டாம்!''

ஸோனு தயங்கியபடி, ''ராமதாஸைக் கேட்க வேண்டாமா ஒரு வார்த்தை?'' என்று தணிவாகக் கேட்டாள்.

''அவனை என்ன கேட்பது? தாலிகட்டின பிறகுதான் அவன் உத்தரவை எதிர்பார்க்க வேண்டும் — இப்பொழுது அவசியமில்லை. போய்விட்டுவா'' என்று ஆக்ஞாபித்த தந்தையின் கட்டளையை அவளால் மீற முடியவில்லை. பெட்டியைத் திறந்து தந்தை குறிப்பிட்டபடி சிவப்புப் பட்டு ரவிக்கைத் துணியை எடுத்துக் கொண்டாள். சகாராம் ராவ் எழுந்து எட்டணா நாணயமொன்றை அவள் கையில் கொடுத்து, ''கடைத் தெருவில் நாலு முழம் கதம்பமும்— எலுமிச்சம் பழம் ஒன்றும் வாங்கி எடுத்துக் கொண்டு போய்ப் பார்த்து விட்டு வா'' என்று கூறினார்.

மனம் நிறையப் பாரத்தைச் சுமந்து கொண்டு நடந்தாள் ஸோனுபாய். அவளுக்கான வயது இருபதில் இன்றுதான் அவள் மனத்தில் அதிர்ச்சியும் துக்கமும் உண்டாயின!

குழந்தைப் பருவத்திலேயே தாயை இழந்தும், அந்தக் குறை தெரியாமல் வளர்த்தார் தந்தை சகாராம் ராவ். தையல் வேலையும், ஜிகினாவில் பூவேலை செய்வதும் அவர்களுடைய பரம்பரைத் தொழில். கை உழைப்பால் உணவருந்திக் கவலையற்று வளர்ந்த குமரி ஸோனு— மராத்தியருக்குள்ள நிறமும், எழிலும் அமைந்தவள். ஸ்ரீதேவி தாண்டவமாடும் முகம். சுறுசுறுப்பும், சூடிகையும் அவளோடு கூடப் பிறந்தவை. தமது தமக்கையின் மகன் ராமதாஸ் என்னும் வாலிபனுக்கு மகளை விவாகம் செய்துதர நினைத்திருந்தார் சகாராம் ராவ் — நிச்சயம்கூடச் செய்து விட்டார் தம் மட்டில்.

ராமதாஸ் அரண்மனைக் காரியாலயத்தில் வேலை பார்ப்பவன். வாட்ட சாட்டமான உடல் அமைப்பு. தந்தம் போன்ற நிறம். வசீகரமான கண்களோடு கூடிய யுவன். தந்தையின் உத்தேசத்துக்கு முன்னதாகவே ஸோனுவின் மனத்தில் குடிகொண்டவன். அவனிடம் அநுமதி கேட்டுக் கொண்டு புறப்படாததில் ஸோனுவுக்குக் குறைதான்.

ராஜாயியின் வீட்டு வாசலில் தனக்காகக் காத்து நின்ற வண்டியில் ஏறி ராஜாயியுடன் பாதி வழி வந்துவிட்டாள். அப்பொழுதுதான் பூவும் எலுமிச்சம் பழமும் வாங்க மறந்து விட்டோமே என்ற நினைவு வந்தது.

''அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். சும்மா வா, நீ!'' என்றாள் ராஜாயி. அடுத்த சில விநாடிகளில் அந்தப்புர வாசலில் வந்து நின்றது வண்டி.

ராணி காமாட்சியை முறைப்படி வணங்கிய ஸோனுபாய் தன் கையிலிருந்த ரவிக்கைத் துணியை ராஜாயியிடம் கொடுத்து, ''அம்மா! இந்த அற்பமான பொருளை ராணியிடம் கொடுக்க வெட்கமாக இருக்கிறது'' என்று தாழ்ந்த குரலில் சொன்னாள். ராஜாயி அதைக் கையில் வாங்கி, ''இதோ பார், இந்தப் பெண் உனக்குக் காணிக்கை கொண்டு வந்திருக்கிறாள். இச்சிறு பொருளைக் கொடுக்க வெட்கமாக இருக்கிறதாம்!'' என்றாள்.

ராணி காமாட்சி அதை வாங்கிக்கொண்டு ஸோனுவைப் பார்த்து, ''உட்காரு, அம்மா! யாரிடமும் மனத்திலுள்ள அன்பு பெரிதாக இருக்கிறதா என்றுதான் நான் கவனிப்பேனே யொழிய, பொருள் விலையுயர்ந்ததா என்று பார்ப்பதில்லை! உட்காரு, ஸோனு! இனிமேல் நீ இங்கு இருக்க வேண்டியவள்!'' என்றாள் ராணி.

''இந்தா, ஏற்கனவே இவள் பயந்தவள்: அரண்மனை என்றால் ஏதோ தண்டனைதான் அங்கு கிடைக்குமாக்கும் என்று இவ்வளவு பயந்தவள், போதாதற்கு 'இனிமேல் நீ இங்கேயேதான் இருக்க வேண்டும்' என்றால் செத்தே போய்விடுவாள்'' என்றாள் ராஜாயி.

கலகலவென்று சிரித்தார்கள் இருவரும். காமாட்சி கனிவு தோன்றும் குரலில், ''அப்படியெல்லாம் பயப்படாதே, ஸோனு. உனக்கு

விருப்ப மிருந்தால் நீ இங்கேயே என் தோழி யாக இருக்கலாம். அதுதான் என் விருப்பம். உனக்கு அது விருப்பமில்லையானால் காலையில் வந்துவிட்டு மாலையில் போய்விடு. பகலில் இங்கிருந்து என் உடைகளுக்கு வேலைசெய். மாதம் மாதம் சம்பளம் தருகிறேன்'' என்றாள்.

''மகாராணியின் ஆதரவு என் பாக்கியம். இதை அப்பாவிடம் சொல்லி ஆலோசித்துக் கொண்டு வந்து பதில் சொல்லுகிறேன்'' என்றாள் ஸோனு பணிவாக.

''பேஷ்! அழகாக வேலை செய்கிறாய். அழகாக இருக்கிறாய்; அழகாகவும் பேசுகிறாய்! ஸோனுபாய்! உன்னைக் கண்டதும் ஏனோ என் மனம் உன்மீது பற்றுதல் கொள்ள முயலுகிறது. காரணம் தெரியவில்லை...'' என்றாள்.

ஸோனுவுக்கு நிறையத் தின்பண்டங்களும், பரிசுப் பொருள்களும் தந்து அடுத்த நாள் முதல் வந்து அங்கு வேலை தொடங்க வேண்டும் என்று கூறி விடை கொடுத்துத் தக்க துணையோடு அனுப்பி வைத்தாள். பிறகு தன் தோழி ராஜாயியை நோக்கி, ''பாவம், ஸோனு ரொம்ப ஏழை போலிருக்கிறது. இப்படிப் பட்டவர்களுக்குத்தான் உதவி செய்ய வேண்டும். வெளி வேலை எதுவும் வேண்டாம் என்று சொல்லிமாதம் இருநூறு ரூபாய் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன்!'' என்றாள்.

''தாராளமாகக் கொடுக்கலாம். பணமில்லாத தோஷத்தால் வரன் கையிலிருந்தும் விவாகம் செய்ய முடியாமல் சிரமப்படுகிறாராம் அவள் தகப்பனார்'' என்றாள் ராஜாயி.

''அடடா! அப்படியா? கொஞ்ச நாட்களில் அதை நாமே செய்து வைத்துவிட்டால் போகிறது; புண்ணியமாயிற்றே!'' என்றாள்ராணி.

அவளுடைய வார்த்தையை எண்ணிப் பின்புறமாகச் சிரித்தது காலதேவதை.

மூப்பது நாட்கள் ஓடி ஒளிந்து விட்டன. இரவு ஒன்பது மணி இருக்கும்.

காமாட்சி மஞ்சத்தில் குப்புறக் கிடந்தாள், அறுபட்ட கொடிபோல் துவண்டு கிடந்தாள்.

'' காமாட்சி '' என்று அழைத்துக் கொண்டே வந்தாள் ராஜாயி.

''ராஜாயி! பிறந்த நாளும், ஜிஜெ ரவிக்கையும் என் வாழ்வைப் பொசுக்கி விட்டன! அநியாயமாக—ஒரு அபலையின் இன்ப வாழ்வுக்கு உலை வைத்து விட்டேன் பாவி. என்ன அப்படி விழிக்கிறாய்? ஸோனுபாயின் அழகுக்கு முன் என்னுடைய அழகு மங்கிச் செத்து விட்டது. நேற்று துளஸாஜி மகாராஜாவுக்கும், ஸோனுபாய்க்கும் கலியாணமாகிவிட்டது!'' என்று உள்ளங்குமுறக் கூறினாள்ராணி.

''என்ன? யானை தனது தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வதைப் போல நீயாகவே இந்த வினையை விலை கொடுத்து வாங்கினாயே காமாட்சி!'' என்றாள் ராஜாயி உள்ளம் உருக.

''ராஜாயி! என் தலையில் நான் மண்ணைப் போட்டுக் கொண்ட கவலையைத் துரத்திவிட்டது, அந்தப் பெண்ணின் உயிர்த் துடிப்பு. அவளுடைய விருப்பத்தைத் துளியும் லட்சியம் செய்யாமல்-தமது மகள் ராணியாவதைப் பெரும் பேறாக நினைத்து நிர்ப்பந்தப் படுத்தினார் அவள் தந்தை. அவரைச் சொல்வானேன்?—மகாராஜாவின் ஆக்ஞை அப்படி இருந்திருக்க வேண்டும்! ..ராஜாயி! என்ன அக்கிரமம் இது!''

''அக்கிரமமென்ன, காமாட்சி? அவளை இங்கு அழைத்து வந்தது நமது பிசகல்லவா?''

''ஆமாம்! பெரும் பிசகுதான்! எனது அலங்கார ஆசை அந்தப் பேதைப் பெண்ணின் இன்ப வாழ்வுக்கு உலை வைத்து விட்டது! நேற்றிரவு அவளைப் பார்த்து வரலாம் என்று போனேன். நான் வந்ததைக் கூடக் கவனியாமல், 'ராமதாஸ் இந்தப் பாவியை ஏன் நேசித்தாய்?—ஐயோ! இப்படி நேருமென்று தெரிந்திருந்தால் அன்றே உயிர்துறந்திருப்பேனே!' என்று கூறி அழுதாள். என் நெஞ்சை என்னவோ செய்தது. ஆறுதல் அளிப்பதற்காக அவள் அருகே போனேன். அப்பொழுது அவள் என்னைப் பார்த்த அந்தப் பார்வை! 'தையற்காரியாக இருந்த என்னை இங்கே அழைத்து வந்து மகாராணியாக உயர்த்தினீர்களே!' என்று கேட்பதுபோ லிருந்தது. நான் வெட்கித் தலை குனிந்தேன். 'நீங்கள் என்ன செய்வீர்கள், பாவம்! என் தந்தையின் பேராசை என் சுக வாழ்வை நாசம் செய்து விட்டது! மகாராணி! நான் ராணியாகி விட்டேன்! சுகபோகங்களை நான் விரும்பாவிட்டாலும் அனுபவிப்பேன். ஆனால் என் ஆருயிர் ராமதாஸ் பைத்தியமாகத் தெருவில் திரிவார்!' என்று முகத்தில் அறைந்து கொண்டு கீழே விழுந்தாள். இந்தப் பெண் பாவம் யாரைச் சூழும்?''

''சந்தேகமென்ன, என்னைத்தான்!''

''எப்படி?''

''எப்படியா? ஜிஜெ யார் தைத்தது என்று கேட்டபொழுது 'நான் தான்' என்று கூறியிருக்க வேண்டும்! உன்னிடம் உண்மையைச் சொல்லி விட்டு அவளையும் அழைத்து வந்தது என் தவறுதானே?''

''துளஸாஜியின் மனத்தில் என்னைத் தவிர எந்தப் பெண்ணும் இடம் பெற இயலாது என்ற கர்வத்தில் அவர் அந்தப்புரம் வரும் சமயங்களில் இவளை ஒளித்து வைக்க மறந்தேன்! நான் உன்னைப் பலாத்காரமாக அவளை இங்கே அழைத்து வரச் சொன்னதால்தானே இவ்வளவும்?— அவள் பாவத்தைக் கொட்டிக் கொண்டுவிட்டேன்!''

''கொட்டிக் கொண்டு விட்டோம் என்று சொல்லு, காமாட்சி! அந்த வாலிபனையும் எனக்குத் தெரியும். இருவரும் ஏற்ற ஜோடி! எப்படி வந்து மூண்டது பார்த்தாயா விதி?''

''எப்படி வந்தது என்றால் ஜிஜெ ரவிக்கை மூலமாக! பார், பார், இங்கிருந்தே தெரிகிறது பார்! அந்தச் சாளர வாயிலில் ஸோனுபாய் நின்று அவர்கள் வீடு இருக்கும் திக்கில் பார்த்துக்கொண்டு அழும் கண்ணராவியை!'' என்றாள் ராணி காமாட்சி.

கண்ணீரால் முகம் நனைய வெற்று வெளியைப் பார்த்துக் கொண்டு ஏதோ கூறி இரங்கும் ஸோனுவின் அப்பொழுதைய தோற்றத்தைக் கண்டபொழுது, எங்கேயோ தொலை தூரத்தில் ராமதாஸ் பைத்தியம் பிடித்து உலாவுவது போலும், அதைக் கண்டு ஸோனுபாய் பொருமுவது போலும் ஒரு பிரமையை உண்டாக்கியது.

# நோபெயின்

உபயோகியுங்கள்

கால்கெமிகோ வின் வலிநீக்கும் களிம்பு

நோபெயினை சற்றே தேய்த்து வியக்கத்தக்க வலிநிவாரணத்தைப் பெறுங்கள்

நோபெயின் களிம்பின் பல உபயோகங்களில் சில



தலை வலி





மார்புச் சளி

இடுப்பு வலி



சுத்தமாக சீல்வைத்த டியூபுகளில் சப்ளை செய்யப்படுகிறது

"தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்." கல்கத்தா-29

தென் இந்திய ஆபீஸ்: 6/149, பிராட்வே, சென்னை-1

---

# நரஸூ காபி

அருந்தி அதன்

பிரத்யேகமான ருசியை

அனுபவியுங்கள்



நரஸுஸ் மான்யுபாக்சரிங் கோ. பிரைவேட் லிட்.,

சேலம் & சென்னை

NCZ-21 ATM

# ஒரே விருப்பம்

வாசவன்

"சரளா!...."

"ஊம்...."

"வாயிலே என்ன இருக்கிறது? 'ஊம்' என்றால்....?"

"எதற்காக இப்படிக் கத்துகிறீர்கள்?"

"நாய்க்கு வேறே என்ன தெரியும்?"

"விஷயத்தைச் சொல்லுங்கள்."

"அ..ம்..மா!....தலையை வலிக்கிறது!..ஊம்!....

"மானிடப் பிறவிதானே? நோய் வரத்தான் செய்யும்!"

"ஐயோ! உயிர்போகிறதே! இங்கே கொஞ்சம் வாயேன்."

"நான் வந்தால் மட்டும் என்ன தீரப் போகிறது? கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொள்ளுங்கள்."

"தலைவலி மருந்தைச் சிறிது தடவி விட்டுப் போயேன்."

"அலமாரியில்தான் இருக்கிறது. எடுத்து நீங்களே தடவிக் கொள்ளுங்கள்."

"மகாராணிக்கு வேறு வேலையிருக்கிறதோ?"

"மாதர் சங்கத்துக்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன்."

சங்கரன் படுக்கையில் திரும்பிப் படுத்தான். மக்கிச் செல்லரித்துப் போன மனதின் மூடி திடீரென்று கழன்று விழுந்தபோது, வெகு நாட்களாக உள்ளுக்குள் 'நடந்து கொண்டிருந்த போர், உள்ளுக்கும் வெளிக்கும் தன்னுடைய எல்லையை விரித்துப் பரப்பிப் பேயாட்டம் போடுகிறது.

'ஊ..ம்..!..அப்பா!'

இப்பொழுது வலி கிளம்புவது எந்த இடத்திலிருந்து? தலையிலா, மூளையிலா, மனத்திலா? எந்தப் பொறியிலிருந்து இந்த உணர்ச்சி கிளறிவிடப்பட்டு அலை கிளம்புகிறது? மனம், என்ற ஒன்றைச் சுட்டிக் காட்டுகிற இடத்தைமனிதசமுதாயம் கண்டுபிடித்திருக்கிறது என்றாலும், வேதாந்த ரீதியாக ஏன், விஞ்ஞான ரீதியாக—மனம் பிறந்து நிற்கிற இடத்தைக் கண்டு பிடிக்காத காரணத்தால்தான் வலி உடல் முழுதும் பரபரக்கிறதா?

சங்கரன புழுவின் நிலைக்குத் தன் உடலை ஒப்புவித்துவிட்டு, இதயத்தை—ரத்தத்தைப் பங்கிட்டு உடலுக்குத் தருகிற கேந்திர பீடத்தை — அழுக்கிப் பிடித்தான். சரளா கண்டிவிட்ட சொடுக்கு அந்த ரத்தத்தில் தோய்ந்து அவனுக்குச் சவால் விடுகிறது. 'உடம்பில் ஓடுவது ரத்தம் தானா? இல்லை 'ஓட'வில்லை. தேங்கி நிற்கிறது. அதனால் தான் உனக்கு மனிதனுக்கு இயல்



பாய், இயற்கை விளைவாய் எழுகின்ற சூடு இல்லை ; ஸ்மரணை இல்லை.'

படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான் சங்கரன். தலைவலி, வாழ்க்கையின் வலியாக அவனை ஏன் ஆட்டிப் படைக்கிறது? நெஞ்சத்தைப் பிடித்து அமுக்கிக் கொண்டான்.

மல்லிகையின் மணம் வந்தது ; பௌடரின் வாசனை வந்தது ; புடவையின் சலசலப்பு வந்தது ; வளையலின் ஒலி வந்தது. அப்புறம் நடையின் ஓசை வந்தது.

இப்பொழுது நிகழ்வது ஏதும் புதியதில்லை ; புதுச் சக்தி பெற்றதும் இல்லை. பின் ஏன் சங்கரனின் உள்ளத்திலே, அவை அந்த சக்தி பெற்றுப் புயலை எழுப்புகின்றன ?

சங்கரனுக்கு உடம்பு மலையாகக் கனத்தது. பொத்தென்று படுக்கையில் விழுந்தான்.

''என்ன?''

''ணம்!''

''உங்களைத்தான்!''

''கேட்கிறது!''

''ஆபீஸில் நிறைய வேலையிருக்கிறது!''

''இருக்கட்டும்.''

''எட்டு மணிக்குள் திரும்ப முடியாது.''

''முடியாமல் போகட்டும் !''

''உங்களுக்குத் தலைவலி என்றீர்களே?''

''தெரியாமல் சொல்லிவிட்டேன் !''

''உங்களுக்குப் பசித்தால்..''

''பசிக்காது.''

''போய் வரட்டுமா?''

''மறுபடியும் இந்த அறைக்கு வர வேண்டாம்.''

''என் தலை எழுத்து.''

''இல்லை, நம் தலை எழுத்து.''

பேச்சுத் தொடரவில்லை. நின்ற நடை தொடர்ந்தது.

முகத்தைத் தூக்கிப் பார்த்தான், சங்கரன் பந்தயக் குதிரையைப் போல. 'டாக்டாக்' என்று குதிகால் தூக்கிய செருப்பு ஓசையைக் கிளப்ப, கையில் தொங்கிக் கொண்டிருந்த அழகுப் பை ஆடி அசைய வாசலை நோக்கி விரைந்து போய்க் கொண்டிருந்தாள் சரளா.

சிறிது சிறிதாக அவள் பார்வையிலிருந்து அவள் மறைந்தாள். அவன் தலை 'ணங்' கென்று தலையணையில் சாய்ந்தது. மனம் ஆடிக் காற்றாய் அலைய, கண்கள் அதன் அசைவு தாங்காமல் தாமாக மூடிக்கொண்டன.

''சங்கரா!''

யார் அழைப்பது? கண்திறந்து பார்த்தான். யாரையும் காணோம். அந்தக் குரலின் ரீங்காரம் மட்டும் அவனை ஈர்க்கிறது. அன்பு வழிய அழைக்கும் குரல் எது? இந்த ஒரு வருஷச் சூழ்நிலையில் கேட்காத பரிவு இப்பொழுது இந்தக் குரலில் கேட்கும் விந்தை என்ன? விந்தையை நிகழ்த்துவது எது?

கண்கள் வலிக்கும் அளவுக்கு நாற்புறமும் பார்த்தான். உருவம் ஒன்றையும் காணோம். அலுப்புடன் அவன் விழிகள் மூடிக்கொண்டன. இருண்ட குகையாக இருந்த கண்களுக்குள் ஒளி தோன்றுகிறதே! ஓர் உருவம் மெல்ல மெல்ல மேல் எழும்புகிறதே? அந்த உருவம்....

'' அம்மா !....'' அன்பும் ஆதரமும் பொங்க வாய்விட்டு அலறினான் சங்கரன்.

'' உன் அம்மாதானடா நான்! வெறும் வெளிப்பகட்டில மயங்கி மடியவிருக்கும் உன்னைப் பெற்றதற்குப் பலனை அனுபவித்து விட்டேனடா, சங்கரா ! அன்று நான் முட்டிக் கொண்டேன். 'அந்தஸ்துக்கு அதிகமான இடத்தில் பெண் கொள்வது நல்லதல்ல. அந்தப் பெண் வேண்டாம்' என்றேன். கேட்டாயா, கல்லில்தான் மோதிக் கொள்வேன் என்றாய். 'பெண்ணை எடுத்தது பற்றிக் கவலை இல்லை. ஒரே பெண் என்ற காரணத்தால் அவளோடு சேர்த்து உன்னையும் விலைக்கு வாங்கப் பார்க்கிறார் அவளுடைய தகப்பனார். 'இருப்பது எல்லாம் அவர்களுக்குத்தானே? வீட்டுக்கு மாப்பிள்ளையாக அவன் வந்துவிடட்டும்' என்று அவர் பாக்குவைத்து அழைக்கிறார். போகாதேயப்பா ! பதறியடித்துக் கொண்டு ஓடிவருவாய். பணத்தைக் கண்டு பல்லைக் காட்டுகிறாய். அதை அடைய வேண்டுமென்ற ஆவேசத்தில் உன்னையே நீ விற்கவும் தயாராகி விட்டாய். உன்னை ஆணாகப் பெற்றேன், ஒரு பெண் கையைப் பிடித்து இங்கே அழைத்துக்கொண்டுவருவாய்என்று நினைத்து. ஆனால் நீ பெண்ணாக மாறி ஒரு பெண்ணின் வீட்டுக்குச் செல்லத் துணிந்து விட்டாய்!' என்று அடித்துக் கொண்டேன். திருப்பி நீ என் வாயிலேயே அடித்தாய். ' உலகம் மாறுகிறது. பழமை விடைபெற வேண்டும். என் மனைவி இருக்கிற இடம் சொர்க்கம். அவள் பெரும் பணக்காரருக்கு ஒற்றை மகளாகப் பிறந்தாள். அந்தச் சுகத்தை நான் அடைவதில் நீ ஏன் இத்தனை பொறாமைப் பட வேண்டும்? உன் மூத்த மகன் பெறாத சுகத்தை இளையவன் ஏன் பெறுவது என்ற வயிற்றெரிச்சலில் பேசுகிறாயா?' என்று கேட்டாய்....''

'' அன்று நீ சொன்னாய். எள்ளி நகையாடினேன். போலிக் கவர்ச்சி உன் தாய்மையை



தமிழ் எழுத்தாளர் கே. ஆர். கல்யாணராமன் (மகரம்) அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி நளினிக்கும் பிரபல வர்த்தகர் எம். வி. பி. சாஸ்திரி அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ஸ்ரீதரனுக்கும் 1—2—57 அன்று சென்னை, புரசைவாக்கத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. முகூர்த்தத்துக்கு ஏராளமான உறவினர்களும், நண்பர்களும், தமிழ் எழுத்தாளர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள் !

யும் சோதிக்க வைத்தது: அம்மா! என் பணக்கார மனைவி சொர்க்கமாக இருக்கவில்லை. என் மாமனார் அடிமையாக என்னை வாங்கிவிட்டவர் போலக் கீழ்த்தரமான வேலைகளையெல்லாம் செய்ய வைக்கிறார். 'ஐந்து லக்ஷ ரூபாய்ச் சொத்துக்கு எதிர்கால வாரிசு இவன்' என்ற எண்ணமே இல்லாது, 'எச்சில் சோற்றுக்கு ஏங்கி வந்தவன்' என்னும் மாதிரியில் சாதாரண வேலைக்காரன் கூட என்னை ஏளனமாகப் பார்க்கிறான். அம்மா! பெற்றவளிடம் சொல்வதில் பிழை என்ன? அன்புக்கு ஏங்குகிறேன்; ஆதரவுக்கு ஏங்குகிறேன். ஏங்கி ஏங்கிச் செத்துக் கொண்டே இருக்கிறேன். இன்று மாத்திர மல்ல. அன்றிலிருந்து முந்நூறு தடவைகள் சரளா என்னை அவமதித்திருக்கிறாள். கடும் ஜுரத்தில் இங்கே நான் அரற்றிக் கொண்டிருந்த பொழுது அங்கே மாதர் சங்கத்தில் பெண்கள் வாழ்க்கையைப் பற்றிப் பெரும் பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந்திருக்கிறாள். என்ன செய்வேன்?''

''என்ன செய்வதா?''

கேள்வி மறைந்தது. எங்கே அம்மாவைக் காணோம்? கண்களைத் திறந்தான். பின்பு லபக்கென்று மூடினான்—அந்த ஒளி வளைவினுள் அம்மா மீண்டும் தோன்ற மாட்டாளா என்ற நப்பாசையில். போனவள் போனவள்தான். மறுபடியும் அவள் நினைவில் நிற்கவில்லை. பிள்ளையின் குறையால் மனம் நைந்து, உடல்வாடி ஒரு நாள் இறைவனின் திருமலரடி சேர்ந்துவிட்ட அவள் இனி எங்கே திரும்பி வரப் போகிறாள்?

''என்ன செய்வது? இந்த ஒரு வருஷமாகப் பொற் கம்பியால் நிர்மாணித்த சிறைக்குள் அடைபட்டிருக்கும் நிலையிலிருந்து எப்படி விடுதலை யடையலாம்?'' அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

நான்கு மாதங்களுக்கு முன்பு அவனுடைய தமையன் பம்பாயிலிருந்து கடிதம் எழுதியிருந்தான். அதன் வாசகங்கள் ஞாபகத்துக்கு வந்தன.

''சங்கரா! படித்தவன் எப்படியடா முட்டாள் ஆனாய்? சம்பளம் கொடுக்காமலே நல்லதொரு வேலைக்காரனாக உன்னை உன்







மாமனார் விலைக்கு வாங்கி விட்டதாக இங்கு வந்தவர்கள் சொல்கிறார்கள். சரளா கூட உன்னை மதிப்பதில்லையாமே! கணவன் மனைவி ரகஸியம் இப்படி ஊர் சிரிக்கும்படி ஆகலாமா? நாம் ஏழைகள் தாம். யாருக்கும் அடிமையாகாமலே சாப்பிட்டோம். நம் குடும்பத்தில் ஆயிரம் பிணக்குகள் இருந்திருக்கலாம். அவை என்றும் சந்தி சிரித்ததில்லை. உன்னால் நாம் சிரிக்கும் நிலைக்கு ஆளாகி விட்டோம். இப்படிப் பேடியாக வாழ்க்கை நடத்துவதை விட ஒரு துளி விஷத்தை உண்டு நீ இறந்திருப்பாயானால், 'வாழ முடியாத நிலையில் என் தம்பி இறந்து விட்டான்' என்றாவது சந்தோஷப் பட்டிருப்பேன். நீ சாகாமலே சாகிறாய்? வாழாமலே வாழ்கிறாய். இந்த நிலை விரும்பக்கூடியதல்ல. யாருடைய தயவும் இன்றி வாழ முடியும் என்ற ஒரு சந்தர்ப்பத்தை இனியும் உண்டாக்கிக் கொள்ளாவிட்டால் 'திருந்திய மனிதன்' என்ற மன்னிப்பைக் கூட நீ பெற முடியாது. உடனே இங்கே புறப்பட்டுவா. உன் மனைவியும் வருவாளானால் சந்தோஷமே. வேலை காத்திருக்கிறது. மனிதனாகி விடு—கோபாலன்.''

'சுகம்' என்ற பொய்த் தோற்றத்திலிருந்து விடுபட்டு, மனிதனாகி விடக் கோபாலன் காட்டிய வழி இதோ சங்கரன் முன்னால் திறந்து விடப்பட்டிருக்கிறது. தனிப் பிரயாணத்தைத் தொடர அவன் உள்ளத்தில் திராணி இருக்குமா?

ஜன்னல் வழியாகக் குளிர்ந்த காற்று இதமாக வந்தது. சங்கரன் நெற்றியில் அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டான்.

''மாப்பிள்ளை!''

அந்தக் குரல் அதிகார மூர்த்தியினுடையதா? சங்கரன் திரும்பினான். வாசற்படியில் நின்றுகொண்டிருந்தார் அவன் மாமனார்.

முகத்தை அலட்சியமாகத் திருப்பிக் கொண்டு ''ஊம்'' என்று கேட்டான்.

''தோப்புக் குத்தகைப் பணத்தை ராவுத்தரிடமிருந்து வாங்கி வரும்படி சொன்னேனே, இன்னும் ஏன் போகவில்லை?''

''நான் போகப் போவதில்லை!''

''ஏன்?''

''போகவேண்டுமென்று தோன்றவில்லை!''

''இதுவரை உங்களுக்குத் தோன்றியபடி நீங்கள் நடந்து கொண்டதில்லையே?'';

''இப்பொழுதிலிருந்து எதுவும் என் விருப்பம்தான்.''

''போகப் போவதில்லையா?''

''போகத்தான் போகிறேன். ஆனால் உங்கள் விருப்பப்படியல்ல, என் விருப்பப்படி.''

''உங்களுக்குப் பைத்தியம்.''

சங்கரன் சிரித்தான்; சோகச் சிரிப்பு. மணியைப் பார்த்தான். ஏழரை. அரைமணி நேரத்துக்குள் ஸ்டேஷன் போய் விட்டால் பம்பாய் மெயிலைப் பிடித்து விடலாம். அதைப் பிடிப்பதற்காக எத்தனை விஷயங்களை உதறித் தள்ள வேண்டியிருக்கிறது?

அதென்ன சத்தம்? சரளாவா? படித்த பெண். செருப்போடு நடு வீட்டில் நடக்கலாம்! அவன் நின்ற அறையைக் கடந்து வேகமாக உள்ளே சென்றாள். 'எப்படியிருக்கிறது?' என்றுகூடக் கேட்கக் கூடாதா?

சங்கரன் இப்பொழுதும் சிரித்தான். உதட்டுச் சாயத்தில் வாழ்க்கை இருக்கிறதாக எண்ணி மயங்கும் ஓர் அபலைக்காக.

நேரம் நிமிஷங்களை நகர்த்திற்று.

ஓயாத சிந்தனைக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு, மூலைக்கொன்றாய்க் கிடந்த துணிமணிகளைப் பெட்டியில் எடுத்து வைத்தான். ஐந்து நிமிஷத்தில் வேலை முடிந்தது. தலை நிமிர்ந்தான் விடுதலைச் செருக்கோடு;

எதிரில் நின்று கொண்டிருந்தாள் சரளா.

''எங்கே புறப்பாடு?''

''எங்கிருந்து வந்தேனோ, அங்கே.''

'' 'நம்' வீட்டுக்கா?''

''இல்லை. 'என்' வீட்டுக்கு.''

''என்னை மன்னியுங்கள்.''

அடுத்த கணத்தில் அவன் காலடியில் அவள் விழுந்து கிடந்தாள். என்ன இது? உலகம் நிலை புரண்டு விட்டதா?

''எழுந்திரு!''

எழுந்தாள். நீர்விழிகளால் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். ''என்னையும் உங்களோடு அழைத்துச் செல்லுங்கள்.''

''ஏன்?''

'' புருஷன் வீட்டில் மனைவி இருப்பதுதான் கௌரவம்.''

''கௌரவத்தைப் பற்றிக் கூட உனக்குத் தெரிகிறதா?''

''தெரிந்துகொண்டு விட்டேன். அப்பாவின் செல்வத்தில் மயங்கிக் கிடந்தேன். ''அவள் முடிக்க முடியாமல் குலுங்கிக் குலுங்கி அழுது விட்டுத் தொடர்ந்தாள். ''மாதர் சங்கத்துக்கு அவசரமாக ஐந்நூறு ரூபாய் தேவையாக இருந்தது: அப்பாவிடம் கேட்டேன். 'எந்தச் செலவுக்கும் ஒரு கணக்கு வேண்டும். இங்கே உன் புருஷன் வீட்டுச் சொத்து ஒன்றும் கொட்டிக் கிடக்கவில்லை!' என்று குதித்தார். அவர் சொன்னது வாஸ்தவம் தானே? என் கணவர் இருக்கும் நிலையில் இருந்தால் அல்லது நம் வீட்டில் நானிருந்தால் இவர் என்னை இப்படிக் கேவலமாகப் பேசியிருப்பாரா?''

சங்கரன் பேசவில்லை; பேச ஒன்றும் அவனுக்குத் தோன்றவில்லை.

'' மதியாதார் வீட்டில் ஒரு நிமிஷமும் நிற்கக்கூடாது. கிளம்புங்கள்'' என்று கூறியவாறு, அவனுடைய டிரங்குப் பெட்டியைக் கையில் எடுத்தாள்.

சங்கரன் நடந்தான்; சரளாவும் நடந்தாள்.

ஒரு மாதம் ஓடிவிட்டது.

கோபாலன் ஏற்பாட்டின்படி பம்பாயில் நல்லதொரு வேலையில் சேர்ந்துவிட்ட சங்கரன், மாலையில் வீட்டுக்குத் திரும்பியதும் சரளாவிடம் அன்றையத் தபாலில் வந்திருந்த ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

அதில் எழுதியிருந்தது.

'' அன்புள்ள மாப்பிள்ளைக்கு, ஆசீர்வாதம்.

''நீங்கள் பெரிய உத்தியோகத்தில் இருப்பதையும், சரளா உங்களுக்கு அடங்கிய மனைவியாக நடந்து வருவதையும் கேட்டு மகிழ்ச்சி.

இங்கிருந்து நீங்கள் கிளம்பும்போது கோபத்துடனேயே சென்றீர்கள். அதை நினைத்தாலே வேதனையாகத்தான் இருக்கிறது. என்ன செய்ய? நீங்கள் என் வீட்டில் இருப்பதைப் பற்றிப் பலர் கேவலமாகப் பேசினார்கள்; 'கையாலாகாத சோணகிரி' என்று அவதூறு கூறினார்கள். உங்களை ரோஷப்படுத்த வேண்டும் என்பதற்காகவே உங்களிடம் கடுமையாக நடந்துகொண்டேன்.

நான் கொடுத்த அதிகச் சலுகையால் சரளா தன் வாழ்க்கையைப் பூதாகாரமாக்கிக்கொண்டாள். நாள் முழுதும் பொது வாழ்க்கையில் கவனம் செலுத்தினாளே தவிர, உங்களோடு இணைந்து வாழவில்லை. அவள் வாழ்வதற்காக அவளை நான் வெறுத்துப் பேச வேண்டும்! அந்த எண்ணத்தில்தான் அன்று அவள் கிளப்புக்குப் பணம் கேட்டபோது நான் கோபக்காரனாக மாறவேண்டியிருந்தது. என் அன்புச் செல்வங்கள் வீட்டை விட்டுக் கிளம்பியபோது, மூலையில் படுத்து அழுவதைத் தவிர 'போகாதீர்கள்' என்று சொல்ல முடியாதபடி நான் வாயடைத்துப் போயிருந்ததும் அதனால்தான்.

என் நாடகம் பலனளித்து விட்டது. நீங்கள் வாழ்கிறீர்கள். அதனால் என் வேஷத்தைக் கலைத்துவிட்டேன். இன்னுமா என்மேல் கோபம்? ஏன் போனதிலிருந்து ஒரு கடிதம் கூட எழுதவில்லை?

உங்களையும், சரளாவையும் பிரிந்திருப்பது எத்தனையோ கஷ்டமாக இருக்கிறது. நீங்கள் என் வீட்டுக்கு மாப்பிள்ளையாக வந்தால்தானே உலகம் தூற்றும்? அதனால் நானே உங்கள் வீட்டுக்கு மாமனாராக வரத் தீர்மானித்து விட்டேன்! உங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன்.

தங்களன்புள்ள
வெங்கடராமன்''

கடிதத்தில் நீந்திய கண்களைச் சங்கரன்மீது திருப்பி, ''பொல்லாத அப்பா! அவருக்கு உடனே பதில் எழுதுங்கள்'' என்று முறுவலித்தாள் சரளா.

அவர் ஒரு வருஷத்துக்கு முன்பு அவனுக்குச் சரளாவைக் கொடுத்தார்; ஒரு மாதத்துக்கு முன்பு ஒரு பண்பான மனைவியைக் கொடுத்தார். அவருக்குப் பதில் எழுதும்போது இந்த இரண்டில் எதற்காக அவருக்கு அவன் நன்றி கூறுவது என்று யோசித்தான்.



# இரு குதிரைகள்

*

ஒரு வியாபாரி இரண்டு குதிரைகள் வாங்கினான். அந்தக் குதிரைகளில் 'எந்தக் குதிரை தாய்க் குதிரை? எது அதன் குட்டி?' என்று கண்டு பிடிக்க முடியாமல் இரண்டும் உருவத்தில் ஒரே மாதிரி இருந்தன. அவ்வளவு தூரம் அவை நன்கு போஷிக்கப்பட்டு வளர்க்கப்பட்டிருந்தன.

வியாபாரி அதைக் கண்டு பிடிக்க அரும்பாடு பட்டான். எல்லோரும் அந்த முயற்சியில் தோல்வியடைந்தனர். கடைசியில் வியாபாரி, அந்தக் குதிரைகளை அழைத்துக் கொண்டு அந்த ஊரிலிருந்த வயது முதிர்ந்த அறிஞரிடம் சென்றான்.

பெரியவர் சிறிது நேரம் அந்தக் குதிரைகளை ஏறிட்டுநோக்கினார். கடைசியில் பெரியவருக்கு ஒருயுக்தி தோன்றியது. வெள்ளம் கரைபுரண்டு ஓடிய ஆற்றில் அவைகளை நீந்த விட்டார். குதிரைகள் எதிர் நீச்சல் போட்டு நீந்தின. குதிரைகளில் ஒன்று முதலில் நீந்திப் போயிற்று. மற்றொன்று அதன் பின்னால் நீந்திச் சென்றது. முதலில் நீந்திச் சென்ற குதிரை அடிக்கடி திரும்பித் திரும்பி மற்றக் குதிரை ஜாக்கிரதையாக வருகிறதா என்று பார்த்துக் கொண்டே சென்றது.

"பார்த்தீர்களா? முதலில் சென்ற குதிரைதான் தாய்க் குதிரை. கவலையோடு தன் குட்டி பின்னால் நீந்தி வருகிறதா என்று பார்த்த வண்ணம் போகிறது. பாருங்கள்!" என்று அங்கே கூடியிருந்தவர்களிடம் சொன்னார் அந்த அறிஞர்.

அவரது புத்திசாலித்தனத்தைக் கண்டு அந்த ஊர்க்காரர்கள் அனைவரும் வியந்து பாராட்டினர்.







ஒரு குளக்கரையில் பல குருவிகள் இருந்தன. அவைகளைப் பார்த்து அவ்வழியே சென்ற மற்றொரு குருவி, "ஏ! நூறு குருவிகளே! என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டது. அவை "நாங்கள் நூறு குருவிகள் ஆக மாட்டோம். நாங்களும், எங்கள் எண்ணிக்கையுள்ள எங்கள் இனத்தாரும், இனத்தாரில் பாதியும், பாதியின் பாதியும், நீயும் சேர்ந்தால் நூறு ஆவோம்" என்றது. அப்படியானால் அக் குளக்கரையில் இருந்த குருவிகள் எத்தனை!

:—ராஜு



# மிருங்காவதி

சித்திரத் தொடர்கதை 4

① பிம்பதி மன்னனின் பிடிவாத குணத்தை
நன்கு அறிந்த பவானி, இளவரசி மிருங்காவதி
யின் மனத்தை மாற்ற எவ்வளவோ முயன்றாள்.
ஆனால் மிருங்காவதி, தான் பிடித்த முயலுக்கு
மூன்றே கால் என்று இருந்தாள்.




③ மிருங்காவதியின் திருமண ஏற்பாடு
கள் தடபுடலாக நடந்து கொண்
டிருந்தன. இதைக் கண்ட பவானி,
தன் ஆருயிர்த் தோழிக்கு உதவத்
தீர்மானித்தாள். வெகு நேர
யோசனைக்குப் பின் அவளுக்கு ஒரு
யோசனை தோன்றியது.



④ அந்த யோசனையின்படி இளவரசியிட
மிருந்து மோதிரத்தை வாங்கிக்கொண்டு
அதைத் திருப்பிக்கொடுக்கும் பாவனையில்
பவானி தேவிதத்தனிடம் சென்றாள்.






⑥ இதைக் கேட்டதும் தேவிதத்தனுக்கு
ஆனந்தம் நிலை கொள்ளவில்லை.
நண்பர்களிடம் இந்த நற் செய்தியைச்
சொல்ல ஓடினான்.



7 எட்டாப்பழத்துக்குக் கொட்டாவி விடாதே என்று கூறி அவன் மகிழ்ச்சிக்க அணைதோலியநண்பர்கள் அவன் உண்மைக் காதலை உத்தேசித்து அவனுக்கு உதவிசெய்வதாக வாக்களித்தார்கள்.



நண்பர்களிடம் கலந்தாலோசித்தபின் சேவகர்கள் வந்து சொன்ன யோசனையைக் கேட்டுப் பவானி முதலில் திகைத்தாள். பிறகு. 8




10 இவ்வாறு கூறிவிட்டு, பவானி விடைபெற்றுக் கொண்டாள்.

11 நண்பர்களின் ஆலோசனையின்படி அவர்கள் புறப்படுவதற்காக வேகமாகச் செல்லும் குதிரைகள் தயார் செய்யப்பட்டன.



12 அன்று விளக்கு வைக்கும் நேரத்தில் நகரம் முழுவதும் ஒரே பரபரப்பு. அரண்மனையின் கன்னிமாடம் தீப்பற்றிக்கொண்டு விட்டது. எத்தனையோ உயிர்களையும் பொருள்களையும் ருசிபார்த்த பின்தான் தீயின் செந்நாக்கு ஓய்ந்தது.



13 கலவரம் அடங்கிய பின், இளவரசி மிருங்காவதியையும் அவள் தோழி பவானியையும் காணவில்லை.
எங்கு தேடியும் அவர்கள் அகப்படாமற் போகவே, அக்கினித் தேவனுக்கு அவர்கள் இரையாகியிருக்கவேண்டுமென்று முடிவு செய்தார்கள்.



14 நாடு நகரம் எங்கும் சோகம் பரவியது. மாளிகை சோபையிழந்து காணப்பட்டது. மன்னன் பிம்பதி, மகளின் சோகத்தில் துயரமே உருவானான்.
ஆனால் நடந்ததென்ன? (தொடரும்)



# வேப்பங் கொழுந்து

## 1. விஷமக் கொடுக்கு!

"மகராஜ்!"

"என்ன?"

"அரண்மனை வாசலில் ஒரு பிச்சைக்காரன் இளவரசரை ஒரேயடியாகத் திட்டிக் கொண்டிருக்கிறன்!"

அரசருக்கு ஏன் என்று கேட்கத் தோன்றவில்லை. உள்ளத்தில் தோன்றிய கவலை முகத்தில் பிரதிபலித்தது. அப்படியே அவர் கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்து விட்டார்.

மந்திரி தொடர்ந்தார்:

"மகராஜ்! தெருவோடு போய்க்கொண்டிருந்த பிச்சைக்காரன் ஒருவனைப் பிச்சை போடுவதாக வலிய இழுத்து வந்து இளவரசர் படி நிறைய மணலை அவன் பையில் கொட்டிவிட்டார். அவன் வாங்கி வைத்திருந்த பிச்சை அரிசியோடு மணல் கலந்துவிடவே அவன் வாயில் வந்தபடி திட்ட ஆரம்பித்து விட்டான்."

அரசருக்கு அழுவதா, சிரிப்பதா என்று புரியவில்லை. அதைக் குழந்தையின் குறும்பு என்று சும்மா விட்டுவிடவும் மனம் வரவில்லை. ஏழைப் பிச்சைக்காரனின் வயிற்றில் இப்படி அடித்தால், அவன் திட்டாமல் என்ன செய்வான்?

அரசர் யோசித்தார். இளவரசனைத் திட்டும் பிச்சைக்காரனை, தண்டனை அளிக்காமல் சும்மா விட்டு விட்டால், அப்புறம் எல்லோருக்கும் தைரியம் கொடுத்து விடக்



கூடும் அல்லவா? எனவே, மந்திரியை அழைத்து உடனே அந்தப் பிச்சைக்காரனுக்கு உகந்த தண்டனையை அளிக்க உத்தரவிட்டார்.

மன்னரது தண்டனையைப் பெற்ற பிச்சைக்காரன் மனம் வருந்தவில்லை; மகிழ்ச்சியுடன் மன்னரை வாழ்த்தினான். பிச்சைக்குப் பதிலாக மண்ணைப் போட்ட இளவரசனையும் வாழ்த்தினான், வாயார மனமார. ஒருவேளை இந்தப் பிச்சைக்காரனுக்கு மூளை கீளை பிறழ்ந்திருக்குமோ, பைத்தியம் கியித்தியம் பிடித்திருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா? உண்மை தெரிந்தால் அப்படியெல்லாம் நினைக்கத் தோன்றாது. மன்னர் அவனுக்கு அளித்த தண்டனை இதுதான்: அதற்கு அப்புறம் அவன் தன் வாழ்க்கையிலேயே பிச்சை வாங்க வேண்டிய அவசியமோ, சிரமமோ ஏற்படவில்லை. அரசரிடமிருந்து அத்தனை பெரிய தண்டனையை—அவ்வளவு ஏராளமான பொருளைப் பெற்ற பின் மனமார மகிழ்ச்சியோடு வாழ்த்தத் தோன்றாமல் வேறு என்ன தோன்றும்?

ஆனால் அரசருக்குத்தான் சிறிதும் மனநிம்மதியே உண்டாகவில்லை. தினம் பொழுது போனால் இதே போன்ற புகார்கள் வந்த வண்ணமாயிருந்தன. அப்படியிருக்கும் பொழுது என்ன செய்வார். பாவம்! ஆயினும், அவர் வரும் அத்தனை புகார்களுக்கும் செவிசாய்த்து ஈடு கொடுத்து மக்களின் மனத்தை மாற்றிக் கொண்டிருந்தார். ஏன்? தமது ஒரே அருமை மகன் யாரிடமும் திட்டு வாங்கக் கூடாது என்ற ஒரே நல்ல நோக்கம்தான்.

பூவோடு நாரும் மணக்கும் என்பது போல அவரது நற்காரிய நற்செய்கையினால் இளவரசனது பெயரும் கெடாமல் பாதுகாக்கப்பட்டு வந்தது. அவனால் கஷ்டத்துக்குள்ளானவர்கள், அரசர் மூலம் பன்மடங்கு லாபத்தை அடைந்தால், தன்னல நோக்கம் காரணமாகவாவது புகழத்தானே செய்வார்கள்? ஆனால் நாளுக்கு நாள் கொடுமையும் வளர்ந்து கொண்டே போனால் வாழ்த்திக் கொண்டே இருக்க முடியுமா? இகழத்தானே செய்வார்கள்! எல்லாம் அறிந்த அரசர் இதை எதிர்பார்க்கவேதான் செய்தார். ஆயினும் அதற்கு ஒரு முடிவு காண அவருக்கு ஒரு வழி தோன்றவில்லை. அரசகுமாரனைப் பற்றிய கவலையே அவருக்குப் பெருங் கவலையாகி விட்டது.

**ம**துரையம்பதி மன்னரான மார்த்தாண்டவர்மர் மங்காப் புகழ் பெற்றவர். நீதி நெறி வழுவாதவர், நல்லொழுக்கமே உருவானவர். எக்குறையும் இல்லாத அவருக்கு ஒரே ஒரு குறை. அதுவும்



பெரிய குறை: மக்கட் பேறில்லாத பெருங் குறை. அந்தக் குறையை நிவர்த்திக்கவே என்று, காலமில்லாக் காலத்தில் கனிரசமாக அவதரித்தான் கதிர்காமன்.

கதிர்காமன் பிறப்பதற்கு முன்பாக மகாராஜாவும் மகாராணியும் வேண்டாத தெய்வங்கள் இல்லை; போகாத கோவில்கள் இல்லை. தனக்குப் பின் தன் குலவிளக்காக விளங்க ஒரு வாரிசு வேண்டும் என்று அன்றாடங் காய்ச்சி கூட வேண்டித் திரியும்பொழுது மன்னரும் மகாராணியும் பிள்ளையின் முகத்தைப் பார்க்க வேண்டும் என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருந்ததில் என்ன தவறு?

மூன்று மகாராணிகள் இருந்தும் மக்கட்பேறு உண்டாகாமற் போகவே, மன்னன் தசரதன் புத்திர காமேஷ்டி என்னும் வேள்வி வளர்த்துத்தானே நான்கு புதல்வர்களுக்குத் தந்தையாகி மகிழ்ந்தான்?

வாசல் மண்ணில் புரண்டு விளையாடி விட்டு ஓடிவந்து கட்டிக்கொண்டு தனது தூய்மையான ஆடைகளை அழுக்காக்கி மகிழ்ச்சி தர மைந்தன் இல்லையே என்று ஏங்கிய பின்தானே துஷ்யந்தன் சகுந்தலை பெற்ற செல்வனை அடைந்து இன்புற்றான்?

அதேபோலத்தான் மார்த்தாண்டவர்மரும் பிள்ளையில்லாக் குறையைப் போக்க வேண்டிப் பல நோன்புகள் இருந்தார். மனைவியோடு கடல் தாண்டியும் தீர்த்த யாத்திரை செய்து வந்தார். கதிர்காமத்துக்குப் போய் வந்த ஓராண்டுக்குள்ளேயே பிறந்ததனால் தம் குழந்தைக்குக் கதிர்காமன் என்றே பெயர் சூட்டினார்.

நெடுநாள் தவம் கிடந்து பெற்ற பிள்ளையாகையால், மகாராணியும் மன்னரும் அதைக் கண்ணிமை போல் காத்துவந்தனர். செல்லமான குழந்தையாதலால், வாய் திறந்து கேட்பதற்கு முன்பே, அது விரும்பும் பொருள்கள் யாவும் குவிந்து விடும்.



நாளடைவில் அந்தக் குழந்தைக்குப் பிடிவாத குணம் படிந்தது. துடுக்குத் தனமும், துஷ்டத்தனமும் துளிர்விட்டு வளர்ந்தன. குறும்பும் கோபமும் கொழுந்து விட்டு எரியத் தொடங்கின. ஆறு ஏழு வயது ஆவதற்குள்ளேயே அதனிடம் படிந்து விட்ட துர்க்குணங்களைக் கணக்கிட்டுக் கூற முடியாது.

குருவிகளுக்கெல்லாம் அவனைக் கண்டாலே குலை நடுக்கம். கடவுளை வேண்டிக் கொள்ளும், தங்கள் கூடுகள் அவன் கண்களில் படாமல் இருக்க வேண்டுமே என்று! எத்தனைதான் எட்டாத உயரத்தில் இருக்கட்டுமே, அவன் கண்களில் பட்டு விட்டால் அவற்றின் கூடுகளைக் கலைத்தெறிந்து விடுவான்; முட்டைகளை உடைத்து விடுவான்.

கிளிகளுக்கு மிளகாய்ப் பழம் என்றால் பிரியம் அல்லவா? அவை அலகால் தின்னக் கூடாது; கண்களால் தின்ன வேண்டும். அதாவது மிளகாய்ப் பழத்தைக் கிள்ளிக் கிள்ளிக் கிளிகளின் கண்ணில் வைத்துத் தேய்ப்பான்.

ஓணான்கள் அவனுடைய கவண் குறிக்குத் தப்புவதே இல்லை. அவற்றைப் பிடித்து அவன் காலைச் சுழற்றி எறியும் பொழுது பார்க்க வேண்டுமே!

முக்கியமான விஷயத்தைப் பற்றி முடிவு செய்யத் தர்பார் மும்முரமாகக் கூடியிருக்கும். குருவிக்கு மூக்கில் வியர்க்கும் கதையாக அவனுக்கு எப்படித்தான் தெரியுமோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம். ஓசைப்படாமல் தண்ணீர்ப் பாம்பைப் பிடித்து வந்து நடுச் சபைக்குள் விட்டுவிடுவான். பாம்பு என்றால் படையும் கலங்கும் அல்லவா? அப்படி சபையினர் பயந்து விழுந்தடித்துக் கொண்டு ஓடுவதைக் காண அவனுக்கு என்ன இன்பமோ? வண்ணத்துப் பூச்சிகள் அவனுக்குப் பட்டமாக உபயோகப்பட்டன. இப்படியாக அவனது விஷமத்தனம் வளர்ந்து அரசருக்குப் பெரும் தலை வேதனையை உண்டாக்கி விட்டது.

பிள்ளைக்காகத் தவம் கிடந்த அவர், 'ஏண்டா இந்தப் பிள்ளை பிறந்தது? இது பிறப்பதைக் காட்டிலும் பிறக்காமலே இருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்குமே' என்று எண்ணத் தொடங்கிவிட்டார். ஆனால் அவனை வழிக்குக் கொண்டுவரும் விதம்தான் அவருக்கு விளங்கவில்லை. கோவில் குளம் சுற்றிப் பிறந்த பிள்ளை அவருக்கு ஒரு பெரும் பிரச்னையாகி விட்டான். குழந்தைப் பருவத்திலே கரும்பாக இனித்த கதிர்காமன், பிள்ளைப் பிராயத்திலே இப்படி வேப்பங்கொழுந்தாகக் கசக்க வேண்டுமா?

இளவரசன் கதிர்காமனை எப்படி நல்வழிக்குக் கொண்டுவருவது என்று மன்னர் மார்த்தாண்ட வர்மர் யோசித்தார், யோசித்தார்; அப்படி யோசித்தார்.

அருந்தப் பிள்ளையாகப் பிறந்தான் என்பதற்காக நாம் மிகவும் செல்லம் கொடுத்து வளர்த்து விட்டோம். அதனால்தான் இவ்வளவு போக்கிரித்தனங்கள் இவனிடம் படிந்திருக்கின்றன. இதைப் போக்க ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. இனி நாம் கடுமையைக் கையாள வேண்டியதுதான் என்று தீர்மானித்தார்.

இப்படித் தீர்மானித்தவுடனேயே மன்னர் சாமம், தானம், பேதம், தண்டம் ஆகியவற்றைக் கையாண்டு அவனை நல்வழிக்குக் கொண்டுவருவதற்கு முயன்றார்.

(அடுத்த இதழில் முடியும்)



# மலைச்சாரல் மாதவி

### முதல் அத்தியாயம்

## காடு கலங்கியது

மாஜிஸ்திரேட் சிவசங்கரனுக்கு வெகு நாட்களாகவே ஒரு விஷயம் புரியாமல் இருந்து வந்தது. 'நீதி என்பதும் நேர்மை என்பதும் எப்படி வித்தியாசப் படுகின்றன?' என்ற கேள்வி அவர் மனத்தை அலைக்கழித்து வந்தது. இளம் வயதில் பொறுப்பான உத்தியோகம் பார்ப்பவர்களுக்கு இப்படியெல்லாம் சந்தேகங்களும் குழப்பங்களும் உண்டாவது இயற்கைதானே?

இன்று அவர் மனம் மிகவும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தது. அவர் நினைக்காதது, அவர் விரும்பாதது நடந்து விட்டது. சுடர்விட்டுப் பிரகாசித்த சூரியனைத் திடீரென்று மேகம் சூழ்ந்து மறைத்து விட்டது.

மாதவி அப்படிப் பேசுவாள் என்று அவர் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவள் அவ்வளவு உதாசீனமாகப் பேசும்படி அவர் என்ன தவறு செய்து விட்டார்? ஏதாவது துரோகம் செய்தாரா? வஞ்சனை செய்தாரா? இல்லை; இல்லை. நியாயத்தைத் தான் செய்தார். தமக்கு வேண்டியவன் என்பதற்காக அவர் நீதி தவறி நடக்கவில்லை. அவ்வளவுதான்.

'மாதவி! உன்னைப் பற்றி என்னவெல்லாம் எண்ணினேன்? எத்தனை மனக்கோட்டைகள் கட்டினேன்? எல்லாவற்றையும் தகர்த்தெறிந்து விட்டாயே?' என்று அவர் மனம் கதறியது.

சிவசங்கரன் கழுகுமலைப் பாதையில் ஏறிச் சென்று கொண்டிருந்தார். அவர் கையில் ஒரு வேட்டைத் துப்பாக்கி இருந்தது. அவருடைய கலை பொருந்திய முகம் மிகவும் களைத்துக் காணப்பட்டது. அளவிட

# ஆனந்தி

முடியாத ஏமாற்றமும் சோகமும் அவர் கண்களில் பிரதிபலித்தன.

சுற்றிலும் உள்ள கமுகுச் சோலையின் அழகையோ, தூரத்தில் சலசலவென்று அருவி விழும் இனிய நாதத்தையோ, வண்டுகளின் ரீங்காரத்தையோ, கமுகுப் பாளை வெடித்த பூவின் நறுமணத்தையோ அவர் ரசித்துக் கொண்டிருக்கவில்லை. அவர் மனம் முற்றிலும் வேறு எங்கேயோ லயித்திருந்தது. இன்னொரு சமயமாக இருந்தால் இதே காட்சிகளை அவர் ரொம்ப அனுபவித்திருப்பார். ஒவ்வொரு மரத்தையும் கண்டு குதூகலம் அடைந்திருப்பார். அருவியின் ஓசையும், வண்டுகளின் ரீங்காரமும் சேர்ந்து எழுப்பும் இன்னிசையில் மனத்தைப் பறிகொடுத்திருப்பார். செண்பக மரங்களிலுள்ள மகரந்தப் பொடியைக் குழைத்து எடுத்துக் கொண்டு வந்து பன்னீராகத் தெளிக்கும் மலய மாருதத்தில் மெய்மறந்து போயிருப்பார்.

ஆனால் இன்று அவர் மனம் சஞ்சலப் பட்டுக்கிடந்தது. மாதவி அப்படி எடுத்தெறிந்து பேசிய பிறகு, நீதியையும் நேர்மையையும் அவள் மதிக்கவில்லை என்று தெரிந்த பிறகு, உலகத்தில் எது இருந்துதான் என்ன பயன் என்று அவருக்குத் தோன்றியது. உலகத்தின் மீது அவருக்குள்ள ஆசையும் பற்றும் அறவே நீங்கி விட்டன.

யாருக்காகத் தம்முடைய கொள்கையை மாற்றிக் கொண்டாரோ, யாருக்காகத் தாம் முப்பத்தைந்து வருடங்களாகக் கடைப் பிடித்து வந்த லட்சியத்தை மாற்றிக் கொண்டாரோ, அந்த மாதவியே தம்மை மதிக்கவில்லை என்றால் அவருக்கு உலகமே வெறுத்து விட்டதில் வியப்பென்ன?

அன்றொரு நாள் மலைச் சாரலில் மாதவியைப் பார்த்த போது தாம் அதுவரையில் அனுபவித்து அறியாத அதிசய உணர்ச்சி தம் உள்ளத்தில் ஏற்படுவதை அறிந்தார். அந்த இன்ப உணர்ச்சியை உண்டாக்கிய மாதவியின் அழகிய முகம் இப்பொழுது அவர் மனக்கண் முன்னால் வந்தது. அதைப் பார்த்த போது அவருக்குச் சொல்ல முடியாத வேதனையாக இருந்தது.

இத்தனை அற்புதமான எழில் சூழ்ந்த வனப் பிரதேசத்தில் வந்து, கேவலம் ஒரு பெண்ணின் மாய வலையில் தாம் அகப்பட்டுக் கொண்டதை எண்ணி ஏங்கினார். இப்போது அதை நினைத்து அவமானப் பட்டார்.

பழைய சம்பவங்களை நினைக்க நினைக்க அவருடைய வேதனை அதிகமாயிற்று. 'நான் அவளை நேசிக்கிறேன் என்றால் அவளுக்கு அடிமையாகவே ஆகிவிட முடியுமா? அவள் சொன்னபடி யெல்லாம் ஆட முடியுமா? அவள் ஒன்று சொல்லி அதற்கு விரோதமாக நான் நடந்து கொண்டிருந்தாலும் அவள் வருத்தப்பட நியாயம் இருக்கிறது. அவள் என்ன நினைப்பாளோ என்று எண்ணி நான் நீதிக்கு விரோதமாக நடக்க முடியுமா? என் தீர்ப்பைப் பாராட்ட வேண்டியதற்குப் பதிலாக லஞ்சம்வாங்கிக்கொண்டு தொழிலாளர் சங்கத்துக்கு அனுகூலமாகத் தீர்ப்பு கூறினேன் என்றல்லவா சொல்லிவிட்டாள்? இவள் என்ன மனிதப் பிறவியா? இல்லை, மனித உருவில் வந்த மாய மோகினி; அரக்க குணம் படைத்த அழகி.'

இப்படியெல்லாம் நினைத்துக்கொண்டு நேரம் போவதில் நினைப்பின்றி நடந்து கொண்டிருந்தார் சிவசங்கரன்.

அவர் மனம் அன்றைய தினத்தைப் போல் என்றுமே குழப்பம் அடைந்ததில்லை. சிரமப்பட்டு மலையேறி வந்து கொண்டிருந்த அவருக்கு முன்னால் நாலைந்து பேர்கள் இறங்கி வந்துகொண்டிருந்தார்கள். அவர்களுடைய பேச்சுச் சத்தத்தினால் தமது சிந்தனையிலிருந்து விடுபட்ட சிவசங்கரன், அவர்கள் பார்வையிலிருந்து தப்புவதற்காகப் பக்கத்திலிருந்த ஒற்றையடிப் பாதை வழியாகச் செல்ல ஆரம்பித்தார்.



கொஞ்ச தூரம் சென்ற பிறகு திடீரென்று அவருக்கு அந்த ஒற்றையடிப் பாதை நடுக் காட்டுக்குப் போகிறது என்பதும், அங்கு கொடிய மிருகங்களான கரடி, புலி முதலியவை உலாவும் என்பதும், வேட்டையாடக் கூட யாரும் அங்கு செல்வதில்லை என்பதும் நினைவுக்கு வந்தன.

இன்னொரு சமயமாக இருந்தால் சிவசங்கரன் திரும்பி வந்திருப்பார். ஆனால் இன்று, மாதவி அவரது நேர்மையைப் பற்றிக் குறை கூறிவிட்ட பிறகு, அவருக்கு இந்த உலகமே வெறிச்சென்றாகி விட்டது.

கால்போன போக்கில் காட்டுக்குள் செல்லும் ஒற்றையடிப் பாதை வழியாகச் சென்றார். அப்பொழுதிருந்த மன நிலையில் அவருக்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்றே தோன்றவில்லை. தனிமையை விரும்பிய அவருக்கு இந்தப் பாதையில் சென்றால் மனித நடமாட்டமில்லாத இடத்தை அடையலாம் என்று தோன்றியது.

'இதயமில்லாத மனிதர்களுடன் நடமாடுவதைவிடச் சிறுத்தை, புலி, கரடி போன்ற மிருகங்களுடன் சஞ்சரிப்பது எவ்வளவோ மேல். புலி, சிறுத்தை தாக்கினாலும் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு சந்தர்ப்பமாவது கிடைக்கும். இந்தமனிதர்களிடம் அகப்பட்டுக் கொண்டுவிட்டால், அப்பப்பா, அவர்களிடமிருந்து மீளவே முடியாது!'

இப்படியாகப் பலப்பல எண்ணங்கள்.

துஷ்ட மிருகங்கள் ஏதும் அருகில் இருக்கிறதா என்பதை நிச்சயம் செய்து கொள்வதற்காக மேலே ஆகாயத்தைப் பார்த்து இரண்டு தடவைகள் சுட்டார். அந்த வேட்டுச் சத்தத்தைக் கேட்டுப் பயந்து ஒரு குரங்குக் கூட்டம் விழுந்தடித்துக் கொண்டு தாவித் தாவி ஓடியது. மரங்களின் மீது உட்கார்ந்திருந்த பறவைகள் 'கொல்' என்று ஆகாயத்தில் கிளம்பிப் பறந்தன. அணில்கள் பயந்து போய்க் கீச்சு மூச்சென்று தொண்டை கிழிய வாலை அடித்துக் கொண்டு கத்தின.

இப்படிக் காட்டையே கலக்கிக் கொண்டு ஒரு மதம்பிடித்த யானையைப் போலக் கால் போன போக்கில் நடந்து சென்றார் சிவசங்கரன்.

மனம், தான் செல்லும் பாதையைக் கவனிக்கவே இல்லை. வெகு நேரம் நடந்த பிறகு அவருக்குத் தாகமாக இருந்தது. பசியால் தாம் களைத்து விட்டதையும் அவர் அப்போதுதான் உணர்ந்தார்.

மாதவியிடம் மத்தியானச் சாப்பாட்டுக்கு ஏதாவது வாங்கிக் கொண்டு வரவேண்டுமென்றுதான் வீட்டிலிருந்து புறப்பட்டார். ஆனால் மாதவியின் வீட்டில் நடந்தது என்ன? அவர் மனம் சுக்கு நூறாக நொறுங்கியதுதான் கண்ட பலன். எந்த மாதவியின் சொல்லைக் கேட்டால் இதயத்தில் இன்பத்தேன் வந்து பாய்ந்ததோ, அதே மாதவியின் குரல் இப்பொழுது கூர் வேலாக வந்து பாய்ந்தது. பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கோலைக் காதுக்குள் விடுவது போல் வேதனையாக இருந்தது. இதை நினைத்த போதே அவர் இதயம் வேதனையால் துடிதுடித்தது. அவர் மண்டையில் யாரோ சம்மட்டியைக் கொண்டு வந்து தாக்குவதுபோலத் துடித்துக் கொண்டிருந்தார்.

தம்முடைய மனத்தை மாற்றிக் கொள்வதற்காகச் சுற்றிலும் பார்த்தார். எங்கு பார்த்தாலும் மாதவியின் தோற்றமாகவே இருந்தது. கண்களை மூடிக் கொண்டார். அப்போதும் அவள் உருவம் தெரிந்தது.

அங்கிருந்து வேகமாகச் சென்றார்; சலசலவென்ற சத்தத்தைக் கேட்டு நின்றார்.

தாம் காட்டின் மிக அடர்த்தியான பகுதிக்கு வந்து விட்டதையும், அது



வரையில் தாம் அங்கே வந்ததே இல்லை என்பதையும் அப்போதுதான் அவரால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

அவர் முன்னால் செங்குத்தாக இரு பாறைகள் நின்றன. காட்டின் அடர்த்தியினால் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. பாறைக்கு அப்பாலிருந்து சலசலவென்று நீர் ஓடும் சத்தம் வருகிறதென்று அறிந்து கொண்டார். அவருக்கு நா வறண்டது. தாகம் அதிகமாகி விட்டது. ஒரு வாய்த் தண்ணீர் குடிக்காவிட்டால் ஒன்றுமே செய்ய முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. இரண்டு தடவைகள் அந்த உயரமான பாறை மீது ஏற முயன்று கீழே விழுந்தார். துப்பாக்கியையும் தூக்கிக் கொண்டு பாறை மீது ஏற வசதியாக இல்லை. அதைக் கீழே வைத்து விட்டுப் போகவும் தைரியம் வரவில்லை.



கொஞ்ச தூரம் பாறையோடு நடந்து சென்றால் ஏதாவது இடைவெளி தென்படும் என்று எண்ணிக் கொண்டே நடந்தார். அவர் எதிரில் ஒரு பிரும்மாண்டமான ஆலமரம் நின்றது. அதன் கிளைகளில் ஒன்று அந்தப் பாறையின் உச்சி மீது வளைந்து அடுத்த பக்கம் செல்வது தெரிந்தது. அதன் பிறகு அவர் எதையுமே யோசிக்கவில்லை. வேகமாக மரத்தின் மீது ஏறினார்.

அந்த மரக்கிளை பாறையின் அடுத்த பக்கத்தில் ஓடிய அகன்ற வாய்க்காலின் தண்ணீரில் ஊஞ்சலாடியது. இரண்டடி ஆழமுள்ள அந்த வாய்க்காலில் குதித்து வயிறு நிறையத் தண்ணீரைக் குடித்தார். குளிர்ந்த நீரில் தம்முடைய முகத்தைக் கழுவிக் கொண்டார். இப்போதுதான் சிவசங்கரனுக்குச் சற்றுத் தெம்பு வந்தது.

அந்த மனோகரமான சூழ்நிலை அவருக்குச் சற்று சாந்தி யளித்தது. வாய்க்காலின் நடுவிலிருந்த ஒரு மொட்டைப் பாறையின் மீது சிரமப்பட்டு ஏறி உட்கார்ந்து கொண்டார். நனைந்து போன தம் பூட்ஸையும், காலுறையையும் கழற்றி வெய்யிலில் உலர வைத்தார்.

மறுபடியும் அவருடைய சிந்தனை மாதவியை நோக்கியே சென்றது. 'மாதவி இங்கிருந்தால் இந்த இடம் சொர்க்கமாகி விடாதா? மாதவியின் வெளி அழகிலா நான் மயங்கினேன்? இல்லையே! என் வாழ் நாளில் எத்தனையோ அழகிகளைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் அழகில் நான் மயங்கியதில்லையே! மாதவியின் களங்கமில்லாத உள்ளம் அல்லவா என்னைக் கவர்ந்தது! அவளுடைய பச்சைக் குழந்தை போன்ற பரிசுத்தமும், அதே சமயத்தில் ஒரு அரச குடும்பத்தில் பிறந்த பெண்களுக்குரிய வீரமும், பயமே இல்லாத தன்மையும் அல்லவா என்னை ஆட்கொண்டு விட்டன?

'மாதவியைப் பற்றிக் கழுக மலையில் உள்ளவர்கள் எல்லாருமே எவ்வளவு மரியாதையாகப் பேசினார்கள்? அவள் நேர்மையை எப்படி எல்லாம் பாராட்டினார்கள்? களங்கமில்லாத, நேர்மை தவறாத என் மாதவி இன்று நான் லஞ்சம் வாங்கினேன் என்று கூறினாளே! அதிலும் இன்னொருவன் கூறுவதைக் கேட்டுக் கொண்டு சும்மா இருந்தாளே! நான் பேசவே இடம் கொடுக்காமலல்லவா செய்து விட்டாள்!'

வாய்க்காலில் பளிங்கு போல் ஓடிக் கொண்டிருந்த தண்ணீரில் கூட்டம் கூட்டமாக மீன்கள் சுற்றி மொய்த்துக் கொண்டிருந்தன. அதைப் பார்த்தால் அந்த மீன்கள் எல்லாம் பாறையைச் சுற்றி வந்து விளையாடுவது போலிருந்தது. இதைப் பார்த்த சிவசங்கரன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். அந்த மூச்சுச் சத்தத்தைக் கேட்ட மீன்கள் திடுரென்று நாலாபுறமும் சிதறி ஓடின. அதைப் பார்த்ததும்தான் அவருக்குத் தாமும் திரும்பிச் செல்ல வேண்டும் என்ற நினைவு வந்தது.

இருட்டிய பிறகு அங்கே அகப்பட்டுக் கொண்டால் ஒரு வேளை தாம் அங்கிருந்து திரும்பிச் செல்ல முடியாமல் போய் விடும் என்பது அவருக்குத் தெரியும். முன்பு இருந்த விரக்தி மனப்பான்மை இப்போது போய்விடவே மறுபடியும் தாம்வந்த அதே ஆலமரக் கிளையில் தொத்தி ஏறிப் பாறைக்கு அடுத்த பக்கத்தில் குதித்தார். சுமாராகத் தாம் எந்த வழியாகச் செல்ல வேண்டும் என்று அனுமானம் செய்து கொண்டு வேகமாக நடக்க ஆரம்பித்தார். சற்று நின்று மறுபடியும் துப்பாக்கியை எடுத்து ஆகாயத்தை நோக்கி ஒரு முறை சுட்டு விட்டு நடக்கத் தொடங்கினார்.

# 'அனஸின்'

## மிகச்சிறந்தது, அதில் நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளன

1. க்வினைன் சல்பேட் 2. காப்பின்
3. பினஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்து களின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலி களுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சய மாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனஸினுக்கு இணையொன்றில்லை... அனஸினைப் போல் தீங்கு விளைவிக்காதவில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்




V 101




மலிவான விலையில் கிடைக்கும் மட்டரக
உணவுகள் உங்கள் உடல் நிலையைப் பாதிக்கும்

## புஹாரி தயாரிப்புகள்

ருசிமிகுந்தவை, நயமானவை

அத்துடன் ஆரோக்கியத்திற்கு உகந்தவை
வெஜிடபிள் தயாரிப்புகள் விசேஷமானவை

## புஹாரி பிரியாணி

(வைட்டமின் சத்து நிறைந்த சிக்கன், மட்டன் & வெஜிடபிள் பிரியாணி)
சாப்பிடுங்கள். ஒரு வாரத்திலேயே உங்கள்
பலம் அதிகரிப்பதை உணர்வீர்கள்

"எல்லோராலும் புகழப்படும்

## புஹாரியின் பீச்மெல்பா

ஈடு இணையற்றது. நீங்களும் இன்றே சாப்பிட்டுப்
பாருங்கள்" என்கிறார் சாம் மாமா (Uncle Sam)

ஆராம்

# புஹாரி ஹோட்டல்

| மாடிப்பூங்கா | டீ கார்டன் |
| --- | --- |
| 3/17, மவுண்ட் ரோடு, | 246, சைனா பஜார். |
| மதராஸ்-2. | மதராஸ்-1. |
| போன்: 85972 | போன்: 55540 |

வெகு நேரம் சென்றும் வழக்கமாகச் செல்ல வேண்டிய மலைப்பாதை வருவதாக இல்லை. இருள் சூழ்ந்து வரத் தொடங்கியதும் அவருக்கு நெஞ்சம் பதைபதைக்க ஆரம்பித்தது. வயது முதிர்ந்த தம் தாயாரை நினைத்ததும் அவருக்குத் துயரம் உண்டாயிற்று. தமக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் தம் அன்னை என்ன பாடு படுவாள் என்று கற்பனை செய்து கொண்டார். அது அவருக்கு இன்னும் அதிகமான துயரத்தை உண்டாக்கியது.

பசி, களைப்பு, ஏமாற்றம், துயரம், பயம் இவற்றோடு போராடிக் கொண்டே சிவசங்கரன் நன்றாக இருட்டும் நேரத்தில் மலைப் பாதைக்கு அருகே வந்து விட்டதை உணர்ந்தார். அவர் நடந்து வந்த ஒற்றையடிப்பாதை சற்று அகலமாயிற்று. கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு பெரிய புதர் இருந்தது. அந்த ஏதோ ஒரு சலசலப்பு ஏற்பட்டது. புதர்கள் அசைவது தெரிந்தது. அதைத் தொடர்ந்து விசித்திரமான ஓசையும் கேட்டது.

சிவசங்கரனின் மனத்தைப் பயம் கௌவிக் கொண்டது. அங்கே ஏதோ ஒரு பயங்கர மிருகம் பதுங்கி யிருப்பதாகவும், தன் மீது அது பாய்வதற்குக் காத்துக் கொண்டிருப்பதாகவும் அவருக்குத் தோன்றி விட்டது. அடுத்த கணம் கைத் துப்பாக்கியை எடுத்து அந்தப் புதரைப் பார்த்துச் சுட்டார்.

'டுமீல்' என்ற துப்பாக்கிச் சத்தத்துடனேயே இன்னுமொரு பயங்கரச் சத்தமும் கேட்டது. சிவசங்கரன் தம் வாழ்நாளில் என்றுமே அனுபவித்தறியாத பயங்கரத்தை உணர்ந்தார். ஐந்து அடி உயரத்துக்கு மேல் அடர்ந்து வளர்ந்திருந்த அந்தப் புதரிலிருந்து 'ஆ!' என்ற மனிதக் குரலின் அலறல் கேட்டது. ஏதோ 'பொத்' தென்று கீழே விழுவது போலவும் இருந்தது.

சிவசங்கரன் அவசரமாக அந்தப் புதருக்குள் சென்றார். அங்கு விழுந்தது என்ன என்று பார்த்தார். ஒரு இளம் வாலிபன். அடுத்த கணம் இடியோசை கேட்டு நடுங்கிய நாகம் போல் அவர் பதறித் துடித்தார். "இந்த வாலிபனையா சுட்டு விட்டேன்!" என்று வாய் விட்டுக் கத்தினார். அவருக்குத் தலையில் மின்சாரம் தாக்கிப் பூமி வழியாக இறங்கியது போல் இருந்தது. ஒரு கணம் அசைவற்று மரம் போல் நின்றார். அடுத்த கணம் தாம் மேலே என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்தித்தார். அந்த மனித உடலை அங்கேயே விட்டு விட்டு, புதருக்கு வெளியில் தாம் போட்டிருந்த வேட்டைத் துப்பாக்கியைக் கையில் எடுத்துக் கொண்டார். திரும்பிப் பாராமல் அங்கிருந்து தலைதெறிக்க ஓட ஆரம்பித்தார்.

## இரண்டாம் அத்தியாயம்

# அபாய அறிவிப்பு!

மாஜிஸ்திரேட் சிவசங்கரன் ஒரு பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து அன்றையத் தினப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

சக்கர வட்டமாகப் பராமரிக்கப் பட்டு வந்த பசும்புல் தரை மாலை வெய்யிலில் புத்தொளி பெற்று ஜொலித்தது. புல் தரையைச் சுற்றி வளர்க்கப்பட்டிருந்த விதம் விதமான மலர்ச் செடிகளின் நிழலும், மரங்களின் நிழலும் புல் தரையின் மீது ஆடி அசைந்து விளையாடின. வெய்யில் படிந்த இடங்களில் நூற்றுக்கணக்கான பூச்சிகள் பறப்பதும் உட்காருவதுமாக இருப்பதைக் காண முடிந்தது. பச்சை நிறத் தத்துக்கிளிகள் எம்பிக்குதித்து விளையாடின. சின்னஞ்சிறு தேனீக்கள் புஷ்பங்களில் மொய்த்துக் கொண்டிருந்தன.

புல் தரையைச் சுற்றிலும் இருந்த பாதைக்கு அப்பால் பல நிறப்பட்ட காணு வாழைகள் பூத்திருந்தது கண் கொள்ளாக் காட்சி. சிவந்த மஞ்சள் நிறமுள்ள பூக்களின் மீது மாலை வெய்யில் படும் போது செடியே தீப்பிடித்துக் கொண்ட மாதிரி இருந்தது.

நிர்மலமான நீல வானத்தை எட்டிப் பிடித்து விட முயலுவது போல ஒரு "மகோகனி" மரம் ஓங்கி வளர்ந்து நின்றது. நீல வானத்தையும், அந்த மரத்தின் பசுமையையும் சேர்த்துப் பார்க்கும் உள்ளத்தில் இன்பம் பெருக்கெடுத்தோடும். சிவசங்கரன் பல சமயம் அப்படி இயற்கை அழகில் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறார். ஆனால் இன்று அவர் எதையும் பார்க்கவில்லை. அவருடைய கண்கள் புல் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தன. ஆனால் பூமிக்கு அடியே இருக்கும் எதையோ ஊடுருவிப் பார்க்க முயலுவது போல் இருந்தது அவரது ஆழ்ந்த பார்வை.

அவர் பார்த்துக் கொண்டிருந்த பத்திரிகை பக்கத்தில் கிடந்தது. காற்று

அடித்து அது பறக்கத் தொடங்கவே அதை எட்டிப் பிடித்தார் சிவசங்கரன். ஒரு தாள்தான் கைக்கு அகப்பட்டது. இன்னொன்று சற்றுத் தூரம் பறந்து ஒரு செடியின் மேல் போய் ஒட்டிக் கொண்டு விகாரமாய் நின்றது.

தம் கையில் இருந்த தாளில் எதையோ தேடினார் சிவசங்கரன். ஒரு இடத்தில் அவரது கண்கள் பதிந்து போயின. அதன் பொருளைச் சரியாக உணர்ந்து கொள்ள முடியாமல் தவிப்பது போல இருந்தது அவரது முக பாவம். வார்த்தைகளை ஒரு முறை சற்று உரக்கப் படித்தார். பிறகு சுற்று முற்றும் பார்த்து விட்டுத் தாளைக் கீழே போட்டார். தாம் அந்தச் செய்தியைப் படித்ததை யாரும் கவனித்து விடக் கூடாது என்று அவர் எண்ணியதாகத் தோன்றியது.

எழுந்து வீட்டை நோக்கி நாலடி எடுத்து வைத்தார். பிறகு மறுபடியும் வந்து நாற்காலியில் பொத்தென்று விழுந்தார். அவர் சொல்ல முடியாத வேதனையால் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தாரென்பது நன்றாகத் தெரிந்தது.

அப்போது வீட்டினுள்ளே யிருந்து டெலிபோன் மணி அடிக்கத் தொடங்கியது. மணிச் சத்தத்தைக் கேட்டதும் தம்மை அறியாமல் வேகமாக எழுந்தார் சிவசங்கரன்.

டெலிபோன் மணி அடிக்கும்போது எல்லாம் எடுத்துப் பழக்கமாகிப் போனவர்களுக்கு, எங்கே போனாலும் மணியடித்தால் சும்மா இருக்க முடியாது. தங்களையும் அறியாமல் ஓடுவார்கள். சிவசங்கரனுக்குத் திடீரென்று தான் இருப்பது தம்முடைய நண்பர் சீனிவாசமூர்த்தியின் வீடு என்பது ஞாபகம் வந்தது. தம்முடைய பரபரப்பை நினைத்து அவரே சிரித்துக் கொண்டார். தாம் இங்கே இருப்பது யாருக்குமே தெரியாதென்பதும் அவருக்கு ஞாபகம் வந்தது.

இதை அவர் நினைத்துக் கொண்டிருக்கும் போதே, வீட்டு வாசல் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த சீனிவாசமூர்த்தி, "சங்கரன்! உனக்கு டெலிபோன் வந்திருக்கிறது" என்று உரக்கக் கூறினார்.

"எனக்கா? இருக்க முடியாதே!" என்று சொல்லிக் கொண்டே அவரை நோக்கிச் சென்றார் சிவசங்கரன்.

"உனக்குத்தான். நான் இரண்டு தடவை கேட்டேன். மாஜிஸ்திரேட் சிவசங்கரன் வேண்டும் என்று தெளிவாக யாரோ சொன்னார்கள். யார் பேசுவது என்று கேட்டதற்கு 'கிருஷ்ணன்' என்று பதில் வந்தது."

சிவசங்கரன் சற்றுத் தயங்கினார். "நான் இங்கே இல்லை என்று சொல்லி விடு" என்றார்.

சீனிவாசமூர்த்தி சிவசங்கரனை வியப்புடன் நோக்கினார்.

"கிருஷ்ணன் என்று எனக்குத் தெரிந்தவர்கள் யாரும் இல்லை. மேலும் நான் இங்கே இருப்பது யாருக்குமே தெரியாது. அப்படி இருக்க இவர் என்னை எப்படிக் கூப்பிட முடியும்?" என்று கேட்டார் சிவசங்கரன்.

"நீ என்ன இப்படிச் சொல்லுகிறாய்? இந்த ஊருக்கு நீ வந்திருப்பதை யாராவது தெரிந்து கொண்டிருப்பார்கள். எந்தப் பள்ளி விழாவுக்காவது தலைமை வகிக்கவோ, அல்லது ஏதாவது சங்கீத நடன ஆரம்ப விழா நடத்தவோ உன்னைக் கூப்பிட வேண்டுமென்று ஆசைப்படுவார்கள். கேட்டு வையேன். உனக்கு விருப்பமில்லா விட்டால் ஒப்புக் கொள்ள வேண்டாமே?" என்றார் சீனிவாசமூர்த்தி.

சிவசங்கரன் தயக்கத்துடனேயே டெலிபோன் அருகில் சென்றார். சீனிவாசமூர்த்தி மாடியேறிச் செல்வதையும் பார்த்தார். ரிஸீவரை வைத்து விட்டால் என்ன என்ற எண்ணத்தைப் போக்கிக் கொண்டு, அதைக் கையில் எடுத்துக் கொண்டார்.

"ஹலோ! யார் பேசுகிறது?"

"மாஜிஸ்திரேட் சிவசங்கரன் அவர்கள்தானே?"

"ஆமாம்."

"உங்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும்."

"நீங்கள் யார்?"

"நான் யாரென்று நேரில் சொல்கிறேன். உங்களைத் தனியாக எங்கே சந்திக்கலாம்?"

சிவசங்கரனுக்கு இப்போது கோபம் வந்தது. ஆனாலும் அந்தக் குரலின் தொனி கொஞ்சம் பரிச்சயமானதாக அவருக்குப் பட்டது. ரிஸீவரை வைத்து விடலாமா என்று சிவசங்கரன் மறுபடியும் எண்ணினார்.

"ஏன் தயங்குகிறீர்கள்? ரொம்ப முக்கியமான விஷயம் பேச வேண்டும். நீங்கள் எப்படியாவது என்னைப் பார்த்துத்தான் ஆக வேண்டும்."

"ஏன், இப்போதே சொல்லலாமே?"

"இப்போது சொல்ல முடியாது. நேரில்தான் பேச வேண்டும்."

அந்தக் குரலில் இருந்த கடுமை சிவசங்கரனுக்கு ஒரு அபாய அறிவிப்பாக இருந்தது.

(தொடரும்)

எங்கள் புதிய தயாரிப்பு

உகந்த முறையில் உன்னத சுகந்தம்

TSR

# கோகுல் மாலா பத்திகள்



கோகுல் மாலா பத்தி TSR & Co GOKUL MALA BATHIS

**டி.எஸ். ஆர் & கம்பெனி, கும்பகோணம்.**

ஏஜெண்டுகள்: மெஸார்ஸ் நாமகிரி டிரேடிங் கார்ப்பொரேஷன், 1, டாக்டர் சத்திரம் லேன், மேற்கு புலிவார் ரோடு, திருச்சி ○ மெஸார்ஸ் J. C. மன்சந்தா, பிளாக் நெ. 1, 15-A/38, கரோல்பாக் புது டில்லி ○ மெஸார்ஸ் கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, லான்ஸ் டவுன் ரோடு, கல்கத்தா-26

---



புதுமை பெறுக!
இதம் பெறுக!
நாரீமணியாய் இருங்கள்! நாள்முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத, மனோரம்மிய மணத்துடன்.

# இதயக் குமுறல்

சேத்தூர் சுத்தன்




ஊருக்கே ஒதுப்புறமாய் உள்ள முகமதியர் தெரு அது. எப்பொழுதும் அமைதி அங்கே குறைவில்லாமல் குடிகொண்டிருக்கும். இன்று அந்தத் தெரு சற்றுக் கலகலப்பாகக் காணப்பட்டது. காரணம் நேற்றிரவு சிங்கப்பூரிலிருந்து இப்ராகிம் ராவுத்தர் வீட்டுக்கு யூசுப் வந்திருந்ததுதான்.

அவனைப் பற்றிப் பலரும் பலவிதமாய்ப் பேசிக் கொண்டார்கள். அவனைப் போலுள்ள இளைஞர்கள், ''தெரியுமாடா? நம்ம யூசுப் வந்திருக்கானும். கை நல்ல ஏற்றமாம்'' என்று பேசிக் கொண்டார்கள். வேறு சில வயதான டெண்கள், ''நம்ப கருட்டுக்கடை இப்ராகிம் ராவுத்தர் வீட்டிலே ஒரு பையன் இருந்தானே, அவன் சிங்கப்பூரு போய் வந்திருக்கானும். பாவம்! அந்த ஜெரினாவை மணக்கணும் என்று அவனுக்கு ரொம்ப ஆசை. என்ன செய்வது? எல்லாம் அல்லாவின் செயல்'' என்று பேசிக்கொண்டார்கள்.

அவர்கள் பேச்சிலே உண்மை இருந்தது. யூசுப் இப்ராகிம் ராவுத்தர் வீட்டிலே வளர்ந்தவன். பிறந்தவன் அல்ல. அவர் ஓரளவு நல்ல நிலையை அடைவதற்கு யூசுப்பின் மாடு போன்ற தளராத உழைப்பும் ஒரு காரணமாக இருந்து வந்தது.

இப்ராகிம் ராவுத்தர் ஓர் அற்புதமான மனிதர் என்றுதான் கூறவேண்டும். மிக ஏழ்மையான நிலையில் பிறந்து வளர்ந்தவர். சொந்த முயற்சியைக் கொண்டே ஒரு நல்ல நிலையை எட்டிப் பிடித்தார். அதுவும் இருமணம் ஆகி அழகே உருவெடுத்த ஜெரினா பிறந்த பிறகுதான் அந்த முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டார்.

ஜெரினா பிறந்த இரண்டாவது வருடம் அவளுடைய தாய் அல்லாவை நாடிவிட்டாள். அப்பொழுது இப்ராகிம் ராவுத்தர் பட்ட துயர் சொல்லி முடியாது. ஜெரினா மட்டும் இல்லை என்றால் அவரும் மனைவி சென்றுள்ள இடத்துக்கே போயிருப்பார். ஜெரினாவின் மதலை மொழியும் அழகு நடையும் அவரை உலகில் வாழச் செய்தன.

தாம் வறுமையில் பட்ட துயரும் தம் மனைவி இன்பமென்பது இன்னதென்றே



அறியாது இறந்துபோன நிலையும் அவரை வாட்டி எடுத்தன. தம் மகளையாவது நல்ல முறையில் வளர்த்துப் பணக்கார மாப்பிள்ளைக்கு 'நிக்காஹ்' செய்து வைக்க வேண்டும் என்ற ஆசை அவரை இயந்திரம்போல் உழைக்கச் செய்தது.

திருவண்ணாமலை பக்கங்களுக்குச் சென்று தவணையில் புகையிலைக் கத்தைகளை வாங்கி வந்து வீட்டிலேயே சுருட்டு தயாரிக்க ஆரம்பித்தார். சுருட்டுவது, லேபிள் ஒட்டுவது, கடையில் விற்பனைக்குக் கொண்டு போய்ப் போடுவது சகலமும் அவர்தான். ஜெரீனா மட்டும் ஏதேனும் உதவி செய்வாள். இப்படிச் சிலகாலம் போக்கிய இப்ராகிம் ராவுத்தர் பிறகு தூரத்து உறவு முறையினனான யூசுப்பை உதவி ஆளாகக் கொண்டு வந்து வைத்துக் கொண்டார்.

அப்பொழுது யூசுப்புக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். தாய் தந்தை ஒரு நாதியும் அவனுக்கு இல்லை. ஆள் பார்ப்பதற்கு அழகாக இருப்பான். பொன்னிறமான மேனியும் சுருள் சுருளான முடியும் அலாதி அழகோடு இருக்கும்.

யூசுப் வந்ததிலிருந்து இப்ராகிம் ராவுத்தருக்கு வேலை குறைந்தது. சகல வேலைகளையும் அவனிடம் கொடுத்து விட்டு, விற்பனை வேலையை மட்டும் அவர் வைத்துக் கொண்டார். யூசுப் ஓய்வில்லாது உழைத்தான். ஒரு நாளைக்கு நூற்றுக்கணக்கான சுருட்டுகளைத் தயாரித்தான். இரவு பகல் என்று பார்க்க மாட்டான். எந்த நேரமும் சுருட்டு சுற்றுவதுதான் அவன் பொழுதுபோக்காக இருந்தது. அவன் கொஞ்சம் தளர்ந்தாலும் ராவுத்தர் பொறுக்க மாட்டார். 'வேளை தவறாது சோறு. அப்புறம் துணி. இதற்குத் தகுந்தபடி வேலை வாங்க வேண்டும்' என்ற உள் நினைவு ராவுத்தருக்கு.

யூசுப்பின் மேல் அவருக்குத் தனிப்பட்ட அன்போ கருணையோ எள்ளளவும் கிடையாது. 'வண்டி இழுக்கத்தானே மாடு என்பது போல் புகையிலை சுருட்டத்தானே யூசுப்' என்றுதான் அவருக்கு எண்ணம். வியாபாரம் பெருகப் பெருக இந்த வேற்றுமையும் அதிகமாகியது. ஆனால் ஜெரீனாவுக்கு மட்டும் யூசுப் இப்படி மாடுபோல் உழைத்து ஓடாய்த் தேய்வதில் விருப்பமே இல்லை. அவன்மேல் அவளுக்கு அதிகமான அன்பும் அனுதாபமும் இருந்தன. அவனுடைய அழகான முகமும், கலகல வென்ற பேச்சும் அவளுக்கு மிகவும் பிடித்துப் போயிருந்தன. அவன் இரவு வெகுநேரம் கண் விழித்து வேலை செய்யும் பொழுது அவளும் அவனுக்குக் கூடமாட இருந்து சில புகையிலைக் காம்புகளை நறுக்கி ஒதுக்கி உதவி செய்வாள்.

காலதேவன் வருடங்களாகக் கபளீகரம் செய்து கொண்டிருந்



தான்: ஜெரினா அழகுத் தேவதையாகக் காட்சி அளித்தாள். யூசுப்பும் அவளுக்கேற்ற ஆண்மையாளனாக வளர்ந்திருந்தான். சரியான பருவம். உணர்ச்சி அலைகள் பொங்கி எழுந்து ஒன்றை ஒன்று தழுவ நினைக்கும் நேரம்.

இந்த நேரத்தில் அசட்டையாக இருந்தால் விபரீதம் நேர்ந்துவிடும் என்பதை இப்ராகிம் ராவுத்தர் உணர்ந்து கொண்டார். யூசுப்புக்கு ஜெரினாவைக் கொடுக்க முறை இருந்தாலும் அவர் விரும்பவில்லை. தம் மகள் பெரிய பணக்காரன் வீட்டில் பகட்டாகவும் படாடோபமாகவும் வாழவேண்டும் என்று தான் அவர் கனவு கண்டு கொண்டிருந்தார்.

அப்படிப்பட்டவர் பணமோ படிப்போ இல்லாத சாதாரண சுருட்டு சுற்றும் தொழிலாளிக்கா தம் பெண்ணைக் கட்டி வைப்பார்? பணம் மட்டும் யூசுப்பினிடம் குவிந்திருந்தால் அவன் கேட்காத பொழுதே வலியச் சென்று தம் பெண்ணைக் கொடுக்க அவர் தயாராக இருந்திருப்பார். ஆனால் இன்று .. இதுவரை அவருடைய உயர்வுக்காகவே உழைத்து. அதனால் காலணாவுக்குக் கூட வழி இல்லாத அவனை எப்படியேனும் வீட்டை விட்டுக் கிளப்பி விடுவதற்கு அவர் யோசனை செய்து கொண்டிருந்தார்.



ஒருநாள் யூசுப்பிடம், "யூசுப்! சுருட்டு வியாபாரத்தை இந்த மாதத்தோடு நிறுத்தி விடப் போகிறேன். நீ வேறு எங்கேயாவது சென்று பிழைக்கிற வழியைப் பார். கொஞ்சம் பணம் தருகிறேன். இப்படிச் சொல்கிறேனே என்று கோபித்துக் கொள்ளக் கூடாது" என்று இப்ராகிம் ராவுத்தர் சந்தேகத்துக்கு இடமின்றி அழுத்தம் திருத்தமாகக் கூறி விட்டார்.

யூசுப்புக்கு உலகமே சுற்றுவதுபோல இருந்தது. அவனுடைய இருதயத்தை யாரோ கோடரி கொண்டு பிளப்பதுபோல் இருந்தது. இப்ராகிம் ராவுத்தர் இப்படிச் சொல்வார் என்று அவன் அணு அளவுகூட நினைத்தது இல்லை. முதலில் கொஞ்சம் எதிர்த்தாலும் பிறகு சரியாகிவிடும் என்றுதான் அவன் எண்ணியிருந்தான்.

ஆனால் இன்று அவன் எதிர்பாராத ஒன்றை இப்ராகிம் கூறிவிட்டார். எட்டும் கனியாக இருந்த ஜெரினா எட்டாத வானுலகத் தாரகை ஆகிவிட்டாள். வேண்டுமென்றால் ஒன்று செய்யலாம். சீக்கிரத்திலேயே பெரும் பணக்காரன் ஆகிவிட்டால் நிச்சயம் ஜெரினா அவனுக்குத்தான் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் அவன் எந்த யுகத்தில் பணக்காரன் ஆவது? அதுவரையில் ஜெரினாவைக் கட்டிக் கொடுக்காமல் இருக்க வேண்டுமே?

யூசுப் ஏதோ ஓர் முடிவுக்கு வந்தான்: தனக்கு உரியது என்று இருந்த இரண்டொரு சட்டைகளையும் கைலிகளையும் எடுத்துக் கொண்டு இப்ராகிம் ராவுத்தர் கொடுத்த முழு நூறு ரூபாய் நோட்டு ஒன்றையும் பத்திரப் படுத்திக் கொண்டு ஜெரினாவிடம் கண் கலங்க விடை கேட்டான்.

அவன் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. அதுகூட அவள் நயனங்களுக்கு அதிக அழகைக் கொடுத்தது:

"ஜெரினா நான் போயிட்டு வரேன்...."

"......எங்கே போ..றீ..ங்க?...."

விம்மலுக்கிடையே கேட்டாள் ஜெரினா.

"அக்கரைக்குப் போகிறேன். காசோடுதான் திரும்புவேன்."

"அப்படி என்றால் நான்?.." என்றாள்.

அப்பப்பா! அந்த ஒரு வார்த்தைக்குத்தான் எத்தனை மகத்துவம்! யூசுப்பின் உடலில் ஒருவிதப் புல்லரிப்புஉண்டாயிற்று:

"எனக்காகக் காத்திருப்பாயா, ஜெரினா? எப்படியும் பணத்தோடு திரும்பிவிடுவேன். ஆனால் எப்பொழுது திரும்புவேன் என்று சொல்ல முடியாது" என்றான்.

நம்ப முடியாத பேச்சு: எப்படியும் திரும்பிவிடுவானாம். ஆனால் எப்பொழுது என்று சொல்ல முடியாதாம். ஜெரினா மௌனமாக விடை கொடுத்து அனுப்பினாள்:

அன்று போன யூசுப் இன்று வந்துள்ளான். காலணாவுக்கு வழி அற்றவனாக வரவில்லை. ஆயிரக்கணக்கானரூபாய்களுக்கு அதிபதியாக வந்துள்ளான். ஜெரினாவுக்காக விதம் விதமான துணிகள், விலை உயர்ந்த நகைகள், அழகழகான அலங்காரப் பொருள்கள் வாங்கி வந்திருந்தான். அவன் கையிலே தங்கக் கடிகாரம், வைர மோதிரங்கள், சட்டைப் பையிலே வைரக்கல் பதித்த பேனா இவைகளே யூசுப்பின் பண நிலையைத் தெளிவாகக் காட்டின. இப்ராகிம் ராவுத்தர் யூசுப்புக்கு ஓடி ஓடிஉபசரணை செய்தார். ஜெரினா?...

..அவளை இன்னும் யூசுப் பார்க்கவே இல்லை:

"என்ன மாமா, ஜெரினாவைப் பார்க்கவே முடியவில்லையே? வீட்டில்தான் இருக்குதா?" என்று யூசுப் மிகுந்த ஆவலோடு கேட்டான்:

"வீட்டிலேதான் இருக்குது. போனவாரம் தான் அழைச்சுக்கிட்டு வந்தேன்.."

"போனவாரம்தான் அழைச்சிக்கிட்டு வந்தீர்களா?..என்ன சொல்கிறீங்க?"

"ஓ..உனக்குத் தெரியாதா? போன வருஷமே ஜெரினாவுக்கு நிக்காஹ் முடிந்துவிட்

டேனே. உன்னுடைய விலாசம் தெரிந்திருந்தால் பத்திரிகை அனுப்பி இருப்பேன். நாலு வருஷங்களுக்கு முன்பு போனவன் இப்பொழுதுதான் திரும்பியிருக்கிே. நீ சிங்கப்பூருக்குப் போனதுகூட இப்பொழுதுதான் எனக்குத் தெரியும்.''

யூசப்புக்கு ஆயிரம் கருநாகங்கள் ஒரே சமயத்தில் தீண்டியதுபோல இருந்தது. அவன் இருதயம் வெடித்துச் சுக்கல் சுக்கலாக ஆவதுபோல் இருந்தது. யாருக்காக இந்த நான்கு வருஷங்களும் உயிர் வாழ்ந்தானே, எவளுக்காக ஓடி ஓடிப் பணம் சம்பாதித்தானே, எவளுக்காகத் தன் மனச்சாட்சிக்கு விரோதமாக, தீயவழியில், தகாத முறையில் பணம் ஈட்டிக் கொண்டு ஆவலோடு தாய்நாட்டுக்கு ஓடிவந்தானே அத்தனையும் வீணுகப் போய் விட்டன.

யூசப் ஒருவாறு சமாளித்து ஆசுவாசப்பட்ட பிறகு, ''..மாமூ! மாப்பிள்ளை எந்த ஊர்? என்ன வேலை?..'' என்று ஈனஸ்வரத்தில் கேட்டான்.

''மாப்பிள்ளை நாகப்பட்டினத்தைச் சேர்ந்தவர். ஆனால் இப்பொழுது சிங்கப்பூரில்தான் இருக்கிறார். ரொம்பக் காலத்துக்குப் பிறகு போன வருஷ ஆரம்பத்தில்தான் தாய் நாட்டுக்கு வந்தார். ஆடம்பரம் அதிகம் இல்லாமல் நிக்காஹ் நடந்தது. ரொம்ப நல்ல மனிதர். அருமையான குணம். சிங்கப்பூரில் பனமா கம்பெனியில் காஷியராக இருக்கிறார். நீகூட ஆளைப் பார்த்திருக்கலாம்.''

''பெயர் என்ன? புகைப்படம் ஏதாவது இருக்கிறதா?'' அவன் குரல் முன்னைவிட ஒரு படி குறைவாகவே இருந்தது. அதைவிட இனம் புரியாத நடுக்கமும் நிறைந்திருந்தது.

''பெயர் உசேன். இதோ புகைப்படத்தை எடுத்து வருகிறேன்'' என்று கூறிவிட்டு உள் அறையில் மாட்டி இருந்த அவருடைய மருமகன்—ஜெரினாவின் கணவன்—புகைப்படத்தை எடுத்து வந்து காட்டினார்.

யூசப் அதைக் கையில் வாங்கிப் பார்த்தான். நன்றாகக் கண்ணைத் துடைத்து விட்டுக் கொண்டு பார்த்தான். அடுத்த கணம்— ''ஆ....'' என்று வாய்விட்டுப் பலமாக அலறி விட்டான்.

இப்ராஹிம் ராவுத்தர் என்னவோ ஏதோ என்று பயந்துவிட்டார். ''என்னப்பா யூசப்! என்ன நேர்ந்தது? என்ன, என்ன?....'' என்று பரபரப்போடு கேட்டார். அதே சமயத்தில் ஏழெட்டு மாதக் கர்ப்பவதியான ஜெரினாவும் வெளியே வந்து பார்த்தாள். அவளும் யூசப்புக்கு என்ன நேர்ந்ததோ என்று பதறி விட்டாள்.

''ஒன்றும் இல்லை மாமா. கப்பலில் தின்ன சோறு இப்படிப்படுத்தி வைக்கிறது. வயிற்று வலி. வேறொன்றும் இல்லை. தானாகவே சரியாகப் போய்விடும்'' என்று மனச்சாட்சிக்கு விரோதமாக, அப்பட்டமாகப் புளுகினான்.

வாசல் நிலைக்கு உள்பக்கமாக நின்றிருந்த ஜெரினாவை ஏறிட்டு நோக்கினான் யூசப். அவள் முகம் வீங்கிப் போயிருந்தது. பாவம்! இரவிலிருந்து யூசப்பை நினைத்துத் தான் கண்ணீர் வடித்திருக்கிறாள். அதை யூசப் அறிந்து கொண்டான். அதோடு அவள் உடல் நிலையில் ஏற்பட்டிருந்த பெருத்த




''தேர்தலில் ஜெயித்தால் பிள்ளையாருக்கு நூறு ரூபாய்க்குத் தேங்காய் வாங்கி உடைக்கலாம் என்று இருந்தேன்... தேர்தலில் தோற்று விட்டேன், சார்!''

''தேர்தலில் நீர் ஏகமாகச் செலவு செய்திருக்கும்...போது மீண்டும் உமக்கு விநாயகர் செலவு வைப்பாரா......?''

---

மாறுபாட்டையும் தெரிந்து கொண்டான்; அவள் உடல் தனிச் சோபையோடு விளங்கியது. இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் அவள் அடையப்போகும் தாய்மையின் பூரிப்பு அவள் மேனி எங்கும் சிதறிக் கிடந்தது.

'இனி காதலுக்கு என்ன வேலை?' என்று ஜெரினாவுக்கும் உசேனுக்கும் கல்யாணம் நடந்ததோ? எவ்வளவு பிடிவாதமாக இப்ராஹிம் ராவுத்தர் செய்து வைத்தாரோ? அன்றே யூசப்பின் காதல் காய்ந்து கருகிப்போகவில்லையே விட்டது. அதை அறியாத யூசப் இத்தனை தூரம் வந்து ஜெரினாவின் வாழ்க்கையிலும் ஒரு சிறு புயலை உண்டாக்கியது எத்தனை தவறு என்று நினைத்தான்.

ஆனால் அவன் வந்தது எவ்வளவோ நன்மையாயிற்று. அதள பாதாளத்தில் விழுந்து தொலைக்கக்கூடிய ஜெரினாவின் வாழ்க்கையை, அவளுடைய அன்புக்கணவன் உசேனின் உயிரை, இனி நிச்சயம் யூசப் காப்பாற்றி விடுவான்.

ஆம்! இந்த நேரத்தில் சிங்கப்பூரில் சிறைக் கம்பிகளுக்குள்ளே கொலைக் குற்றத்துக்காகவும் கொள்ளைக் குற்றத்துக்காகவும் உசேன் சித்திரவதைக் குள்ளாகியிருந்தான்.

இதற்குக் காரணம் யூசப்புதான். அவன் மேலும் தவறு இல்லை. அவன் காதல் வெறி, ஏழைமை நிலை கொலையோ, கொள்ளையோ எதையும் செய்யத் தயங்கவில்லை.

யூசப் சிங்கப்பூருக்கு வந்த புதிதில் சரியான வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. கூலி

வேலையில் கிடைத்த வருமானம் வயிற்றைக் கழுவவே போதவில்லை. எங்கெங்கோ நிறைய வருமானம் கிடைக்கும் வேலைக்காகத் தேடினான். பலன் இல்லை. ஒருநாள் சோர்ந்த உள்ளத்தோடு நடந்து வந்து கொண்டிருந்த யூசுப்பின் மேல் ஒரு கார் மோதி விட்டது. அந்தக் கார் பஹுமா கம்பெனியாரின் கார். அதில் இருந்தவன் உசேன்தான். காஷியர் உத்தியோகம் அல்லவா? பாங்கில் பணம் கட்டிவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான்.

நல்ல காலமாக யூசுப்புக்குப் பலத்த காயங்கள் ஒன்றும் இல்லை. சில நாட்களிலேயே அவனுடைய சிறு காயங்களும் ஆறி விட்டன. பிறகு உசேனின் சிபாரிசின்பேரில் பஹுமா கம்பெனியிலேயே சாதாரண சிப்பந்தி வேலை அவனுக்குக் கிடைத்தது.

யூசுப் வேலைக்கு வந்த மறுமாதம் உசேன் ஒன்பது மாத லீவில் தாய்நாட்டுக்கு வந்து திருமணம் முதலியவற்றை முடித்துக்கொண்டு சிங்கப்பூர் திரும்பினான். யூசுப் உசேனிடம் அதிகமாகப் பழக மாட்டான். சாதாரண சிப்பந்தி என்ற தோரணையில்தான் பழகினான். ஆதலின் ஜெரினாவைக் கைப்பிடித்தவன் உசேன் என்பதை அவன் அறிய நியாயமில்லை.

காலம் விரைந்தது. அதைக் கண்டு யூசுப் கதி கதிகலங்கினான். 'ஜெரினா ஜெரினா' என்று சதா சர்வகாலமும் அவன் ஏங்கிக் கொண்டிருந்தான். என்று பணம் குவித்து, எப்பொழுது போய் ஜெரினாவை மணந்து கொள்வது? அவனுக்குக் கிடைத்த வருமானமோ குறைவு. அதில் மீந்துச் சேமித்தாலும் எத்தனை வருடங்களுக்குச் சேமிப்பது? அது வரையிலும் ஜெரினாவுக்குத் திருமணமாகாது என்று என்ன நிச்சயம்? அவள் கல்யாணம் வேண்டாம் என்று சொன்னாலும் அவளுடைய தகப்பனார் சம்மதிக்க மாட்டாரே! முடிவாக அவன் உள்ளம் அதர்ம வழியை நாடியது. அவ்வழி தவறென்பதை அறிந்து தன்னை இழுத்துப் பிடித்து அடக்க முயன்றும் முடியவில்லை. அதற்கேற்றாற்போல் அவனுக்குக் கிடைத்த நட்பும் மிக உதவியாக இருந்தது. லிங்லிங் என்ற சீனக் கேடி ஒருவனின் நட்பு அவனுக்குக் கிடைத்தது. அதன் பிறகு திட்டம் செவ்வனே தீட்டப்பட்டது. பஹுமா கம்பெனிக்குள்ளேயே பலர் ஒன்று சேர்ந்து உதவிபுரிய முன் வந்தார்கள். எல்லாம் பணத்தின் மகிமைதான்.

ஒரு நாள் இரவு பத்து மணி இருக்கும். பஹுமா கம்பெனி சிப்பந்திகள் அலுவல் முடிந்து வீட்டுக்குப் போய் விட்டார்கள். மானேஜரும், காஷியர் உசேனும் ஒரு அறையில் அமர்ந்து அரை வருடக் கணக்கு வழக்குகளைச் சரிபார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது — ஏதோ கணக்குப் புத்தகம் எடுப்பதற்காகப் பக்கத்து அறைக்குச் சென்ற உசேன் மானேஜரின் அறையில் பலத்த சத்தம் கேட்கவே ஓடிவந்து பார்த்தான். அங்கே— மானேஜர் நெஞ்சிலிருந்து இரத்தம் ஒழுகக் கீழே விழுந்து கிடந்தார். லட்சக்கணக்கான ரூபாய்களைக் கொண்டிருந்த பெரிய இரும்புப் பெட்டி பரந்த உள்ளத்தோடு திறந்து கிடந்தது. மானேஜர், "..பாவி! எத்தனை நாட்களாகத் திட்டம் போட்டிருந்தாய்? உன் ஆட்கள்தான் என்னே.." என்று உசேனைப் பார்த்துச் சொன்னார். உசேன் திகைத்து நின்று விட்டான்.

அப்புறம் எல்லாம் வழக்கம்போல் நடந்தன. போலீஸ் வந்தது. குற்றுயிராய் இருந்த மானேஜர் உசேன் பக்கம் கையைத் தூக்கிக் காட்டி விட்டுக் கண்ணை மூடிவிட்டார். உசேனுக்கு எதிராகப் பல சாட்சியங்கள். மானேஜருக்கும் காஷியருக்கும் மனத்தாங்கல் உண்டென்று கூறினார்கள். அவர்களில் கொலை செய்த பொழுது கூடவே இருந்த யூசுப்பும் ஒருவன். யூசுப்தானே இதற்கு முக்கிய காரணம். அவன் ஜோடனைப்படியே, லிங்லிங் யோசனைப்படியே உசேனைக் குற்றவாளி ஆக்கியாகி விட்டது. இன்னும் தீர்ப்பு கூறவில்லை. ஆனால் என்ன தீர்ப்பு கிடைக்கும் என்பதை எல்லோரும் அறிவார்கள்.

சாட்சியமெல்லாம் முடிந்தது. யூசுப் தன் பங்காக லிங்லிங் கொடுத்த ஐம்பதினாயிரம் ரூபாய்களை எடுத்துக் கொண்டு ஆவலோடு ஓடி வந்தவனுக்குத் தான் எதிர்பாராத அதிர்ச்சி இங்கே ஆவலோடு காத்திருந்தது.

ஜெரினாவை மற்றொரு முறை நிமிர்ந்து பார்த்தான் யூசுப். அதுதான் கடைசிப் பார்வை. ஜெரினாவின் விழிகளில் வீசிய தெய்விக ஒளியை நன்கு பருகினான். அவனுக்கு ஒரு திருப்தி. அதோடு ஒரு நிம்மதியும் ஏற்பட்டது. காரணம் உசேன் சிறையில் இருப்பதும் அவன்மேல் சுமத்தி உள்ள குற்றங்கள் ஜெரினாவுக்கோ மற்றவர்களுக்கோ தெரியாது என்பதும்தான்.

மறுநாள் யூசுப் விமானத்தில் சிங்கப்பூர் புறப்பட்டு விட்டான். கட்டிய கைலி, போட்ட சட்டை, ஐம்பதினாயிரத்தில் மீதம் இருந்த தொகை—இவ்வளவுதான் அவனிடம் இப்பொழுது இருந்தன. அவன் இப்படித் திடீரென்று புறப்பட்டதைக் குறித்து ஊரே 'கொல்'லென்று போய் விட்டது. பலரும் பலவிதமாகப் பேசிக் கொண்டார்கள். ஜெரினா காதலின் தோல்வி என்று எண்ணினாள். இப்ராகிம் ராவுத்தர் பணத்தாசை என்று நினைத்தார். உண்மை அவன் ஒருவனுக்குத்தானே தெரியும்!

விமான நிலையத்தில் வந்து இறங்கிய யூசுப் நேரே பெரிய போலீஸ் அதிகாரியிடம் சென்றான். விஷயத்தை அவன் ஆதாரத்தோடு ஆதியோடு அந்தமாக விளக்கி அவரிடம் கூறினான். போலீஸ் இலாக்காவினர் பிரமித்துப் போயினர். நெருக்கடியான நிலையிலாவது ஒரு நிரபராதியின் உயிர் காப்பாற்றப்பட்டதே என்று போலீசார் சமாதானம் அடைந்தார்கள்.

லிங்லிங்குக்கும் யூசுப்புக்கும் மரண தண்டனை கிடைத்தது. இவர்களுக்கு உதவி செய்து கொலைக்கு உடந்தையாய் இருந்த வேறு பத்துப் பேர்களுக்கும் தலா பத்து வருடங்கள் தண்டனை கிடைத்தது.

தண்டனையை எல்லோரும் தாங்க முடியாத துயரத்தோடுதான் ஏற்றார்கள்; ஆனால் காதலுக்காகக் காதகம் செய்து காதலியின் வாழ்வுக்காகக் காதலை மட்டுமின்றித் தன் உயிரையும் அர்ப்பணித்துத் தவறுணர்ந்த தியாகச் செம்மல் யூசுப்பைத் தவிர.

## எல்லோருக்கும் தெரியும் —

ப்ரூக் பாண்ட் தேயிலையின் மேன்மையான புத்தம் புதிய தன்மைக்குக் காரணம் அது துரிதமாக கடைகளுக்கு அனுப்பப்படுவதே

ஒவ்வொரு ப்ரூக் பாண்ட் தேயிலை பாக்கெட்டிலிருந்தும் உங்களுக்கு அதிகப்படியான, ருசியான தேநீர் கிடைக்கிறது

ஒவ்வொரு நாளும் 24,90,496 ப்ரூக் பாண்ட் தேயிலை பாக்கெட்டுகள் விற்பனையாகின்றன




**ஆகையால்தான் மற்றெந்தத் தேயிலையையும் விட அதிகப்படியான ஜனங்கள்**

# ப்ரூக் பாண்ட் தேயிலையையே

**அருந்துகிறார்கள் !**

BB 141K

# ரகுபதி ராகவ

[ அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது ]

70



நானுமே இன்னும் வெற்றி பெறவில்லை. எங்கிருந்தோ உள்ளத்துக்குள் நாம் விரும்பாத கருத்துக்கள் புகுந்து தொந்தரவு செய்கின்றன. அவற்றை வாயிலுக்கப்பால் நிறுத்த முடியவில்லை. எவ்வளவோ முயற்சி செய்கிறேன். வெற்றி பெற வேண்டும் என்று விரும்புகிறேன். வேண்டாத எண்ணங்களை உள்ளே பிரவேசிக்காமல் கதவை அடைப்பதற்கு வழி உண்டு என்பதில் சந்தேகமில்லை. ஆனால் ஒவ்வொருவனும் அதைத்தானே காண வேண்டும். முனிவர்களும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்களுடைய அனுபவங்களைப் பாடியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இதற்கென்று ஒரு பிழையா மருந்தைத் தரவில்லை. ஆண்டவன் அருளைத் தவிர வேறொன்றும் வழியில்லை. பெரியோர்கள் ஜபம் செய்த மந்திரங்களும் நாமாவளிகளும் இருக்கின்றன. அந்த மந்திரங்களோடு அவர்கள் செய்த தவமும் அவர்களுடைய உள்ளத்தின் மாசற்ற பண்பும் கலந்து நிற்கின்றன. அவர்கள் உச்சரித்துப் பயன் பெற்றும் புனிதமாக்கியுமுள்ள மந்திரங்களையும் நாமாவளிகளையும் நாமும் உச்சரித்து ஆண்டவன் அருளைப் பெறுவோமாக. எல்லா மதங்களிலும் இதுவே செய்யப்பட்ட உபதேசம். அதன் உண்மையை நான் அனுதினமும் காண்கிறேன்.

— சுயசரிதம்

ஒன்று நிச்சயம் கடவுளை நம்பினால்தான் வெற்றி பெறுவோம். வெறும் பேச்சில் பயனில்லை. உறுதியான பக்தி வேண்டும். ''கடவுள் வேண்டியதில்லை; சுத்தமான வாழ்க்கையை வாழ்ந்தால் போதும். கடவுளைப் பற்றிக் கொள்கை ஏதுமில்லாமலேயே பரிசுத்த வாழ்க்கை வாழ முடியும் என்று பேசுவது இந்தக் காலத்தில் வழக்கம். அவர்களோடு நான் வாதாடி ஜெயித்து நம்மையாளும் பராசக்தி ஒன்று உண்டு என்று அவர்கள்காணும்படி செய்ய என்னால் முடியாது. என்னுடைய அனுபவத்தைத்தான் நான் சொல்ல முடியும். நம்முடைய கருத்துக்குள் அடங்காத ஒரு பராசக்தி உலகத்தை ஆள்கிறது என்று அசையாத நம்பிக்கை இல்லாவிடில் வாழ்க்கை பூரணத்தை அடையாது. இது என்னுடைய அனுபவத்தின் முடிவு. பக்தியில்லாதவனுடைய கதி கடலினின்று வீசிச் சிதறிப்போன ஒரு நீர்த் துளியைப் போலாகும். அழிந்து போவது நிச்சயம். கடலோடு கலந்து நிற்கும் நீர்த் துளிகளோ கடலினுடைய பெருமையில் ஒவ்வொன்றும் பங்கு கொண்டு நின்று மக்களின் உயிருக்கு அமிர்தமான பிராணவாயுவைத் தருகின்றன

— ஹரிஜன் 25—4—36






அன்புமிக்க சுஜாதா,

உன் கடிதத்தில் பக்கத்து வீட்டுச் சிநேகிதி இவ்வளவு நாட்களாக மிகவும் அன்புடன் சகஜமாகப் பழகி வந்ததாகவும், ஆனால் கல்கத்தாவிலிருந்து அவளுடைய சகோதரி வந்ததிலிருந்து உன்னைப் பார்ப்பதில்லை, பேசுவதில்லை, கர்வமாக இருக்கிறாள் என்றும் எழுதி யிருக்கிறாய்.

இதைத்தான் சூழ்நிலைக்கு ஏற்ப மாறும் சுபாவம் என்கிறோம். வாழ்க்கையில் ஒவ்வொரு வயதிலும், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் சூழ்நிலை முக்கியத்துவம் பெறுகிறது. நாட்டில் அமைதியை நாடுகிறோம். அமைதியின்றி முன்னேற முடியாதென்று அறிகிறோம். அந்த அமைதி ஏற்பட வேண்டுமானால் மக்களின் மத்தியில் உயர்ந்த சூழ்நிலை உருவாக வேண்டும். அனைவரும் திருப்தியான மனநிலையில் இருந்தால்தான் சூழ்நிலை உயரும்.

அதைப் போலவே தான் குடும்பத்தின் நிலையும். நாம் அமைதியாகவும் சந்தோஷமாகவும் இருக்க வேணுமானால் கணவனின் குணம் எப்படி யிருந்தாலும், மற்றவர்கள் குணம் எப்படி இருந்தாலும் இதை மிகைப் படுத்தாமல், நல்ல குணங்களைமட்டும் அதிகப் படுத்தி, சூழ்நிலையை நன்றாக அமைத்துக் கொள்ளத்தான் நம் முயற்சி தேவை. எளிமையும் பூஜையுமாகக் குடும்பங்கள் இருந்தால் மற்ற வசதிகள் எவ்வளவு பெற்றாலும் உண்மையான ஆனந்தம் அங்கே தலை காட்டாது. கூடியவரையில் மற்றவர்களுடைய அன்பைப்பெற முயன்று பார்ப்போம்.



குழந்தைகள் வளரும் பருவத்தில் சூழ்நிலையைப் பற்றி மிகவும் கவனமாக இருக்க வேண்டும். முதல் பதினெட்டு வயது வரையில் மனத்தில் எதையும் நன்றாகப் பதிவு செய்து கொள்ளும் காலம். எனவே அப்பொழுது அவர்களுக்கு நல்ல சூழ்நிலை அவசியமாக இருக்கிறது. பெற்றோர்களும், ஒரு பெண்ணோ, பிள்ளையோ நல்ல முறையில் முன்னுக்கு வர வேண்டுமென்று கருதுகிறார்கள். சரியான கல்வி அறிவு பெற வேண்டுமென்கிறார்கள். பொருளைச் செலவு செய்து பாடுபடுகிறார்கள். அதே சமயம் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் ஆசிரியர்கள் பொறுப்பேற்றுச் சிரமப்படுகிறார்கள். மிகச் சில குழந்தைகள் பொறுப்பை உணர்வதில்லை. கூட இருக்கும் சிநேகிதன் கெட்ட குணமுள்ளவனாக இருந்தால் நாளடைவில் இவன் குணம் மாறி விடுகிறது.

பொதுவாக மாணவர்கள் படிக்க வேண்டிய காலத்தில் படிக்காமல் சூழ்நிலையின் காரணமாக மாறினால் சென்ற நாட்களைத் திரும்பிப் பெற முடியாது. பின்னால் அதற்காக வருந்த நேரிடுகிறது. அவர்களைத் திருத்தும் முயற்சியும் கவனிக்கப்பட வேண்டியது தான்.

மாலைப் பொழுதைச் சந்தோஷமாகக் கழிக்கப் படக் காட்சிக்குப் போகிறோம். நம்முடன்கூட வருகிறவர்கள் நல்ல ரசிகர்களாக இருந்தால் நாம் படத்தில் உள்ள நல்ல அம்சங்களை ரசிக்க முடியும். அவர்களுக்குக் கலையில் ருசியின்றியோ அல்லது மட்டரகமான ருசி இருந்தாலோ நாம் மனமகிழ்ச்சியை விரும்பிப் படம் பார்க்கப் போனது வீண்தான்.

சில வருஷங்களுக்குமுன் ராமாயணத்தில் உள்ள ஒரு பகுதியைச் சிறந்த படமாக எடுத்திருந்தார்கள். என் சிநேகிதி அந்தப் படத்தைப் பார்க்கப் போயிருந்தாள். சிறந்த ரசிகை. படம் அபாரமானது. ஆனால் அந்தச் சிநேகிதி 'படத்தில் ராமர் நடிப்பு நன்றாக இல்லை' என்று சொன்னாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. கூட என்னுடைய மற்றொரு சிநேகிதி போயிருந்தாளென்று அறிந்த போது எனக்கு விஷயம் விளங்கியது. மூன்றாவது சிநேகிதிக்கு அநேகமாக ஆடவர்களில் நல்லவர்களே கிடையாது என்று திடமான அபிப்பிராயம். எனவே அந்தச் சிநேகிதியின் விமர்சனம் ரசிகையின் மனத்தை மாற்றி இருக்கிறது.

அதைப் போலச் சங்கீதம் தெரியாதவர்களுடன் நல்ல கச்சேரி கேட்கப் போவதில் அர்த்தமில்லை. ராக விந்யாசமோ நுட்பமோ தெரியாதவர்கள் கொட்டாவி விட்டுக் கொண்டு அதைக் குற்றம் சொல்வார்கள். இதிலிருந்து நல்ல சூழ்நிலை அவசியம் என்பது தெரிகிறதல்லவா?

குளவி ஒரு புழுவைக் கொண்டு வைத்துக் கொட்டிக் கொட்டித் தன்னைப் போல் குளவியாக்குகிறது. அதைப் போலத்தான் மனிதப் பிறவி. கூட இருக்கிறவர்கள் நடந்து கொள்ளும் விதமும் சொல்லும் நம்மை மாற்றும். அதைப் போலச் சூழ்நிலையில் வித்தியாசம், பொறாமை, சச்சரவு இவைகளெல்லாம் இருந்து விட்டால் நாம் சாதுர்யமாக உண்மையான அன்பைக் கடைப்பிடித்துச் சூழ்நிலையைச் சரிப்படுத்திக் கொள்வதுதான் சாலச் சிறந்தது.

இப்படிக்கு,
பூமாதேவி

# பாதி விலைக்கும் குறைவு

## 15 நாட்களுக்கு மட்டும்

எல்லாக் கெடிகாரங்களும் புகழ் பெற்ற தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டவை

பத்து வருஷங்களுக்கு உத்தரவாதம்

இலவசம் - 3 கைக் கெடிகாரங்கள் ஒரே சமயத்தில் வாங்குபவர்களுக்கு ஒரு கைக் கெடிகாரமும், இரண்டு வாங்குவோருக்கு ஒரு பாக்கெட் கெடிகாரமும், ஒன்று மட்டும் வாங்கினால் ஒரு பவுண்டன் பேனாவும் இலவசம்.



| | |
|---|---|
| பாக்கெட் கெடிகாரம் | 28/- 13/- |
| ரேடியம் பாக்கெட் கெடிகாரம் | 32/- 15/ |
| ஜெர்மனி டைம்பீஸ் | 32/- 15/- |
| உயர்தர அலாரம் | 36/- 17/- |




| | |
|---|---|
| 21 ஜு. வாட்டர்புரூப் குரோம் | 80/- 39/ |
| 21 ஜு. ,, ரோல்டு கோல்டு | 86/- 42/ |
| 15 ஜு. லக்ஸ் வாட்டர் புரூப் | 75/- 36/ |




| | |
|---|---|
| 21 ஜு. வாட்டர்புரூப் குரோம் | 88/- 42/ |
| 21 ஜு. ,, ரோல்டு கோல்டு | 95/- 45/ |
| 17 ஜு. லக்ஸ் வாட்டர் புரூப் | 76/- 37/ |




| | |
|---|---|
| 15 ஜு. ரோல்டு கோல்டு | 75/- 35/ |
| 15 ஜு. ,, 10 மைக்ரோன்ஸ் | 75/- 38/ |

**PIONEER WATCH CO**
POST BOX No. 11428 - CALCUTTA-6

# அழகிய பளபளப்பான கூந்தலின் ரகசியம் . . .



.....

அழகுமிக்க பளபளப்பான கூந்தலைப் பெற்றிருப்பதன் ரகசியம் ஒழுங்கான பாதுகாப்பு மட்டுமல்ல, சரியான தலைமயிர்த் தைலம் தேர்ந்தெடுப்பதும் கூட.

கால்கெமிகோவின் காஸ்டராலை உபயோகிப்பதால் கூந்தல் நன்கு வளருகிறது. நரை தடுக்கப்படுகிறது. மயிர் உதிர்வது நிற்கிறது என்றுணர்ந்தவர்கள் அதை தேர்ந்தெடுக்கிறார்கள்.

சுத்தப்படுத்தப்பட்ட விளக்கெண்ணெயினால் தயாரிக்கப்பட்ட இந்த ரம்மிய வாசனை கொண்ட கூந்தல் தைலம் தலைமயிருக்குப் புது பளபளப்பு தருகிறது.

5, 10 அவுன்ஸ் வசீகர புட்டிகளில் கிடைக்கும்

# காஸ்டரால்

**தனிப்பட்ட குணம் பெற்ற கூந்தல் தைலம்**






தி கல்கத்தா கெமிகல் கம்பெனி, லிட்.
கல்கத்தா - 29.

தென் இந்தியக் கிளை: 5/149, பிராட்வே, மதராஸ்-1

Tamil-14

# மலச் சிக்கல்

## உங்களை சோர்வடையச் செய்கிறதா?



மலச்சிக்கல் ஒரு அற்பமான நோய். அது உங்களுக்கு சோர்வும், தளர்ச்சியும், மேனிக்குறைவும் உண்டாக்குகிறது. அதிலும் உங்கள் [illegible] இம்மாதிரி துன்பம் அடைபவர்களுக்காக [illegible] ப்ரூக்லாக்ஸ் என்ற சக்தி வாய்ந்த எளிய [illegible]. இந்த ருசி மிகுந்த சாக்லேட் பேதி மருந்து [illegible]





### ப்ரூக்லாக்ஸ்

### ஒரே இரவில்

உங்களை குணமாக்கும்

(கண்டாக் லெபரேட்டரீஸ் லிமிடெட், தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-டி, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்—1

## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டுபிடிக்கப் பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக்கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினால் அவதியுற அவசியமே இல்லை. நோயாளி என நினைத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினால் குணப்படுத்துங்கள்

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மை யாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றிச் சுத்தமாக்குகிறது

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலைச் சில நிமிஷத்தில் நிறுத்திச் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் K. R. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப் பட்டேன். பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாயிற்று. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்"



BEFORE



AFTER

### திருப்திக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்கி உபயோகித்துஅதனால்ஏற்படும்பலனைக் கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படி சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான செலவைப் பற்றிக் கவலையுற வேண்டாம்: அதன் காலி பாக்கெட்டைத் திருப்பி அனுப்பினால் உங்களுக்கு முழுப்பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு

# தேனருவி





ர. சு. நல்லபெருமாள்

திருக்குற்றாலத்துக்கு வந்து மூன்று நாட்களாகி விட்டன. கைலாசத்துக்குத் தேனருவிக்குச் செல்ல வேண்டும் என்று ஆசை. ஆனால், அவருக்குத் துணையாக வந்த அவர் பேரன் கண்ணனுக்கு இன்னும் மனம் வரவில்லை. குற்றாலத்துக்கு வந்த அன்றே தேனருவிக்குக் கிளம்பினார். ஆனால், மெதுவாகப் போகலாம் என்று அவரைக் கண்ணன் தடுத்து விட்டான். கண்ணனின் துணையில்லாமலே தேனருவிக்குப் போய் விடலாம். ஆனால் தேனருவிப் பாதை கொஞ்சம் ஆபத்தானது. கைலாசத்துக்கு வயது எழுபதாகி விட்டது. துணையில்லாமல் அவர் போவது கடினந்தான்.

கைலாசத்துக்கு மனத்தில் நிம்மதியில்லை. அவர் குற்றாலத்துக்கு வந்ததே தேனருவியைப் பார்க்கத்தான். ஐம்பது வருடங்களுக்கு முன் பார்த்திருக்கிறார். பார்த்த இடந்தான். இருந்தாலும், இப்போது அவர் தேனருவியைப் பார்க்கத் துடிக்கிறார்.

ஐம்பது வருடங்களுக்கு முன் அவர் தேனருவிக்குப் போய் வந்த ஞாபகம் இன்னும் அவருடைய மனத்தில் பசுமையாகவே யிருந்தது! வயதடைந்து, தேகம் முதிர்ந்து விட்டால் ஞாபகங்கள் கூடவா முதிர்ந்து விடும்?

கைலாசம் நாற்காலியில் சாய்ந்தவாறு கண்களை மூடிக் கிடந்தார். உள்ளத்தில் கடந்த கால எண்ணங்கள் சூழ்ந்து கொண்டன.

இருபதாவது வயதில் ரங்கூனுக்குப் போனார். போகும்போது அவருக்குத் துணையாகச் சென்றது, அவருடைய தரித்திரமும் உடைந்த உள்ளமுந்தான். ஏழை என்பதனால் அவர் உள்ளம் உடைந்து விடவில்லை. அவருடைய இதயத்தில் குடிபுகுந்த குமுதா அவருக்குக் கிட்டாமல் போனதால்தான், அவர் மனம் உடைந்தார். அவர் ஏழையாததலால், குமுதாவின் பெற்றோர்கள் அவளை வேறு ஒரு பணக்கார இடத்தில் கட்டிக் கொடுத்து விட்டார்கள். அந்த விரக்தியில் தமிழ் மண்ணையே மிதிக்கக் கூடாது என்ற உறுதியில் ரங்கூனுக்குப் போனார்.

ஐம்பது வருடங்களையும் ரங்கூனில்தான் கழித்தார். இந்த இடைக்காலத்தில் கைலாசம், ஐம்பது லட்சங்களைச் சம்பாதித்தார்! ரங்கூனில் வாழ்ந்த ஒரு தமிழரின் பெண்ணை மணந்து கொண்டார். அவருடைய மகள் வயிற்றுப் பேரன் கண்ணன்கூட ரங்கூனில்தான் பிறந்தான்.

தற்போது இந்தியர்கள் ரங்கூனிலிருப்பதை பர்மா அரசாங்கம் தடுப்பதால், கைலாசம் தமிழ்நாடு திரும்பினார். பல வருடங்களுக்குப்பிறகு, தமிழ்நாடு திரும்பும் கைலாசத்தை அடையாளம் கண்டுகொள்ள, குமுதாவைத் தவிர, தமிழ்நாட்டில் வேறு யாருமே இல்லை. அவருடைய குழந்தைகளும், பேரக் குழந்தைகளும் அடிக்கடி தமிழ் நாட்டுக்கு வந்து போயிருக்கிறார்கள். ஆனால், கைலாசம் ஒரு முறைகூடத் தமிழ் நாட்டுக்கு வருவதற்கு மறுத்து விட்டார்.

தமிழ் நாட்டின்மீது வெறுப்பா? இல்லை, பழைய சம்பவங்கள் அவர் உள்ளத்தில் வைராக்கியத்தை உண்டுபண்ணி விட்டன. இப்போதுகூடத் தமிழ் நாட்டுக்கு வர அவருக்கு மனமில்லைதான். ஆனால், பர்மா அரசாங்கத்தின் கெடுபிடியினால் அவர் தமிழ் மண்ணை மிதித்தார்.

கண்ணனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு குற்றாலத்துக்கு வந்தார்! ஏன்? பழைய ஆசை! குமுதாவைச் சந்தித்த இடங்களை மீண்டும் காணவேண்டும் என்ற ஒரு விசித்திர ஆசை! அதுமட்டுமா? குமுதாவையே ஒரு முறை பார்க்கவேண்டும் என்ற அசட்டு ஆசைகூட அவர் உள்ளத்தில் எழுந்தது!

எத்தனை வருடங்கள்? ஒன்றா இரண்டா! அரை நூற்றாண்டுக்குப் பிறகுகூட இந்த இதயத்தில் விசித்திர ஆவல்கள் கிளம்புகின்றனவே! இப்போது கைலாசத்தின் ஆவலில் களங்கமே கிடையாது. குமுதாவின்மீது ஒரு தெய்விகப் பாசம். அந்தப் பாசத்தின் சக்தியால்தான் கைலாசம், தமிழ் மண்ணை மிதித்தார் என்றுகூடச் சொல்லலாம். இவ்வளவு நிர்மலமான பாசத்தோடு வந்தவருக்குக் குமுதாவைக் காண முடியாமல் போய் விடுமா?

ரங்கூனிலிருக்கும்போது, குமுதாவின் குடும்பத்தைப் பற்றி வருவோர் போவோரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுவார். குமுதா இன்னும் உயிரோடு இருக்கிறாள் என்பது கைலாசத்துக்கு நன்றாகத் தெரியும்.

கண்ணன் துணைக்கு வருவான் என்று நம்பியிருந்தார். அவனோ தேனருவிக்குப் போகும்

திட்டத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டேயிருக்கிறான். அவன் எதற்கு? துணையில்லாமலே ஏன் போகக்கூடாது? கைலாசத்துக்கு வயது எழுபதாகி விட்டாலும், உள்ளத்தில் ஊறிய அடங்காத ஆசையின் வேகத்தினால் அவர் உடலில் தெம்பு ஏற்பட்டது.

கைலாசம் தேனருவிக்குத் தனியாகவே புறப்பட்டு விட்டார்!

சிற்றருவியைத் தாண்டி மலைப்பாதையில் ஏறும் போது, இரண்டாவது திருப்பத்திலிருந்த பாறையைப் பார்த்தார். அவருடைய வயோதிகம் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டது! பாறையை நோக்கிக் குழந்தையைப் போல் வேகமாக ஓடினார். கூர்ந்து பார்த்தார். அதே பெயர்கள் — குமுதா, கைலாசம்!

அந்தக் காலத்தில், அவரும் குமுதாவும் தேனருவிக்குப் போன போது, அந்தப் பாறையில் செதுக்கிய பெயர்கள் அப்படியே மங்காமல் மறையாமல் இருந்தன. அவர்கள் உள்ளத்திலிருந்து பழைய நிகழ்ச்சிகள் எப்படி அழியவில்லையோ, அதே போல் அந்தப் பெயர்களும் அழியவில்லை.

நடக்கும் போது சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே நடந்தார். செண்பகாதேவிக்குத் திரும்பும் பாதையிலிருக்கும் அந்த மாமரம்! அதே மரந்தான்; காலம் மாறினாலும் இடம் மாறவில்லையே. அந்த இடம் மட்டுமா? சூழ்நிலைகள் கூட அப்படியே இருக்கின்றன.

கைலாசத்துக்கு உள்ளத்தில் குறுகுறுப்பு: கைத்தடியால் பக்கத்தில் தொங்கிய மாங்காயைத் தட்டினார். அந்த மாங்காயை வலுவு இழந்திருந்த பற்களால் கடித்தார். அந்தப் புளிப்பு! அதே புளிப்புத்தான்! ஞாபகம் வருகிறதே—

குமுதா, இனிக்கிறது என்று சொல்லிப் புளிக்கும் அந்த மரத்துக் காயைக் கொடுத்தாளே. அப்போது அந்தப் புளிப்பும் இனித்தது. இப்போது அந்த நினைவு இனிக்கிறது....

கைலாசம் தமக்குள்ளேயே சிரித்துக் கொண்டார். மாங்காயைப் பைக்குள் போட்டுக் கொண்டு தடியை ஊன்றியவாறு மலைப் பாதையில் நடந்தார்.

அதோ செண்பகாதேவியின் அருவிப் பாதையில் இருக்கும் மரப்பாலம். அதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டோமா!

அந்தப் பாலத்தைக் கடக்கும்போது, அவருடைய இதயம் படபடத்தது. அந்த இடத்தில்தானே குமுதா விழப் பார்த்தாள்! அவளுக்கு எப்போதும் குறும்புதான். 'மெதுவாகப் போ' என்று சொல்லியும் கேட்காமல் மாங்காயைக் கடித்துக் கொண்டே மரப் பாலத்தில் ஓடினாள். சறுக்கி விட்டது. கையில் இருந்த மாங்காய் தண்ணீரில் விழுந்து ஓடியது. 'என்ன அசட்டுத்தனம். அதை எடுக்கத் தண்ணீரில் இறங்க முனைந்து விட்டாளே! நல்ல வேளை, நான் போய்ப் பிடித்துக் கொண்டேன். இல்லையென்றால்? நினைக்கவே பயமாயிருக்கிறது. அந்த இடம் இதற்கு முன் எத்தனையோ கன்னிகளைப் பலி வாங்கியிருக்கிறதாம். இப்போது கூட அவளுக்கு அந்தக் குறும்பு இருக்கத்தான் செய்யும்....'

எண்ணத்தின் இன்பப் போதையிலேயே செண்பகாதேவி அருவிக்கு வந்து சேர்ந்தார் கைலாசம். அங்கிருந்த குகையில் ஒரு சாமியார் இருந்தாரே. அந்தச் சாமியாரிடந்தான் குமுதாவும், கைலாசமும் சென்று ஆசி பெற்றார்கள். அந்தச் சாமியார் காதலர்கள் இருவர் நெற்றியிலும் வெண்ணீறு பூசினார். ஆனால் ஒன்றுமே பேசவில்லை.

" சுவாமி! எங்கள் காதல் நிறைவேற வேண்டும் என்று ஆசி கூறுங்கள் " என்றார் கைலாசம். சாமியார் இருவரையும் கூர்ந்து பார்த்தார். அவருடைய உதட்டில் அலட்சியப் புன்னகை தோன்றி மறைந்தது. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

" எல்லாம் அவன் அருள் " என்று மணலில் எழுதினார். பிறகு கையை உயர்த்தி அவர்களை ஆசீர்வதித்தார்.

சாமியாரின் முகத்தில் களை இல்லையே! அப்போதே எனக்கும் குமுதாவுக்கும் திருமணம் நடக்காது என்பதை உணர்ந்து

## என்ன வேணும்?



# இந்தியன் பாங்க் லிட்

(ஸ்தாபிதம் : 1907)

தலைமை ஆபீஸ் : வடக்கு பீச் ரோட், சென்னை. 1

உள்ளூர் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், சௌகார்பேட்டை, எழும்பூர், சேத்துப்பட்டு, திருவல்லிக்கேணி, மவுண்டு ரோட், ராயப்பேட்டை, ஆள்வார்பேட்டை, தேனாம்பேட்டை, மைலாப்பூர், காந்திநகர், தியாகராயநகர், கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம், புரசைவாக்கம், வாஷர்மேன்பேட்டை, பெரியமெட் & ராயபுரம்.

தென்னிந்தியா முழுவதிலும், பம்பாய், கல்கத்தா, புது டெல்லி, கொழும்பு, சிங்கப்பூர், F.M.S. முதலிய இடங்களில் கிளை ஆபீஸ்களிருக்கின்றன.

## மூலதனம்

| | | | |
|---|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ... | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 62,02,615 |
| ரிசர்வு மற்றும் இதர நிதிகள் | ... | ரூ. | 79,75,000 |
| டிபாசிட்டுகள் (30-6-56) | ... | ரூ. | 32.08 கோடி |

வெளிநாட்டு பரிவர்த்தனையுள்பட சகலவிதமான பாங்கு அலுவல்களும் கவனிக்கப்படும்.

D. P. பார்த்தசாரதி.
B.A. (Hons.), B.L.
செக்ரடரி.





---

இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறது

# பாமாலிவ் டால்கம் டீ-லக்ஸ்

நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்த டால்கம் பவுடர்! உண்மையிலேயே நேர்த்தியான டால்கின் சகல குணங்களுடன், ஒரு புதிய ரம்மிய வாசனையும் சேர்ந்தது! வெறியூட்டும் 17 சென்டுகளின் அற்புதக்கலவை சேர்ந்த பாமாலிவ் டால்கம் டீ-லக்ஸின் நறுமணம் உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம் அடையச் செய்யும் . . . மணிக்கணக்காக உங்களுக்கு குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!





அன்போடு கத்தரும் சௌகர்யமும்



குழந்தைக்கு இதம் அளிக்க அதை தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத் தடுக்க மேனியெங்கும் அதை உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு இதமும் புத்துணர்ச்சியும் அளிக்க




## பாமாலிவ் டால்கம் டீ-லக்ஸ்

# உங்கள் குழந்தைகளுக்கு ஆரோக்கியம் மற்றும் சக்தி

குழந்தைகள் அதி விரைவில் தங்கள் சக்தியை உபயோகித்துவிடுகின்றனர். பள்ளிக்கூட வேலை, விளையாட்டு ஆக இரண்டும் சேர்ந்து இவர்களின் இளம் தேகக் கூறுபாட்டினின்று ஏராளமான சக்தியைச் செலவழிக்கின்றன. இப்படிச் செலவழிந்த சக்தியை ஈடுகட்டவும், எதிர்கால வளர்ச்சி மற்றும் அபிவிருத்திக்கு வேண்டிய சக்தியைச் சேகரித்து வைக்கவும் 'ஓவல்டின்'னை அவர்களின் போஜன கால பானமாகவும் மற்றும் இரவு உறங்கு முன் - பருகும் - பானமாகவும் செய்யவும்.




'ஓவல்டின்'னில் சத்தமான உணவுகளின் நல்ல தன்மையும், இன்றியமையாத வைடமின்களும் ஒன்று கூடியுள்ளது. இது மிகவும் புஷ்டியளிக்கவல்லது, மற்றும் ஜீர்ணமாகக் கூடியது. அத்துடன் இதர ஆகாரங்களை ஜீரணம் செய்யவும் உதவுகிறது.

எல்லாக் குழந்தைகளும் 'ஓவல்டின்'னின் இனிய மணத்தை விரும்புகின்றனர். உங்கள் ஸ்டோர்களில் இதைக் கேளுங்கள்.

ரேடியோ ஸிலோனில் ஓவல்டின் அமெச்சூர் நிகழ்ச்சி (ஹிந்தி 41.72 மீட்டர்கள்) சனி மாலை 8 to 8-30; (ஆங்கிலம் -9520 கிலோசைக்கிள், 31 மீட்டர்கள்) ஞாயிறு மாலை 8 to 8-30.

பிரதியொரு டின்னும் ஆரோக்கிய மயமான

## ஓ வ ல் டி ன்



விநியோகஸ்தர்கள் :

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

JV · 500

கொண்டாரா? அந்தச் சாமியார் இப்போது இருப்பாரா?

குகையினுள் நுழைந்தார் கைலாசம். அதே சாமியார் உட்கார்ந்திருந்தார்! கைலாசத்தைக் கண்டதும் இலேசாகச் சிரித்தார். முன்னைவிட அதிகமாக மெலிந்திருந்தார். ஆனால் முகத்தில் அதே கம்பீரம்! கைலாசத்தைப் பக்கத்தில் அமரச் செய்தார்.

"சுவாமி! என்னை ஞாபகமிருக்கிறதா?" என்று பக்தியோடு கேட்டார் கைலாசம். உடனே சாமியார் மணலில் "குமுதா" என்று எழுதினார். கைலாசம் திகைத்து நின்று விட்டார்.

"உங்கள் ஆசி பலனளிக்க வில்லையே, சுவாமி!" என்றார் கைலாசம். சொல்லும்போது, அவர் கண்கள் கலங்கின. சாமியார் மணலில் எழுதினார்: "எல்லாம் அவன் செயல், இன்னுமா துயரம்?"

"துயரம் இல்லை. இருந்தாலும் பழைய எண்ணங்கள் தோன்றும்போது ஏதோ ஒரு உணர்ச்சி" என்றார் கைலாசம். பிறகு சாமியாரை வணங்கினார்.

தேனருவிப் பாதையில் நடந்தார் கைலாசம். கடந்த ஐம்பது வருடங்களாக இல்லாத ஒரு புத்துணர்ச்சி இப்போது அவருடைய இதயத்தில் நிரம்பி யிருந்து. அதன் காரணம் அவருக்கே தெரியவில்லை.

தேனருவிப் பாதையின் உள்ள ஒட்டக வளைவில் வந்தபோது நிமிர்ந்து பார்த்தார். அவர் நினைத்தது போலவே அங்கே யிருந்த நாவல் மரத்தின்மீது ஒரு குரங்கு இருந்தது.

அந்தப் பழைய குரங்கா இது? இருக்காது. அது இறந்து போயிருக்கும். அது பெண் குரங்காச்சே. இது ஆண் குரங்கல்லவா?

குரங்கு அவரைப் பார்த்துப் பல்லை இளித்தது....

அன்றும் ஒரு குரங்கு இந்த மரத்திலிருந்து கொண்டு குமுதாவைப் பார்த்துப் பல்லை இளித்ததே.

"குமுதா, உன்னைப் போலிருக்கிறதே அந்தக் குரங்கு. அதனால்தான் பார்த்துச் சிரிக்கிறது" என்றார் கைலாசம்.

"நான் என்ன குரங்குமாதிரியா இருக்கிறேன்?" என்று கூறிக் கோபமாக மறுபக்கம் திரும்பிக் கொண்டாள். அதே சமயத்தில் அந்தக் குரங்கு ஒரு நாவல் பழத்தை அவள் மீது வீசி எறிந்தது. குமுதா சும்மா விடுவாளா? கீழே கிடந்த கல்லை எடுத்து அதன் மீது வீசினாள். மறு விநாடி குரங்கு குமுதாவின் தலைமீது தாவியது. பயத்தினால் அலறினாள். அவள் தலையிலிருந்த பூவைப் பறித்துக் கொண்டு குரங்கு ஓடிவிட்டது. குமுதா கால் தடுமாறிக் கீழே விழுந்து விட்டாள்; புடவை யெல்லாம் அழுக்காகிவிட்டது. அவளுக்குக் கோபமும் அழுகையும் கலந்துவந்தன.

"பொல்லாத குரங்கு! உன்னைப் போலவே வா குறும்புசெய்கிறது!" என்றார் கைலாசம்.

"என்னைக் குரங்கு என்று கேலி செய்கிறீர்? பின் எதற்காக என்னோடு வருகிறீராம்? நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று திரும்பினாள்.

"போயேன்" என்றார் கைலாசம். குமுதா வந்த வழியே திரும்பி நடந்தாள். போக மாட்டாள் என்றுதான் அவர் நினைத்தார். ஆனால் அவள் போக ஆரம்பித்து விட்டாளே!

அடா! அந்தத் திருப்பத்திலும் திரும்பி விட்டாளே. ஐயோ, வழி தெரியாமல் வேறு எங்கேயாவது போய்விட்டால்?.... கைலாசத்துக்குப் பயமாகி விட்டது.

"முரட்டு ஜென்மம்" என்று முணு முணுத்துக் கொண்டே குமுதாவைத் தடுக்கப் புறப்பட்டார். திருப்பத்தில் திரும்பியதும் குமுதாவைக் காணவில்லை. கைலாசத்துக்கு உடல் பதறியது. 'ஐயோ! குமுதாவைக் காணவில்லையே?' என்று துடித்தார்.

"குமுதா..குமுதா!" என்று கத்தினார். பலனில்லை. செய்வதறியாது திகைத்து நின்றார். அப்போது அவர் தலையில் நாவல் பழங்கள் உதிர்ந்தன. பக்கத்திலிருந்த நாவல் மரத்தின் ஒரு கிளையில் குமுதா உட்கார்ந்து கொண்டு மடியிலிருந்த நாவல் பழங்களை அவர்மீது கொட்டிக் கொண்டிருந்தாள்.



"உன்னை எங்கேயெல்லாம் தேடினேன், தெரியுமா? காணுமல் பயந்தே போய் விட்டேன். வேண்டுமென்று தானே மரத்தின் மீது ஏறி ஒளிந்து கொண்டாய்?" என்று கேட்டார் கைலாசம்.

"குரங்கு மரத்தின் மீதில்லாமல் வேறு எங்கே இருக்கும்?"

"சரி, கீழே இறங்கு."

"முடியாது. என்னைக் குரங்கு என்று சொன்னதைத் தவறு என்று நீங்கள் ஒப்புக் கொண்டால்தான்......"

"தவறு, தவறு, தவறு. போதுமா?"

குமுதா கீழே இறங்கினாள்.

கைலாசத்தின் தளர்ந்த உடல் இந்த நினைவால் சிலிர்த்தது. அந்த இடங்களில் நடந்த சம்பவம் ஒன்றுகூட மறக்கவில்லை. அந்தந்த இடத்துக்கு வந்ததும் அங்கங்கு நடந்த சம்

பவங்கள் அப்படியே நினைவில் வந்து சூழ்கின்றனவே! அப்பப்பா! என்ன இனிமை!

தேனருவியை நெருங்கியதும் அதன் சூழ்நிலையை ஒரு முறை சுற்றிப் பார்த்தார். ஆகா! எத்தனை வருடங்கள் கழிந்தால்தான் என்ன? இந்த அருவிக்கரை அப்படியேதானே இருக்கிறது!

கன்றுக்குட்டிப் பாறை ஒன்று உண்டே, அது மறந்து விடுமா? முக்கியமான பாறையாச்சே. ஆ....அதோ அப்படியே இருக்கிறதே! பசுங்கன்றுக்குட்டி போல் தோற்றமளிக்கும் அந்தப் பாறையிலிருந்த கண்கள் போன்ற இரண்டு குழிகள் அப்படியே தத்ரூபமாக இருக்கின்றன.

கன்றுக் குட்டிப் பாறையை நோக்கி நடந்தார் கைலாசம். ஒரு பாறையின்மீது ஏறிப் பிறகு கன்றுக்குட்டிப் பாறையில் ஏறியபோது அந்தப் பாறையின் மறு பக்கத்தில்!.... யார்?....யார் அது?

கைலாசத்துக்குத் தலை சுழன்றது. அங்கே ஒரு வயோதிக ஸ்திரீ உட்கார்ந்திருந்தாள்; ஆனால், கைலாசத்துக்கு அவள் கிழவியாகத் தோன்றவில்லை. எப்படித் தோன்றும்? குமுதாவை என்றும் அந்த உருவத்தில் அவர் பார்த்ததில்லை. அவளுடைய பதினெட்டாவது வயதில் எப்படி யிருந்தாளோ, அந்த உருவமல்லவா கைலாசத்தின் இதயத்தில் பதிந்திருந்தது!



என்ன விந்தை! இப்படியும் நிகழுமா? அந்தக் கிழவியும் இவரைக் கூர்ந்து பார்த்தாள். இருவர் உதடுகளும் அதிசயத்தால் விரிந்தன. கண்களில் ஆவல்! உள்ளத்தில் நிறைவு! உடலில் நடுக்கம்!

இதென்ன விசித்திர உணர்ச்சி! இந்தத் தள்ளாத உடலால் தாங்க முடியவில்லையே! ஐம்பது வருடங்களாக உள்ளத்தில் ஒளிந்து கிடந்த உணர்வெல்லாம் திடீரென்று தலை தூக்கி ஆர்ப்பரித்தன.

''குமுதா!'' கைலாசத்தின் வாய் முணுமுணுத்தது.

''அண்ணா!'' என்றாள் குமுதா. அந்தச் சொல்லின் சக்தியிலே கைலாசம் நெகிழ்ந்தார். உள்ளத்தில் பாசம் சுடர்விட்டது.

வயது முதிர்ந்த இருவர் இதயத்திலும் உணர்ச்சிப் பின்னல்கள். அங்கங்கே வெடித்துக் கீறல் விழுந்த இதயம் ஒட்டி ஒன்று சேர்ந்துவிட்டது. காலத்தின் போக்கிலே ஞாபகத்திலிருந்த மங்கியிருந்த உருவம் திரும்பவும் மனத்தில் பதிந்து கொண்டது.

அந்தச் சந்திப்பில்தான் என்ன உணர்ச்சி! அந்த இனிமையில், சூழ்நிலைகூட நிலைமறந்து சலனமற்றிருந்தது.

ஒருவரை ஒருவர் நன்றாகப் பார்த்தார்கள். அடேயப்பா! எத்தனை மாற்றம்! உள்ளத்தில் கூட மாற்றங்கள்தானே! ஐம்பது வருடங்களுக்கு முன்னிருந்த அந்த இருவரின் உணர்ச்சிக்கும் இன்றைய உணர்ச்சிக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது!

இன்றைய உணர்ச்சியில் வெறியில்லை. உள்ளத்தில் சலனமில்லை. பழைய போதை இல்லை. அறிவில் தெளிவு இருந்தது. பரபரப்பில்லை, நிதானம் இருந்தது. பழைய காதல்கூட இல்லை. பாசம் பரவியிருந்தது.

குமுதாவின் பக்கத்தில் உட்கார்ந்தார் கைலாசம்.

''நீ எப்படி இங்கு வந்தாய்?'' என்று வியப்புடன் கேட்டார் கைலாசம்.

''என்னுடைய பேத்தி ராதாவுடன் வந்தேன். அவளும் அவளுடன் கல்லூரியில் படித்த ஒரு நண்பனும் அருவிப் பக்கம் போயிருக்கிறார்கள்'' என்றாள் குமுதா.

என்னவெல்லாமோ பேசினார்கள். கடந்து போன ஐம்பது வருட வாழ்க்கையைக் கதை கதையாகப் பேசினார்கள்.

கைலாசம் தம் சட்டைப் பையிலிருந்து மாங்காயை எடுத்து நீட்டினார். குமுதா சிரித்துக் கொண்டே வாங்கினாள்.

''இந்த மாங்காய் புளிக்குமே?'' என்றார்.

''இல்லை. எப்போதுமே இனிக்கத்தான் செய்யும்'' என்றாள்.

''பாட்டி!'' என்ற குரலைக் கேட்டுத் திரும்பினர் இருவரும். ராதாவுடன் கண்ணன் நின்று கொண்டிருந்தான்! கைலாசத்தைக் கண்டதும் அயர்ந்துவிட்டான்.

''தாத்தா நீங்களா?'' அவன் வாய் குழறிவிட்டது.

''டேய்! தேனருவிக்குத் துணை வராமல் அலைக்கழித்ததெல்லாம் இதற்குத்தானா?'' என்றார் கைலாசம் சிரித்துக் கொண்டே.

''இவன் உங்கள் பேரனா? நாம் எல்லோருமே தேனருவிக்கு வந்து விட்டோமே!'' என்றாள் குமுதாப் பாட்டி.

''அதுமட்டுமா? கன்றுக்குட்டிப் பாறையிலும் சந்தித்து விட்டோமே?'' என்றார் கைலாசம். ராதாவுக்கும் கண்ணனுக்கும் ஒன்றும் புரியவில்லை.

நால்வரும் தேனருவியை விட்டுக் கீழே இறங்கியபோது செண்பகாதேவியில் அந்தச் சாமியாரைச் சந்தித்தார்கள்.

''சுவாமி, கண்ணனையும், ராதாவையும் ஆசீர்வதிக்க வேண்டும்'' என்றார் கைலாசம். சாமியார் ஆசீர்வதித்தார்.

''மனம்போல் வாழுங்கள்'' என்று மனமிக எழுதினர்.

குமுதாவும், கைலாசமும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். தங்கள் காலத்தில் நிறைவேறாதது தங்கள் சந்ததிகளின் காலத்தில் நிறைவேறுவதைக் காண யாருக்குத்தான் மகிழ்ச்சியிராது?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

இந்தியாவுக்குப் பணியாற்றும்
இறக்கைகள்

## நாள்தோறும் உச்சிவேளையில்

## 50 ஐ. ஏ. ஸி. விமானங்கள் பறந்து கொண்டிருக்கும்!

இந்தியாவெங்கும் பறக்கும் இந்த விமானங்கள் வியாபாரிகள், டூரிஸ்டுகள், குடும்பமாகப் பிரயாணம் செய்பவர்கள் மற்றும் சரக்குகளையும் ஏற்றிச் செல்லுகின்றன. இடத்திற்கு இடம் மிக துரிதமாயும் சுகமாயும் செல்ல ஜனங்களுக்கு உதவியாயிருப்பதுடன், இந்த விமானங்கள் இந்திய மக்களை நாளுக்கு நாள் நெருங்கி உறவாட உதவவும் செய்கின்றன.

இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பரேஷன் விமானங்கள் அன்றாடம் 132 ஸர்வீஸ்கள் மூலம், வருஷந்தோறும் 2 கோடி மைல்களுக்குமேல் பறக்கின்றன. மற்றும் துரிதமானதும், மிகவும் விரிவானதுமான போக்குவரத்திற்கான நம் நாட்டின் அதிகரித்துக் கொண்டு வரும் தேவையைப் பூர்த்தி செய்ய வருஷத்திற்கு வருஷம் இதன் விமானங்கள் அதிகரிக்கப் படுகின்றன.




# இந்தியன் ஏர்லைன்ஸ்

## கார்ப்பரேஷன்

5 & 6, மவுண்ட் ரோடு, சென்னை - போன்: 86433 (4 லைன்கள்)

IAC. 3907

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon